ஓம்

# மாந்திரீக அனுபவங்கள்

## முத்துபாண்டி வைத்தியர்

கடந்த ஏழு தலைமுறைகளாக பாதுகாக்கப்பட்டு அற்புத மாந்திரீக கலையின் நன்மை தீமைகளை எங்கள் அனுபவத்தில் கண்டறிந்த விஷயங்களை மட்டும் பகிர்ந்துள்ளேன் ,இந்த நூல் மணி மந்திர ஔஷதம் பற்றி தேடும் ஆராய்ச்சியாளர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் .

மாந்திரீகர்
முத்துபாண்டி வைத்தியர்
ஓம்

## குருவணக்கம்

குரு பிரம்மா குரு விஷ்ணு
குரு தேவோ மகேஸ்வரா
குரு சாக்ஷாத் பரப்பிரம்மா
தஸ்மை ஸ்ரீ குருவே நமஹ

என் உள்ளத்தில் நீங்காமல் என்றென்றும் என்னுள் இருந்து இந்த வையகத்தை வளம் வந்து கொண்டிருக்கும் ஸ்ரீ மாசான சுடலைமாட சுவாமியின் திருவருளால் நடந்த அனுபவத்தை விளக்குகின்றேன் .

**அன்புடையீர் ,**

இந்த அனுபவங்கள் முத்து பாண்டி வைத்தியர் அவருடைய தகப்பனார் சுப்பையா நாடார் பாட்டனார் ஈனகுலமுத்து நாடார் அனுபவங்கள் அறிவுரைகள் கதைகள் நிறைய கூறியிருக்கிறார் .அதை எல்லாம் உங்களிடம் பகிர்ந்தால் ஆன்மிக அன்பர்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்று எண்ணுகிறேன்

மாந்திரீகம் என்பது ஒரு அறிய கலை ஆனால் அதை சரி வர நல்ல குருமார்களின் அனுபவ வார்த்தைகளின் படி நடந்தேற வில்லை என்றால் நமக்கே அது வினையாக மாறிவிடும் .நாம் மற்றவர்களின் துன்பத்தை நீக்க போய் நாம் துன்பத்தில் அகப்பட்டு விடுவோம் .ஆகையால் இந்த கலையை கற்பதற்கு இது போன்ற அனுபவ நூல்கள் தேவை .

*திணை விதைத்தவன் திணை அறுப்பான்*
*வினை விதைத்தவன் வினை அறுப்பான்*

ஒரு மாந்திரீகன் எப்போதும் மனதில் வைதுகொள்ளவேண்டிய பொன்மொழி இதுதான் எந்த ஒரு காரியத்தை எடுத்து கொள்வதற்கு முன்பு நன்கு யோசித்து கடவுள் உத்தரவின் பேரில் ஒவ்வொரு காரியமும் செய்ய வேண்டும் . நிறைய மாந்திரீகர்கள் அக்காலத்தில் ஒரு சில ஜால வித்தை மட்டுமே படித்து வைத்து விட்டு நிறைய மக்களை ஏமாற்றியிருக்கிறார்கள் ஆனால் இவர்களுக்கு மாந்திரீகத்தை ஒன்றுமே தெரியாது .

ஒருவருக்கு பேய் பிடித்திருக்கிறது என்று வைத்து கொள்ளுங்கள் அந்த நபரால் இந்த பேயை விரட்ட முடியாது .ஒரு சாதாரண பேயை விரட்டும் சக்தி கூட இந்த ஜால வித்தை காரர்களுக்கு இல்லாமல் போகின்றது .

அதனால் தான் தத்தா அடிக்கடி கூறுவார் ஜால வித்தையெல்லாம் நமக்கு வேண்டாம் அது பயனற்றது என்று .

**ஜால வித்தைகள் :**

ஒருவர் வந்து வீட்டில் அதிகம் பிரச்சனைகள் வந்து கொண்டே இருக்கிறது என்று இந்த மந்திரவாதியிடம் கூறியிருப்பார் .இவர் என்ன செய்வார்.அந்த வீட்டிற்கு சென்று பார்க்க போவார் .வீட்டை பார்த்து விட்டு கூறுவார் .இந்த வீட்டில் செய்வினை வைக்கப்பட்டுள்ளது .அதை எடுக்க வேண்டும் அப்போது தான் உங்கள் வீட்டில் உள்ள பிரச்சனைகள் எல்லாம் நீங்கும் என்று கூறுவார்

அவர்களுக்கு பிரச்சனைகள் தீர்ந்தால் போதும் என்று எவ்வளவு பணம் ஆகும் என்று கேட்ப்பார் அவரும் பெரிய யாக பூஜை போட வேண்டியிருக்கிறது மற்றும் மயானத்தில் போய் பூஜை போட வேண்டும் அதனால் 20000 ரூபாய் ஆகும் என்று கூறுவார் .அவர்களும் பயந்த முகத்துடனே சரி உடனே செய்து விடுங்கள் என்று பணம் கொடுப்பார்கள் .

அவர் பூஜைக்கான பொருட்கள் எல்லாம் வாங்கி விட்டு யாகத்திற்கான மர சுள்ளிகளையும் கொண்டு வருவார் அந்த கம்பில் ஒன்றில் ஓட்டை போட்டு அதனுள் இரண்டு யந்திரத் தகடுகளை எழுதி உருட்டி வைத்து விடுவார்

யாகம் செய்யும் பொது வீட்டுகாரர் இடமே இந்த கம்புகளை யாகத்தில் உங்கள் கைகளால் போடுங்கள் என்று கொடுப்பார் .அவர்களும் போடுவார்கள் அந்த கம்பில் தான் இவர்கள் வைத்த யந்திர தகடு இருக்கிறது என்று வீட்டுகாரர்களுக்கு தெரியாது .கடைசியில் யாகம் முடிந்தது அந்த யாக குண்டத்தில் தேடித் பார்ப்பார்கள் இரண்டு தகடுகள் வெளிவரும் .இதை வீட்டு காரரை அழைத்து இதோ பூஜை செய்து உனக்கு வைத்த செய்வினையை எடுத்து விட்டேன் .இந்த யந்திர தகடுகளை ஆற்றிலோ அல்லது கடலிலோ கொண்டு சேர்க்க வேண்டும் .என்று கூறி தகட்டை கொண்டு செல்வார்கள் .இப்படித்தான் ஜால வித்தைகளை செய்து மக்களை ஏமாற்றுகிறார்கள் .

ஆகவே ஏமாற வேண்டாம் முறையாக அறிந்தவர்களிடம் கேட்டு தெரிந்து கொள்ளுங்கள் நாங்கள் எங்கள் பகுதியில் உள்ள அனைத்து ஜோதிடர்களுக்கும் நாங்கள்தான் யந்திரத்தகடுகள் வரைந்து உருவேற்றி கொடுக்கிறோம் அது சரியாக வேலை செய்கிறது நாங்கள் அதிக மாக தனி நபர்களை பார்ப்பதை விட ஜோதிடர்கள் தான் எங்களிடம் அதிகமானோர் பயன் அடைகின்றனர் அவர்களும் நல்ல பெயர் அடைகின்றனர்

**கருங்குட்டி உபாசனை :**

இந்த கருங்குட்டி உபாசனை வைத்திருப்பவர்கள் அவர்கள் நினைத்த காரியத்தை எளிதில் சாதித்து விடலாம் .அவர்களுக்கு எதிரியே இருக்க மாட்டார்கள் .எதிரியை இல்லாமல் செய்து விடும் .

முத்து பாண்டி வைத்தியருடைய தகப்பனார் இந்த கருங்குட்டி உபாசி கொஞ்ச நாட்கள் வைத்திருந்தார் அதற்கு பிறகு இந்த உபாசனையால் தனது தேவைக்காக ஒரு சில காரியத்தை செய்து விட்டு அதன் எதிர் விளைவுகள் நமது குடும்பத்தை தாக்கும் இந்த குட்டியை ஏவல் செய்து விட்டால் அதில் ஒரு சில ஏவல் மறுபடியும் திருப்பி நம்மை வந்து தாக்கும் ,நாம் பலமானவர்களாக இருப்பதனால் நமது குழந்தை குடும்பம் என்று அவர்களுக்கு பாதிப்பு ஏற்படுத்தும் அதனால் அவர் இளமைக்காலத்தில் பயன் படுத்தி இருக்கிறார் .ஒரு சில பாதிப்புகளுக்கு பிறகு விட்டுவிட்டார் .

**கருங்குட்டி என்னவெல்லாம் செய்யும் :**

இந்த கருங்குட்டி வைத்து ஒரு பொருளை நாம் கையால் தொட்டு விட்டு வந்தால் போதும் அந்த பொருள் அன்று இரவே நம் வீட்டில் இருக்கும் அந்த காலத்தில் களவு செய்வதற்காக பயன்படுத்தியிருக்கிறார்கள் .

அப்போது நெல் அறுவடை செய்து களத்திலே போட்டிருப்பார்கள் அந்த நெல்லில் ஒரு பிடியளவு கையில் எடுத்து வந்தால் இந்த குட்ட்யானது ஒரு மூடை நெல் கொண்டு வந்து கொட்டி விடும் .

இந்த கருங்குட்டியை அந்த காலத்தில் கேரளத்தில் அதிகமானோர் பயன் படுத்தி வந்ததாகவும் அங்கிருந்துதான் வாங்கியதாகவும் கூறினார்கள் .இப்போதும் கூட ஒரு சில இடங்களில் பயன் படுத்தப்பட்டு வருகிறது .தமிழகத்திலும் மலைஜாதியினர் பயன்படுத்துகின்றனர் .இதைவைத்து ஜால வித்தைகள் அனைத்தும் ஆடலாம் .வசியம் பிரிவு அழைப்பு வித்தைகளையும் செய்யலாம் .

கேரளத்தில் இந்த குட்டியை வைத்து உபாசனை செய்பவர்கள் ஊர்ப்புறங்களில் வசிப்பதில்லை காடுகளில்தான் வாழ்கிறார்கள். இதற்கான மந்திர யந்திர பிரயோகங்கள் கூட எட்டில் எழுதப்பட்டிருந்தன. மாந்திரீகத்தில் இந்த கருங்குட்டி நினைத்ததை சாதிக்க பயன்படுகிறது . இதனால் ஜென்ம வினை அதிகரிக்கிறது. இந்த கருங்குட்டி உபாசனையை பயன்படுத்தினால் நிகழ்காலத்தில் நாம் நினைத்த வண்ணம் வளமோடு வாழலாம் .

**கைக்கருப்பு என்ற குட்டி:**

சூதாட்டத்தில் தினம் பல கோடிகணக்கில் சூதில் பணம் கிடைக்கின்றன நாம் அண்டை நாடுகள்ளன மலேசியா,சிங்கப்பூர்,சீனாவில் சூதடத்தில் தினம் பல கோடிகணக்கில் சூதில் பணம் கிடைக்கின்றன.

இந்த சூதில் சீனர்கள் பலகோடி பணம் தினம் அடிகின்றனர் . இதற்கு முக்கியமான காரணம் அவரிடத்தில் உள்ள மந்திரக சக்திதான் முக்கிய காரணம். இந்த சக்தி என்னவென்று தெரியுமா. நம்முடைய சாஸ்திரத்தில் மறைக்கபட்ட அதிபயங்கர தேவரகசியம் கைகருப்பு என்னும் அதிக சக்தி கொண்ட மாந்திரீக சக்தி தான் .

**கைக்கருப்பு என்றால் என்ன**

பல உயிரினங்கள் கரு சக்தி கொண்டு மந்திர யந்திர மூலிகைகள் பிரயோகம் மூலமாக மாந்திரீக குருக்கள் தங்கள் தவசக்தியை பயன்படுத்தி ஒரு அதிசய உயர்ந்தசக்தியை படைப்பார்கள். இந்த மாந்திரீக மகா உயரின சக்தி கைக்கருப்பு ஆகும். இந்த கைக்கருப்பு மிக வலிமையான பலம் படைத்தது. கைகருப்பு ஒரு பொருளை ஒரு இடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு பொருளை கொண்டு செல்லும்.பூ ,பழம் குங்குமம். ஆகியவையும் தரும். சூதில் நாம் நினைத்த ஒரு இடத்தில் பகடையை வைக்கும் . அனைத்து செயல்கள் செய்யும்

**பலவகையான கைக்கருப்பு உள்ளது**

*பொளிவாரி கருப்பு*

*தவாசு கருப்பு*

*தானிய கருப்பு*

*பஞ்சமல கருப்பு*

*குட்டி கருப்பு*

*மலக் கருப்பு*

இந்த வகையான கைக்கருப்பு உணவு முறைகள் படையல் முறைகள் வேறுபடும் சில கைக்கருப்பு அசைவம், சைவம் என இருவகைப்படும் சைவகருப்பு அவுல் ,பொறி ,கடலை,பன்னீர் முதலியவைகள் அசைவகைக்கருப்பு கோழி இறைச்சி, மாடு இறைச்சி, பன்றிகள் இறைச்சி போன்ற உணவு முறைகள்.

**குறளி வித்தை :**

குறளி என்று நீங்கள் கேள்வி பட்டிருப்பீர்கள் .அது உண்மையா பொய்யா என்ற சந்தேகம் கூட வந்திருக்கும் .இது போன்ற குறளி பொம்மைகள் அக்காலத்தில் பயன் படுத்தி வந்ததாகவும் அது பல தலைமுறைகளாக அவர்களிடமே இருக்கும் என்றும் நாம் சொல்லும் வேலையை செய்யும் என்றும் கூறுவார்கள் .

**குறளி பொம்மை எப்படி தயாரிக்கிறார்கள் :**

தவறான உடலுறவு மூலமாக சில குழந்தை பிறந்ததும் அதை சிலர் ஆஸ்பத்திரியிலேயே கொடுத்து எதாவது செய்யுமாறு சொல்லிவிட்டு பணமும் கொடுத்து சென்று விடுவார்கள் .இவர்கள் எதாவது மந்திரவாதியிடம் இந்தகுழந்தையை கொடுத்து விடுவார்கள் .

இப்படி கிடைத்த குழந்தைக்கு ஒன்றுமே கொடுக்காமல் போட்டால் சில தினங்களில் இறந்து விடும் அப்படி இறந்த பிறகு அந்த உடலை வெயிலில் காய வைத்து நாற்றம் எல்லாம் மாறிய பின் அதையெடுத்து அந்த உடலுக்கு சேலை கட்டி ஒரு சிறுகுழந்தையை போலவே அழகூட்டி யந்திரங்கள் அந்த உடலுக்குள் வைத்து குரளிக்குரிய வசிய மந்திர உருவேற்றிய பின் அது மறுபடியும் குறளி வந்து அமர்ந்து கொள்ளும் .இதுதான் குறளி பொம்மை செய்யும் முறை . இந்த மந்திர யந்திர பிரயோகம் நம்மிடம் இருப்பதாக தத்தா கூறினார் .அனால் அது செய்வது அரிது ஆனால் முன் ஜென்மங்களில் இப்படிப்பட்ட அனுபவங்கள் இருந்தால் வருவதற்கு வாய்ப்புகள் உள்ளதாக கூறினார் .

இந்த குறளி என்ற பெயரில் பலர் ஏமாற்றி கொண்டிருப்பதாக கூறுகிறார்கள் கவனம் .

**மோஹினி**

பெரும்பாலானோர் தான் விரும்பிய பெண்ணை மனைவியாக அடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும் .அது ஒரு சில காரணங்களால் தடைபட்டு விடும் அந்த சமயத்தில் சில மந்திர வாதியிடம் சென்று கேட்டால் எல்லாம் வசியம் செய்து விடலாம் என்று கூறி பணம் பறிப்பார்கள் .

ஆனால் அது நடக்குமா என்பது கேள்விக்குறியாகின்றது ஏனென்றால் பெண் வசியம் மற்றும் பெண்ணையோ ஆணையோ ஆகர்சனம் செய்வதற்கும் ஒரு தேவதையின் அருள் இருந்தால் மட்டுமே இந்த சாதனைகளை செய்ய முடியும்

அது எந்த தேவதை என்றால் அது தான் மோஹினி மோகினியின் அருள் கடாக்ஷம் மட்டும் கிடைத்து விட்டால் எளிதில் எந்த ஒரு பெண்ணையோ ஆணையோ வசப்படுத்தி விடலாம் எங்கு அழைத்து வர வேண்டும் என்று கூறினாலும் அழைத்து வந்து விடும் .

இந்த முறையைத்தான் அக்காலந் தொட்டே பயன் படுத்தி வந்திருக்கின்றனர் இல்லைஎன்றால் யந்திரத்தை வைத்து சாதிப்பது என்பது நூற்றுக்கு ஐம்பது சதவிகிதம் வேண்டுமானால் சாத்தியம் ஆகும் .அது அந்த சாதகனுடைய மனோ சக்தியை பொறுத்தது .

மாந்திரிகத்தில் மை வித்தைகள் ஒரு சில ஜால வித்தைகள் ஆடுவதற்கும் இந்த மோஹினி யானது பயன் படும் .இந்த முறையை திரு முத்துபாண்டி வைத்தியரிடம் கேட்டுதான் நான் தெரிந்து கொண்டேன் இது அவருக்கு கைகண்ட முறை .இந்த மாதிரி ரகசியங்களை யாரும் வெளியிட மாட்டார்கள்.

**இந்த மோஹினி தேவதையால் என்னவெல்லாம் செய்யலாம் என்றால்**

*ஆண் பெண் வசியம்*

*ஆண் பெண் பிரிவு*

*ஆண் பெண் அழைப்பு வித்தை*

*கனவில் விந்து வெளியாவதை சரி செய்யலாம்*

*பேய் பிசாசு பிரச்சனைகளை தீர்க்கலாம்*

*இன்னும் அநேக காரியங்கள் செய்யலாம் .*

**கணவன் மனைவி ஒற்றுமையாய் வாழ மோகினி மந்திர பிரயோகம் ....**

கணவன் மனைவி ,சண்டை சச்சரவுகள் நீங்க மோகினி மந்திர உபாசனை பெரிதும் துணை புரியும் .காதல் கை கூட ,நினைத்த வரன் அமைய ,நினைத்த பெண்ணை திருமணம் செய்ய இந்த மோகினி மந்திரம் உதவி செய்யும் .

***மோகினி வசிய யந்திரம்***




***மூலமந்திரம் :***

ஓம் சிவயநம கிரியும் விரியும்
ஜெகத் மோகனாங்கி வசி வங் சுவாகா

***பூஜை முறை :***

மேற்கண்ட மோகினி வசிய யந்திரத்தை அமாவாசை நாளன்று யந்திரம் எழுதி பூஜை துவங்க வேண்டும் .மேற்கண்ட மந்திரத்தை நாளொன்றுக்கு 1008 உரு வீதம் 15 தினங்கள் பூஜை செய்து பௌர்ணமி அன்று முடியும் வகையில் பூஜை செய்ய வேண்டும் .

**கணவன் மனைவி வசிய திலகம் :**

கணவனை வசியம் செய்ய பெண்களுக்கு மேற்கண்ட மந்திரத்தை ஒரு தம்பாளத்தட்டில் மஞ்சள் அல்லது குங்குமம் பரப்பி மேற்கண்ட யந்திரத்தை ஊதுவத்தியால் எழுத வேண்டும் .எழுதி அதற்கு மூலமந்திரத்தை 1008 உருக்கள் ஜெபித்து அந்த மஞ்சள் அல்லது குங்குமம் நெற்றியில் வைத்தால் வசியமாவார்கள் .

**மோகினி வசியம் ,**வேறுமுறை

ஒரு சில குடும்பங்களில் கணவன் மனைவி ஒருவருக்கொருவர் கருத்து வேறுபாடு கொண்டிருப்பார்கள் ,இதனால் குடும்ப வாழ்க்கை எதோ நரகத்தில் வாழ்வது போலவே இருக்கும் .இதற்கு மறைமுகமாக பல வழிகளில் சரி செய்யலாம் கிராம்பு பொதுவாகவே வைத்தியத்திலும் உணவுகளிலும் முக்கிய பங்கு வகுக்கிறது, இந்த கிராம்பை பயன் படுத்தி வசிய வித்தைகள் செய்ய முடியும் *உப்பு , இனிப்பு பொருட்கள் , கிராம்பு*
இந்த பொருட்களில் மந்திரங்கள் ஜெபித்து கொடுத்தால் உடனடியாக நிறைய மாற்றங்களை காண முடியும் இந்த பொருட்களை வாங்கி வீட்டில் இருந்து ஜெபிக்க வேண்டிய மந்திரம்

***இதற்கான மந்திரம் :***

**ஓம் நமோ பகவதே சர்வலோக மோகய மோகய சுவாக .**
வீட்டில் உள்ளவர்கள் மது மாமிசம் உண்ணாமல் மந்திரம் ஜெபிக்க வேண்டும் 1000 உருக்கள் ஏற்றலாம் .

***தாந்திரீகர்கள் பயன்படுத்தி மந்திரிக்க வேண்டிய மந்திரம் :***
**ஓம் மோகினி தேவி வஜ்ரேஸ்வரி காம் மாலினி மம பிரியந்தம் ஆகர்சய ஆகர்சய சுவாகா .**

இந்த மந்திரம் ஜெபிக்கும் பொது நெய்விளக்கு ஏற்றி வைத்து வடக்கு முகமாக அமர்ந்து கொண்டு ஜெபிக்க வேண்டும் கையில் நீலக்கல் ஜெப மாலை அல்லது நீல நிற ஸ்படிக மாலை பயன்படுத்தி 5000 உருக்கள் ஜெபித்தால் நல்ல பலன் உடனடியாக கிடைக்கும் ,காதல் கைகூடும் கணவன் மனைவிக்கும் நல்ல இன்பமான வாழ்க்கை கிடைக்கும் .

**மோகினி வசியம்** வேறுமுறை

ஓர் சந்தன தடியில் ரூபம் செய்து பாலினால் அபிஸேகம் செய்து சிகப்பு பட்டுகட்டி கிழக்கு திசை நோக்கி அமர்ந்து தாம்பூலம் தேங்காய் உடைத்து பன்னீர் தெளித்து பூஜை செய்து கீழ்காணும் மந்திரம் 1008 உரு கொடுக்கவும்..

***மந்திரம்***

**ஓம் மாயா மோகினி ஓம் ஓங்கார மோகினி உமாபுத்திரி ஆனந்த மோகினி மகா பைரவி மலையாள கன்னி மந்திர ரட்சினி நான் சொல்வதை கேட்டு எனக்கு வசமானாய ஸ்வாகா.**

**குறி சொல்ல [அருள்வாக்கு ]**

குறி சொல்வதென்பது ஒருவர் நம்மிடம் அவருடைய பிரச்சனைகளை பற்றி கேட்க வந்திருக்கிறார்கள் என்றால் அவர் இந்த காரியத்தைப்பற்றி கேட்கத்தான் வந்திருக்கிறார் என்று உறுதியாக கூற முடியும்

இப்போது குறி சொல்வது என்பது அதிக மாக ஜோதிடர்கள் உபயோகப்படுத்தி வருகிறார்கள் ஜோதிடர்களுக்கு ஓர்ளவு குறி சொல்கிற பக்குவம் இருந்தால் மட்டுமே எதிரில் இருப்பவர் இன்ன காரியத்திற்காக வந்திருக்கிறார் என்று உறுதியாக கூற முடியும் .குறி சொல்வதற்கு நிறைய உபாசனைகள் இருக்கின்றன .எல்லா உபாசனைகளும் கடந்த காலம் நிகழ்காலம் சொல்லும் ஆனால் எதிர்காலம் பற்றி உறுதியாக கூற முடியும் எதிர் காலம் பற்றி உறுதியாக சொல்ல வேண்டுமானால் அவர்களிடம் அனுமன் உபாசி இருந்தால் மட்டுமே உறுதியாக கூற முடியும் .

எனது தாத்தா முத்துபாண்டி வைத்தியர் அவர்கள் அனுமன் உபாசனையால் தன்னை தேடி வருகிறவர்களுக்கு ஒளிவு மறைவு இல்லாமல் நீ இந்த காரியத்திற்காக என்னை தேடி வந்திருக்கிறாய் .இன்னும் இத்தனை நாட்களுக்குள் உன்னுடைய பிரச்சனைகள் எல்லாம் தீரும் என்று உறுதியாக கூறுவார் .அவரும் பல குறி சொல்லும் முறைகளை கையாண்ட பிறகு அனுமன் உபாசைதான் குறி சொல்வதற்கும் மற்ற எல்லா காரியங்களுக்கும் சிறந்து என்று கூறுகிறார்கள்.இப்படித்தான் அக்காலத்தில் உள்ளவர்கள் எல்லோரும் முன் கூட்டியே நடக்க விருப்பத்தை தெரிந்து கொண்டு அதன் படி செயல் படுவார்கள் .

**குறி சொல்வது என்பது**

*மற்றவர்கள் மனதில் இருப்பதை எளிதில் கண்டறிய முடியும்*

*யார் யாரெல்லாம் எதை விரும்புகிறார்கள் என்பது தெரிய வரும்*

*நாளை என்ன நடக்கும் என்பதை முன்கூட்டியே யூகித்தி விட முடியும்*

*அருள்வாக்கு சொல்வதற்கு பயன் படும்*

*ஜோதிடம் சொல்ல பயன் படும்*

*நாடி ஜோதிடம் சொல்ல பயன் படும்*

*பிரசன்னம் பார்க்க பயன்படும்*

பொதுவாகவே மாந்திரீகத்தில் பல தேவதைகளின் உபாசனை முறைகள் கொடுக்கிறார்கள் .ஒவ்வொரு வேலைகளுக்கும் ஒவ்வொரு தேவதைகளை சித்தி செய்து வைத்து நாம் காரியங்கள் சாதிக்க வேண்டியிருக்கிறது .அஷ்ட கர்மங்களுக்கும் ஒவ்வொரு யந்திரம் மந்திரம் அப்படி இருக்கிறது .

திரு முத்துபாண்டி வைத்தியருடைய தாத்தாவிற்கு எழுத படிக்க தெரியாது ஆனால் அவரும் ஒரு பெரிய மாந்திரிகராகத்தான் இருந்தார் .அவருக்கு கனவில் ஒரு தேவதை வந்து இரவு முழுவதும் நாம் இருவர் நண்பர்கள் பேசிக்கொண்டிருப்பதை போலவே அவரிடம் அந்த தேவதை பேசிக்கொண்டே இருக்கும் இவர் கேள்வி கேட்டால் அதற்கு பதில் சொல்லும் .இவரும் பெரிய சித்த வைத்தியர் ஜோதிடர் மாந்திரீகர்தான் .ஆக மாந்திரீகம் பயில்வதற்கு கல்வி தேவையில்லை கேள்வி ஞானமே போதுமானது .

**குறி சொல்ல மையும் கர்ண எட்சணி தியானம்**

***மை செய்யும் முறை :***

சிறிய நங்கை

பெரியநங்கை

அழுகண்ணி ஆனைவணங்கி

ஆடை ஒட்டி

இந்த மூலிகைகளுக்கு முறையாக சாப நிவர்த்தி செய்து காப்புக்கட்டி பிடுங்கி வந்து அதன்பின்

சந்தனம்

ஆந்தை பித்து

வெள்ளை கெவுளி பித்தும்

இவையெல்லாம் ஒன்றாய் சேர்த்து காரம்பசுவின் பால் விட்டரைத்து குன்றி மணி அளவிற்கு ஒவ்வொரு குளிகை செய்து நிழலில் உலர்த்தி செப்பு சிமிளிற்குள் வைத்து .கர்ண எட்சணி தியானம் ஓத நடந்த நடக்கிற நிகழ்வுகள் அனைத்தயும் மற்றவர்கள் ஆச்சரியப்படும் படி தெளிவாக கூற முடியும்

மேற்குறிப்பிட்ட குளிகையை தண்ணீரில் நனைத்து அதை நெற்றியில் திலகமிட்டு குறிசொல்ல வேண்டும்

**கர்ண எட்சணி தியானம் :**

அரி ஓம் அங் மங் வங் கர்ண எட்சணி வா வா

வந்து குரிசொல்லம்மா வந்து என் முன் நில் .

இதற்கான யந்திரம் எழுதி சித்தி செய்து கொண்டால் அனைத்து குறிகளும் வெட்ட வெளிச்சமாக பளிச்சென்று கூற முடியும்,.

**வசிய ஜால வித்தை**

மலை பிரதேசத்திற்கு சென்றால் தேவாங்கு கிடைக்கும் அங்கு சென்று ஒரு ஆண் தேவாங்கும் பெண் தேவாங்கும் பிடித்து வந்து 40 நாட்கள் வளர்த்து 40 நாளாகிய அன்று ஒவ்வொன்றையும் ஒவ்வொரு புதிய பாண்டத்திலிட்டு ஓர் ஆற்றங்கரைக்கு சென்று இரண்டு பக்கங்களிலும் தனித்தனியாக காளி தியானம் 108 செய்து தேவாங்கை உயிருடன் தனித்தனியாக பாண்டத்தில் வைத்து புதைத்து வைக்க வேண்டும் .

பின்பு 40 நாட்கள் கழித்து சென்று ஆண் தேவாங்கு புதைத்து வைத்த இடத்தை தோண்டி பார்த்தால் பெண் தேவாங்கும் அந்த குழியில் உள்ள பாண்டத்தில் வந்து விடும் இப்படி அகப்பட்ட தேவாங்கை எடுத்து காளிக்கு பலி கொடுக்க வேண்டும்

அதன் பிறகு இந்த பலி கொடுத்த தேவாங்கிலிருந்து குழித்தைலம் இறக்கி அதை ஒரு சிமிழில் பதனம் செய்து வைத்து கொள்ள வேண்டும் மேற்படி தைலத்தை நெற்றியில் திலர்த மிட்டு சென்றால் நீங்கள் எதை வசியம் செய்ய விரும்புகிறீர்களோ அவற்றை வசியம் செய்யலாம் இதனால் மனித வசியம், பெண் வசியம் ,தேவ வசியம் ,சர்வ வசியம் லோக வசியம் என்ற வசிய வகைகள் அனைத்தும் சித்திக்கும் .

**தேவதை சித்தி**

சிறு தெய்வங்களை சித்தி செய்வதை விட்டு விட்டு பெரிய தெய்வங்களான வாலை திரிபுரசுந்தரி ,காளி ,அஷ்ட லக்ஷ்மி ,விநாயகர்,அனுமன்,வராகி.இப்படி போன்ற தெய்வங்களை சித்தி செய்து வைத்து கொண்டால் நாம் ஒரு விஷயம் செய்யும் பொது அதற்காக அதிகம் முயற்சி செய்ய வேண்டியதில்லை

நாம் பூஜையில் அமர்ந்திருக்கும் பொது இன்னான் மகன் இன்னனுக்கு இப்படி நடக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்தால் போதும் அந்த நிகழ்வானது ஏழு அல்லது பதினோரு நாட்களுக்குள் நடந்து விடும் .அதற்காக எந்திரங்கள் எழுதி 41 நாட்கள் பூஜை வைத்து செய்ய வேண்டும் என அவசியம் இல்லை. இதில் முக்கியமானது என்ன வென்றால் நாம் வணங்கும் தெய்வத்தை இப்படிபட்ட வேலைக்கெல்லாம் பயன்படுத்தினால் நமக்குத்தான் பாவங்கள் அதிகம் ஆகும் . அந்த தெய்வத்திற்கு ஒரு லக்ஷதிற்கு பத்து லக்ஷம் மந்திரம் கூறினால் நமக்கு எல்லா பிறவிகளிலும் அந்த தேவதையின் அருள் கிடைக்கும். இந்த தேவதைகளின் உபாசனை செய்யும் பொது அந்த தேவதையை நமக்கு வேலைக்காரனாக நினைத்தல் கூடாது .நம் குடும்பத்தில் ஓர் அங்கம் என்றே எண்ண வேண்டும் .

## பஞ்ச பட்சி

### சித்த மருத்துவத்தில் பஞ்ச பட்சி

பஞ்ச பட்சி சாஸ்திரம் சித்தமருத்துவத்தில் முக்கிய பங்கு வகுக்கின்றது இந்த ஐந்து பட்சிகள் என்பது மக்களுக்கு அந்த சாஸ்திரத்தை புரிய வைப்பதற்காக குறிபபிட்டிருக்கிரார்கள்.

எல்லோரும் இந்த ஐந்து பறவையையும் அது உண்ணும் மூலிகையும் தெரிந்து கொண்டு பட்சி சாஸ்திரம் தெரியும் என்று பிதற்றிக்கொண்டிருக்கிரார்கள் அதன் கால அளவுகளையும் தெரிந்து கொண்டு எனக்கும் தெரியும் என்று கூறுகின்றனர் .

இந்த பட்சி சாஸ்திரமும் பஞ்ச பூத தத்துவத்தின் அடிப்படையிலே செயல் படுகிறது இதை வைத்து நோய் கண்டறிய அதை குணப்படுத்த சித்த மருத்துவத்தில் பயன் படுகிறது .

### ஜோதிடத்தில் பஞ்ச பட்சி

அடுத்து இந்த பட்சி சாஸ்திரத்தை வைத்து ஒருவனின் தலைஎழுத்தையே கூற முடியும் .ஒருவன் பிறந்த நேரம் எந்த பட்சி ஆட்சியாக இருந்தது அவனுக்குரிய பட்சி என்ன செய்தது

இப்பொழுது உள்ள கோட்சார பலன் கூட கூற முடியும் அவன் வருகையை கவனித்து அவன் எந்த பட்சி சமயத்தில் வந்தான் அவன் என்ன வார்த்தை கூறினான் என்று கணித்து எதற்காக வந்திருக்கிறான் என்று துல்லியமாக கூற முடியும்

### மாந்திரீகத்தில் பஞ்ச பட்சி

மாந்திரீகத்தில் யந்திர முறைகளை கொண்டு செய்ய முடியாததை இந்த பட்சி சமயத்தை கணித்து அதற்கான மூளியை அந்த சமயத்தில் பிடிங்கி அதற்குரிய யந்திரத்தை உருவேற்றி புதைத்தால் அந்த காரியம் உடனடியாக நடக்கும் இதிலும் முழுக்க பஞ்ச பூத தத்துவங்களே செயல்படுகின்றன .

இந்த பஞ்ச பூத தத்துவத்தை சரியாக அறியாதவர்களால் இக்கலையை செயல்படுத்த முடியாது ,அதையும் மீறி செய்தால் தோல்வியும் எதிர் விளைவுகளும் ஏற்படும் என்பது உறுதி .

**வசிய மருந்து (எ) இடுமருந்து**

வசியமருந்து முறையை பயன் படுத்தி அதிகமானோர் வயிற்று பிழைப்பு நடத்தி கொண்டிருக்கிறார்கள் அது எப்படி என்றால் யாராவது வயிறுவலி என்று வந்தாலே அவர் உடம்பில் மருந்து உள்ளது .அதை எடுக்கிறேன் என்று கூறி பணம் வாங்குகின்றனர் .

அதாவது குடலில் ஒட்டிகொண்டிருக்கும் பொருளை குழல் வைத்து உறுஞ்சி எடுப்பது என்பது சாத்தியமா அது சாத்தியமல்ல அதை எடுக்க வேண்டுமானால் தக்க சித்த மருந்து வகைகளை உண்டால் மட்டுமே எடுக்க முடியும் .இல்லைஎன்றால் பேதி மாத்திரை சாப்பிட்டாலும் அது வருவதற்கு வாய்ப்புகள் உள்ளன .

**உடலில் மருந்து இருக்கிறது என்று கண்டறிவது எப்படி?**

உடலில் மருந்து இருந்தால் எப்படி கண்டு பிடிக்க வேண்டுமேன்றால் பாகற்காயில் இரண்டு வகைகள் உண்டு ஒன்று நாம் அன்றாட உணவில் வைத்து உண்ணும் பாகற்காய் ஒன்று ,மற்றொன்று பாகற்காயின் இலையானது கொஞ்சம் சிறியதாக இருக்கும் அதுதான் மிதி பாகற்காய் அந்த மிதி பாகற்காய் இலையில் சாறு பிழிந்து உள்ளங்கையில் ஊற்றினால் அந்த சாரானது வற்றி விட்டால் அந்த உடலில் மருந்து இருக்கிறது என்று உறுதி செய்து கொள்ளலாம் .அது அப்படியே நீர் போல வற்றாமல் இருந்தால் அந்த உடம்பில் ஒன்றும் இல்லை என்று அர்த்தம்.

**வசியம் :**

இப்போது பொதுவாகவே வசியம் என்றாலே எல்லோரும் இடுமருந்து கொடுக்க ஆரம்பித்து விடுகிறார்கள் .இந்த இடுமருந்தானது எல்லோருக்கும் வேலை செய்யாது . பலகீனமானவர்களுக்கு அந்த மருந்தானது வேலை செய்யும் உடற்பயிற்சி யோகா இப்படி பட்ட பயிற்சி செய்து வருபவர்களுக்கு இம்மருந்து சரியாக வேலை செய்யாது . அதைப்போல மது அருந்துபவர்களுக்கும் அது வேலை செய்யாது .

**இடு மருந்து எவ்வாறு வேலை செய்கிறது ?**

இந்த மருந்து தயாரிப்பதற்கு எங்களிடம் பல முறைகள் உள்ளன .அம்மருந்தானது ஒரு சில மூலிகைகளை கொண்டு தயார் செய்யப்படுகிறது அதில் யாருக்கு வசியப்பட வேண்டுமோ ,அவர்களுடைய ஆளுக்கு ,அல்லது மூத்திரம் அல்லது வித்து இவைகளை அம்மருந்தில் கலந்து கொடுக்கும் பொது .இவருடைய வாடை பட்ட உடனேயே எதோ ஒரு மோகம் அவர் மேல் ஏற்பட்டு விடுகிறது .
இது பழைய முறைதான் இந்த முறையை பயன் படுத்திதான் கண்ணவன் உண்ட இலையிலே மனைவியை எச்சில் சாப்பாட்டை சாப்பிட சொல்வார்கள் அதுவும் இருவரும் அன்யோன்யமாக வாழத்தான்

***கணவன் உண்ட அதே இலையிலோ அல்லது தட்டிலோ மனைவி உண்ண காரணம்!***

திருமணம் ஆன பெண்களை வீட்டில் உள்ள பெரியவர்கள் தன் கணவன் உண்டபின் அதே இலையிலோ அல்லது தட்டிலோ உணவு உண்ணச் சொல்லுவார்கள் அது ஏன் என்று தெரியுமா?

கணவனுக்கு பரிமாறப்பட்ட உணவை கணவன் உண்ணும்போது எல்லாவற்றையும் உண்ண மாட்டான், அவனுக்கு சில உணவுகள் பிடிக்கும் சில உணவுகள் பிடிக்காமல் இருக்கும் அப்படி பிடிக்காமல் இருக்கும் உணவை அவன் அப்படியே மிச்சம் வைத்து விடுவான்,...

அவனுக்கு பின் அதே இலையில் அல்லது தட்டில் உணவு உண்ணும் மனைவி மார்கள் கணவன் மிச்சம் வைத்த அவனுக்கு பிடிக்காத உணவு வகைகளை எளிதாக அடையாளம் கண்டு மறுமுறை சமைக்கும் பொழுது அந்தந்த உணவுகளை சமைக்காமல் தவிர்த்து விடலாம்,பிடித்ததை அடுத்த முறை நிறைய பரிமாறலாம், அதற்காக ஏற்படுத்தப் பட்டதே இந்த பழக்கம் ஆகும்.

கணவனில் எச்சிலில் இருக்கும் புதிய ஜீன்கள் சாப்பாட்டின் மூலம் மனைவியின் உடலில் கலந்து அது அவள் பாலூட்டும் குழந்தைக்கு கிடைக்கவே (ஜீன் அப்டேசன்) இந்த ஏற்பாடு.

**சர சாஸ்திரம் (வாசியோகம்)**

மணி மந்திரம் மருத்துவம் இந்த மூன்று கலைகளிலும் நான் குறிப்பிட்ட பஞ்ச பட்சி, மற்றும் சர சாஸ்திரமும் ஹோரையும் தெரிந்திருந்தால் மட்டுமே அந்த கலைகளில் முற்றிலும் வல்லவனாக திகழ முடியும் .

சர சாஸ்திரத்தைப் பற்றி "சரம் அறிந்தவனிடம் சரசமாடாதே "என்று கூறுவார்கள் சரசாஸ்திரத்தை பற்றி எல்லோரும் ஒரு பொதுவான விசயங்கள்தான் கொடுத்திருப்பார்கள் ,அதை விட பெரிய சூட்சமங்கள் அதில் அடங்கியுள்ளன .

சர சாஸ்திரம் பொதுவாக எல்லோருக்கும் சித்தியாகாது அந்த அனுக்கிரகம் எல்லோருக்கும் கிடைக்காது என்று கூறுவார்கள் .முந்தைய ஜென்மங்களின் பலா பலன்களை வைத்தே இந்த சாஸ்திரம் பலிதம் ஆகும் .

**சர கலை (சர சாஸ்திரம் )**

கால் மாற்றும் கலையினைப் பற்றி நாம் இப்பதிப்பின் மூலம் தெரிந்து கொள்வோம். இந்தக் காலும் கலையும் பற்றி நம்பெருமானார் வள்ளலார் கூறுவது யாது? ஓரிடத்தில் 'கால் மேல் கால் போடவும் பயந்தேன்' என்று காலைப்பற்றியும், 'கலையுரைத்த கற்பனையெலாம் நிலை என கொண்டாடும் உலகீர்' என்று கலையைப் பற்றியும் பாடியிருப்பதைக் காண்கிறோம். ஆனால், நாம் இங்கே பார்க்கப்போவது அந்தக் காலும் கலையும் அல்ல.

இங்கே கால் என்பது காற்றை குறிக்கும். அதாவது மூச்சுக்காற்று. கலை என்பது அதனை தமது விருப்பத்திற்கு பழக்கும் வித்தையை குறிக்கும். இவ்வுலகில் நமது தமிழ் சித்தர்கள் தவிர வேறு எவரும் மூச்சுக்கலையைப் பற்றி விரிவாக கூறவில்லை எனலாம். அதிலும் திருமூலர் ஆண்டுக்கு ஒரு பாடல் என மொத்தம் எண்ணாயிரம் பாடல்கள் பாடியுள்ளார். (திருமூலர் மொத்தம் 8000 பாடல்கள் பாடியுள்ளதாக வள்ளலார் கூறுகிறார், அவற்றில் 3000 பாடல்கள் மட்டுமே நமக்குக் கிடைத்துள்ளன, மேலும் திருமூலர் 3000 ஆண்டுகள் அல்ல, 8000 ஆண்டுகள் பரு உடலுடன் வாழ்ந்துள்ளார்) இதிலிருந்து எட்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நமது தமிழர்கள் இந்த மூச்சுக்கலையை பற்றி அறிந்திருந்தனர் என்று ஒருவாறு சொல்லலாம். இவர் பாடிய திருமந்திரத்தில் இந்த மூச்சுக்கலையை பற்றி பல விஷயங்களை நாம் அறிய முடிகிறது. இவருடைய சமாதிஇடம்தான், சிதம்பரம் கோயில் என்பது நமக்குத் தெரிந்த விஷயமே. திருமந்திரத்தை வள்ளலார் கூறும்போது, 'இந்த மார்க்க உண்மை தெரிய வேண்டுமெனில் திருமந்திரத்தைக் கவனிக்கில் விளங்கும்' என்கிறார்.

இந்து மதங்களில், எங்கெல்லாம் பாம்பு படங்கள் சிலைகள் உள்ளனவோ அவைகள் எல்லாம் மூச்சுக்காற்றைக் குறிக்கும் அடையாளங்கள் ஆகும். நமது மூச்சுக்காற்றையே பாம்பாக உருவகப்படுத்தினார்கள் இந்துக்கள். அரசமரத்தடியில் இருக்கும் இருபாம்புகள் பின்னி நிற்குமாறு கல்லில் செதுக்கியிருப்பார்கள். அவை நமது இடங்கலைமூச்சும், பிங்கலை மூச்சும் இணைந்த சுழுமுனை மூச்சை குறிக்கும் அடையாளம். அதாவது அரசமரத்தடியில் அமர்ந்து சுழுமுனை இயக்கத்தில் தியானம் செய்ய இறையருள் கிடைக்கும் என்பதனை புறத்திலே இவ்வாறு செய்திருக்கிறார்கள். சிவன் கழுத்தில் இருக்கும் பாம்பு, முருகனின் காலடியில் இருக்கும் பாம்பு, விநாயகரின் வயிற்றில் சுற்றியுள்ள பாம்பு, விஷ்ணு பாம்பின்மேல் படுத்திருப்பது, கண்ணன் பாம்பின்மீது நடனம் ஆடுவது போன்ற அனைத்தும் ஒவ்வொரு தத்துவத்திலுள்ள மூச்சுக்காற்றை குறிக்கிறது என்பதை அறியவேண்டும். ஆனால் இந்துக்கள் அதன் உண்மைதெரியாமல் பால், பழம், முட்டை வைத்து குருட்டு பூஜை செய்து செய்துவருகிறார்கள். சிதம்பரத்தில் உள்ள நடராஜர் சிலையும் இந்த நமது மூச்சின் நடனத்தையே குறிக்கும்.

நமது வள்ளலாரும் இந்த மூச்சுப்பயிற்சி பற்றி சில இடங்களில் தமது திருவருட்பாவில் கூறியுள்ளார். எனவே திருஅருட்பா, திருமந்திரம் மற்றும் சித்தர் கருத்துகள் போன்றவை கூறும் சர பயிற்சியினை பற்றிக் காண்போம்.

அதற்கு முன்னர் பொதுவாக மூச்சுக்காறு பற்றின உண்மையினை காணலாம். நமது நாசியின் வழியே உள்ளே போவதும் வெளியே வருவதுமாக இருக்கும் காற்றுதான் மூச்சுக்காற்று என்று அனைவருக்கும் தெரியும். ஆனால் நாம் ஒரு நாளைக்கு எத்தனை முறை மூச்சுவிடுகிறோம்? ஏன் நமக்கு ஒரு நாசித்துளைக்கு பதிலாக இரு நாசித்துளைகள் உள்ளன? ஏன் நமக்கு ஒரு கண்ணுக்கு பதிலாக இரு கண்கள் உள்ளன? ஏன் நமக்கு ஒரு காதுக்கு பதிலாக இரண்டுக் காதுகள் உள்ளன? என்று சிந்தித்தோமா?

இரண்டு கண்கள், காதுகள் இருந்தாலும் பார்க்கும் பார்வையும், கேட்கும் சத்தமும் ஒன்றாகவே உள்ளன! பிறகு ஏன் இரண்டு? ஒன்று பழுதானால் இன்னொன்றை பயன்படுத்திக்கொள்ள இறைவன் நமது உடலில் அமைத்த கூடுதல் பாதுகாப்பு (Step-in) அவையங்கள் என்று கூறலாம். ஆனால் மூக்கிற்கு ஏன் இரண்டு துவாரங்கள்? இரண்டு துவாரங்களுமே ஒரே செய்கையினை செய்கிறதா? என்று ஆராய்ந்தால், இரண்டு துவாரங்களும் வெவ்வேறு இரண்டுவித செய்கையினை செய்வதை அறியலாம். மேலும் மூன்றாவதாக ஒரு செயலையும் செய்வதைக் காணலாம்! எப்படி?

நமது முன்னோர்கள், நமது இடதுபுறம் உள்ள நாசித்துவாரத்தை 'இடகலை' / 'சந்திரகலை' என்றும் வலது புறம் உள்ள நாசித்துவாரத்தை 'பிங்கலை' / சூரியக் கலை என்றும் கூறுவர்.

1. மூக்கின் இடது நாசிதுவாரத்தின் வழியே நடைபெறும் சுவாசம் இடகலை எனப்படுகிறது. இதற்கு "சந்திரகலை" என்றொரு பெயரும் உண்டு.

2. மூக்கின் வலது நாசியில் நடைபெறும் சுவாசம் பிங்கலை எனப்படுகிறது. இதற்கு சூரிய கலை என்றொரு பெயரும் உண்டு.

3. இரண்டு நாடிகளிலும் ஒருசேர நடக்கும் சுவாசத்திற்கு சுழுமுனை என்று பெயர்.

ஆக இம்மூன்றுச் செயல்களையும் நமது நாசி செய்துவருகிறது. இதனை 'சரவோட்டம்' என்பார்கள். இரண்டு ஆட்காட்டி விரல்களையும் மூக்கின் நடுத் தண்டில் பக்கத்திற்கு ஒன்றாக வைத்து இயல்பாய் மூச்சை விட எந்த நாசியில் மூச்சு ஓடுகிறது என்பதை எளிதாய் கண்டறியலாம்.

இந்த சர ஓட்டம் இயற்கையாகவே சுமார் ஒன்றறை மணித்துளிகளுக்கு ஒருமுறை மாறி மாறி இயங்கும். இம்மாற்றத்தை நமது விருப்பத்திற்கு இனங்க மாற்றுவதுதான் 'கலை' என்கிறோம்.

***சரம் தெரிந்தவனிடம் சரசமாடாதே***
***சரம் பார்ப்பான் பரம் பார்ப்பான்***

இவை முன்னோர் வாக்கு. சரம் தெரிந்தவனிடம் சரசமாடாதே என்பதன் பொருள் சர கலையை இயக்கத்தெரிந்தவனிடம் சரசம் என்று விளையாட்டுத் தனமாக நடந்துக்கொண்டால் சரம் கற்றவன் சீறி சினந்து வாக்கு விட்டால் அது அப்படியே பலித்துவிடும். ஏனென்றால் பஞ்சபூத சக்திகள் அனைத்தும் சரகலையில் தேர்ச்சி பெற்றவனின் உடல், மனம், வாக்கு மூன்றிலும் ஒருங்கிணைந்து ஆட்சி செய்யும்.

**நீண்டநாள் வாழ நாம் என்ன செய்ய வேண்டும்?**

நாம் ஒரு நாளைக்கு 21600 முறை சுவாசம் செய்யவேண்டும். எனவேதான் வடலூர் ஞானசபையில் இதனை உணர்த்தும் வகையில் நம்பெருமான், ஞானசபையினை சுற்றி 21600 வளையங்கள் கொண்ட இரும்புச் சங்கிலியினைப் பொருத்தியுள்ளார்கள்.

1நிமிடத்திற்கு 15 மூச்சும், 1 மணி நேரத்திற்கு 900 மூச்சும்; 1 நாளிற்கு 21,600 மூச்சும் ஓடுகின்றது. உயிர்மெய்யெழுத்துக்கள் 216 என்பது இந்த 21,600 மூச்சுக்களையே குறிக்கும் ஒரு மனிதன் தன் வாழ்நாளில் தினமும் 21,600 மூச்சுக்கு மிகாமல் உபயோகம் செய்தால் அவனுடைய ஆயுள் 120 ஆண்டுகளாகும்.

விளங்கிடு முந்நூற்று முப்பத்தோ டொருபான்
தனங்கொளிரட்டிய தாறு நடந்தால்
வணங்கிடு ஆமைம்மலம் வாயுவெழுந்து
விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே. (திருமந்திரம்)

விளக்கமிக்க முந்நூறும், முப்பதைப் பத்தினால் பெருக்கிக் கிடைத்த முந்நூறும் சேர்ந்து அறுநூறு ஆகும். இரட்டியதாறு என்பது ஆறும் ஆறும் பெருக்க முப்பத்தாறு ஆகும். இம்முப்பத்தாறை அறுநூறோடு பெருக்க 21,600 ஆகும். இதுவே ஒருநாள் நாம் சுவாசிக்கும் சுவாசங்கள் என்று திருமந்திரம் கூறுகிறது. ஆனால் உட்கார்ந்திருக்கும் போது 12மூச்சும், நடக்கும் போது 18 மூச்சும், ஓடும்போது 25 மூச்சும், தூங்கும் போது 32 மூச்சும,; உடலுறவின் போதும், கோபம் முதலான உணர்ச்சிகளில் சிக்கும் போது 64 மூச்சும் 1 நிமிடத்தில் ஓடுகின்றன. இந்த மூச்சினுடைய அளவு எவ்வளவு மிகுதியாகிறதோ அதற்கு தகுந்தாற்போல் ஆயுள் குறைகிறது. அதனால்தான் வள்ளற்பெருமான், நாம் உடற்பயிற்சி செய்ய வேண்டுமெனில் 'மெல்லென நடைபயில வேண்டும்' என்று கூறுவார்.

அதாவது நமது மூச்சுக்காற்று வெளியில் அதிக அளவில் செல்ல அவர் அனுமதிக்கவில்லை. மேலும் நம்பெருமானார், 'ஒருவன் ஒரு நாளைக்கு ஒரு மணிநேரம் உறங்க பழக்கப்படுத்திக்கொண்டால், அவன் 1000 வருடங்கள் வாழலாம்' என்றும் கூறுவார். நாம் சும்மா உட்கார்ந்திருந்தால் 12 மூச்சுதான் செலவாகும், அதுவே உறங்கினால் 32 மூச்சு செலவாகிறது. அதாவது, நாம் தூங்கும்போது 20 மூச்சு ஒரு நிமிடத்திற்கு நட்டம் அடைகிறது. எனவே, 'தூங்காதே தம்பி தூங்காதே'! அதுபோல் ஒருவன் கோபப்பட்டால் 52 மூச்சு ஒரு நிமிடத்திற்கு நட்டமாகிறது (64-12=52). எனவே, 'உனது கோபம் உன் எதிரிக்கு இலாபம்' என்பதை அறியவேண்டும். கோபம் என்பது 'சேர்ந்தாரைக் கொல்லி' என்பார் வள்ளுவரும். அதுபோல் உடலுறுவு செய்யும்போதும் நமக்கு 52 மூச்சு ஒரு நிமிடத்திற்கு நட்டமாகிறது. எனவே வள்ளலார், இதில் மாதம் இருமுறை மட்டுமே இல்லறத்தான் ஈடுபடவேண்டும் என்கிறார். 'விந்து விட்டான் நொந்து கெட்டான்' என்பார்களே அது இதற்காகத் தான்.

ஒரு மனிதன் ஒரு நிமிடத்திற்கு 15 முறை சுவாசித்தால் அவனுக்கு விதித்த ஆண்டு 100. {21,600/1440=15. ஒரு நாளுக்கு 1440 நிமிடங்களாகும் (60x24=1440)}

மேற்கண்டவாறு கணக்கிட்டால் ஒரு மனிதன்,
100 ஆண்டுகள் வாழ்ந்தால், அவன் ஒரு நிமிடத்திற்கு 15 மூச்சுகள் விட்டுள்ளான்,
93 ஆண்டுகள் வாழ்ந்தால், அவன் ஒரு நிமிடத்திற்கு 16 மூச்சுகள் விட்டுள்ளான்,
87 ஆண்டுகள் வாழ்ந்தால், அவன் ஒரு நிமிடத்திற்கு 17 மூச்சுகள் விட்டுள்ளான்,
80 ஆண்டுகள் வாழ்ந்தால், அவன் ஒரு நிமிடத்திற்கு 18 மூச்சுகள் விட்டுள்ளான்,
73 ஆண்டுகள் வாழ்ந்தால், அவன் ஒரு நிமிடத்திற்கு 19 மூச்சுகள் விட்டுள்ளான்,
66 ஆண்டுகள் வாழ்ந்தால், அவன் ஒரு நிமிடத்திற்கு 20 மூச்சுகள் விட்டுள்ளான்...
இவ்வாறு நிமிடத்திற்கு ஒவ்வொரு மூச்சு கூடும்போதும் நாம் நம் ஆயுளில் 7 வருடங்களை இழக்கிறோம் என்பதனை கவனத்தில் கொள்ளவேண்டும்.

2 முறை சுவாசித்தால் அவன் வயது 750 ஆண்டு

1 முறை சுவாசித்தால் அவன் வயது 1500 ஆண்டு

0 முறை சுவாசித்தால் முடிவேயில்லை [இது சித்தர்களால் மட்டுமே முடியும்]
ஒரு மனிதன் ஓம்காரம் சொன்னால் அவனுடைய சுவாசத்தின் நீளம் குறைந்து சுவாசம் மிச்சப் படுகிறதாம். ஆகையால் பிரணவ மந்திர [ஓம்] ரகசியம் அறிந்தவர்களும் நீண்ட நாள் வாழலாம். 'மூன்றெழுத்தில் என் மூச்சிருக்கும்'! (அ+உ+ம=ஓம்].

ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியதுவாம் [திருமந்திரம்]

இரு நாசிகள் வழியே ஏறியும் இறங்கியும் இயங்கும் காற்றினைக் கணக்காக ஆளும் திறமை கொண்டோர், எமனை அருகில் வராமல் விலக்கி வைக்கலாம் என்கிறார் திருமூலர்.

ஊமைக் கிணற்றகத்துள்ளே உறைவதோர்
ஆமையின் உள்ளே யழுவைகள் ஐந்துள
வாய்மையினுள்ளே வழுவா தொடுங்குமேல்
ஆமையின் மேலுமோ ராயிரத் தாண்டே. [திருமந்திரம்]

இவ்வுலகில் மிக அதிக காலம் உயிர் வாழும் உயிரினம் ஆமை. அது ஒரு நிமிடத்திற்கு மூன்று முறை தான் சுவாசிக்கும். இதன் ஆயுள் சராசரியாக 200 வருடங்களுக்கும் மேல். 1000 வருடங்கள் வயதுள்ள ஓர் கடலாமை சமீபத்தில் இறந்துவிட்டதாக தொலைக்காட்சியில் பார்த்த ஞாபகம் வருதே!

ஆமையை விட ஆயிரம் ஆண்டு கூடுதலாக வாழ வேண்டுமானால் - என்ன செய்ய வேண்டும் என்று திருமூலர் கூறுகிறார். வாயில்லாக் கிணற்றுள் உறையும் பிரணவ வழிபாட்டாளரிடம் உறைப்புடன் தங்கும் நின்மல சாக்கிரம் முதலிய 5 நிலைகள் உண்டு. அந்நிலையில் ஆன்ம ஒளியில் நழுவா அறிவு ஒடுங்குமேல் அவர் பிரணவ உடலுடன் மேலும் ஒரு ஆயிரம் ஆண்டு உயிர் வாழலாம்.

இதிலுள்ள தத்துவ விஷயங்களை மறந்து விட்டு ஆமையை விட ஆயிரம் ஆண்டு உயிர் வாழ்வது எப்படி என்ற வரிகளை மட்டும் கவனிக்கவும். ஆமை தான் உலகில் நீண்ட காலம் வாழும் பிராணி என்பதைத் தமிழர்கள் 8000 வருடங்களுக்கு முன்னரே அறிந்திருந்தனர். இதைக் கண்டுபிடித்து எழுதி வைக்கக் கூட ஒருவர் பல தலைமுறைகளுக்கு வாழ்ந்திருக்க வேண்டும். அல்லது சரியான தகவலைப் பரப்பும் உத்தி இருந்திருக்க வேண்டும். ஆமைதான் உலகில் நீண்ட நாள் உயிர்வாழும் பிராணி என்று அறிவியலார்கள் தற்காலங்களில்தான் கண்டுபிடித்தார்கள்.

"எப்போதும் பயத்தோடு இருக்கப்படாது. பரிச்சேதம் பயமில்லாமலும் இருக்கக்கூடாது. எப்போதும் மன உற்சாகத்தோடு இருக்க வேண்டும். கொலை, கோபம், சோம்பல், பொய்மை, பொறாமை, கடுஞ்சொல் முதலிய தீமைகள் ஆகா. உரத்துப் பேசுதல், வேகமாக நடத்தல், ஓடி நடத்தல் [ஓடுதல்], வழக்கிடல், சண்டையிடல் கூடா. எந்த விதத்திலும் பிராணவாயு [மூச்சுக்காற்று] அதிகமாகச் செலவாகாமல் ஜாக்கிரதையோடு பழகுதல் வேண்டும்" [திருஅருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம்339)

***'அருகுநுனி பனியனைய சிறிய துளி***
***பெருகியொரு ஆகமாகிய பாலரூபமாய்' (திருப்புகழ்]***

ஒரு விந்துவில் உள்ள இலட்சக்கணக்கான உயிரணுக்கள் ஒவ்வொன்றும் மானிடனாகி 120 வருடங்கள் வாழவைக்கக்கூடிய உயிர்ச்சக்தியினை பெற்றிருக்கின்றன. இயற்கையாக நாம் 120 வருடங்கள் வாழ்வதற்கும், குறை ஆயுள் அடையவும் நம் தந்தைதான் காரணம். எப்படி?

பாய்ந்த பின் அஞ்சோடில் ஆயுளும் நூறாம்
பாய்ந்த பின் நாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடும் வாயு பகுத்தறிந் திவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலுமே. [திருமந்திரம்]

விந்து வெளிப்பட்டதும் ஆண் விடும் சுவாசம் ஐந்து மாத்திரைக் கால அளவு நீடித்தால் தரிக்கும் குழந்தை ஆயிரம் பிரைகள் காணமுடியும். ஆனால் மாத்திரை குறைய குறைய அதற்கேற்றாற்போல குழந்தையின் ஆயுளும் குறையும் என்கிறார் திருமூலர்.

**மலம், ஜலம் தடைபடுமானால் என்ன செய்ய வேண்டும்?**

மலங்கழிக்கின்ற போது, வலது கையால் இடது பக்கம் அடிவயிற்றைப் பிடித்திருத்தல் வேண்டும். ஜலம் கழிக்கும்போது, இடது கையால் வலது பக்கம் அடிவயிற்றைப் பிடித்திருத்தல் வேண்டும். மலமாவது ஜலமாவது பற்றறக் கழியும் வரையில், வேறு விஷயங்களைச் சிறிதும் நினையாமல், மலஜல சங்கற்பத்தோடு இருக்க வேண்டும்.

மலம் பின்னுந் தடைபடுமானால், இடது பக்கமாகச் சற்றே படுத்துப் பிராண வாயுவை வலத்தே வரும்படி செய்து கொண்டு, மலசங்கற்பத்தோடு மலவுபாதி கழித்தல் வேண்டும்.

ஜலம் தடைபட்டால், வலது பக்கமாகச் சற்றே படுத்துப் பிராண வாயுவை இடது பக்கம் வரும்படி செய்து கொண்டு, ஜல சங்கற்பத்தோடு ஜல வுபாதி கழித்தல் வேண்டும். (திருஅருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம் 333)

அதாவது, மல ஜல கழிப்பதில் சற்று உபாதை உள்ளவர்கள், சூரியக்கலையில் (வலது நாசி) சுவாசம் செல்லும்போது மலம் கழிக்க வேண்டும். சந்திரக்கலையில் (இடது நாசி) சுவாசம் செல்லும்போது ஜலம் கழிக்க வேண்டும்.

**நமது விருப்பம்போல் சூரியக்கலையினையும், சந்திரக்கலையினையும் மாற்றுவது எப்படி?**

நாம் இடதுபக்கம் சாய்ந்து படுத்தால், சற்று நேரத்தில் நம் சுவாசம் வலதுபக்கம் (சூரியக்கலையில்) ஓட ஆரம்பித்துவிடும். நாம் வலதுபக்கம் சாய்ந்து படுத்தால், சற்று நேரத்தில் நம் சுவாசம் இடதுபக்கம் (சந்திரக்கலையில்) ஓட ஆரம்பித்துவிடும். இது மிக மிக எளிமையான வழி. முயன்று பாருங்கள்.

**தேகசம்பந்தம் பற்றி வள்ளலார் கூறுவது யாது?**

1. பகலில் தேகசம்பந்தங்கூடாது.
2. முதலில் மனதைத் தேக சம்பந்தத்தில் வையாது வேறிடத்தில் வைத்துப் பின் சம்பந்தஞ் செய்தற்குத் தொடங்கல் வேண்டும். மூச்சு அதிர்ந்து மேலிடாது மெல்லென பெண்போகம் செய்தல் வேண்டும்.
3. தொடங்கிய போது அறிவு வேறுபடாமல், மன முதலிய கரண சுதந்திரத்தோடு, தேகத்திலும் கரணங்களிலுஞ் சூடு தோன்றாமல், இடது புறச் சாய்வாகத் தேகசம்பந்தம் செய்தல் வேண்டும்.
4. புத்திரனைக் குறித்த காலத்தன்றி மற்றக் காலங்களில் சுக்கிலம் வெளிப்படாமலிருக்கத்தக்க உபாயத்தோடு தேகசம்பந்தஞ் செய்தல் வேண்டும்.
5. அவ்வுபாயமானது பிராணவாயுவை [மூச்சுக்காற்றை] உள்ளேயும் அடக்காமல் வெளியேயும் விடாமல் நடுவே உலாவச் செய்து கொள்ளுதலாம்.
6. தேகசம்பந்தம் ஒரு முறையன்றி அதன் மேலுஞ் செய்யப்படாது.
7. தேகசம்பந்தம் செய்தப்பின், குளித்துவிட்டு இறைவனை நினைந்து தியானம் செய்துவிட்டு பிறகு படுக்க வேண்டும்.
8. எந்தக்காலத்தில் எது குறித்துப் படுத்தபோதிலும், இடது கை பக்கமாகவே படுக்கவேண்டும். [அப்போதுதான் மூச்சுக்காற்று எப்போது சூரியக்கலையில் இருக்கும்]
9. இரவில் தேகசம்பந்தம் 4 தினத்திற்கு ஒருமுறை செய்வது அதம பசஷம் [அதர்மம்]. சுக்கிலம் நெகிழ்ச்சிப்பட்டுச் சந்ததி விருத்தியைக் கெடுக்கும்.
10. 8 தினத்திற்கு ஒரு முறை செய்வது மத்திம பசஷம் [நடுவுநிலை].
11. 15 தினத்திற்கு ஒரு முறை செய்வது உத்தம பசஷம் [உத்தமம்]
12. அதன் மேற்படில் [15 தினத்திற்கும் மேல் செய்யவில்லை எனில்] சுக்கிலம் ஆபாசப்பட்டுத் தானே கழியும்.
13. இரவில் சொப்பனம் வராது மிருதுவாகவே நித்திரை செய்து விழித்துக் கொள்ளல் வேண்டும்.
14. காலைப்புணர்ச்சி, பகற்புணர்ச்சி, அந்திப்புணர்ச்சி, இரவு முன்பங்குப்புணர்ச்சி கூடாது.
15. ஜீவன் என்கின்ற தீபத்துக்குச் சுக்கிலம் திரி, இரத்தம் எண்ணெய். ஆகையால் சுக்கிலமாகிய திரியை விசேஷம் தூண்டிச் செலவு செய்து விட்டால் ஆயுசு நஷ்டமாய்விடும். ஆனால் சிட்டத்தை மட்டும் எடுத்துவிடவேண்டியது. அதாவது 15 தினத்திற்கு ஒருமுறை தேக சம்பந்தஞ் செய்து ஆபாசப்பட்ட சுக்கிலத்தை வெளிப்படுத்திவிட வேண்டும்.
16. ஆசானுடைய அல்லது ஆண்டவருடைய திருவடியில் சதா ஞாபக முடையவனுக்குக் கோசத்தடிப்பு உண்டாகாது. ஆகையால், தேகசம்பந்தம் ஏகதேசத்தில் செய்யலாம் என்றது மந்தரத்தையுடையவனுக்கே அன்றி, அதிதீவிர பக்குவிக்கல்ல. [திருஅருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம் 339,340,341,344,423)

**கரு உற்பத்தி பற்றி வள்ளலார் கூறுவது என்ன?**

ஆணிடத்திலிலுள்ள சுக்கிலத்திலும், பெண்ணிடத்திலிலுள்ள சுரோணிதத்திலும் கடவுள் ஆவி உள்ளது. கோசத்தின் முன் விஷம் [சத்தி] ஒரு பாகம், அதை அடுத்து பூதம் [அறிவு] ஒரு பாகம், அதற்கு மேல் அமுதம் [விந்து] அரை பாகம், என சுக்கிலம் இரண்டரை வவராகன் எடை அளவுக்கொண்டது. இவ்வாறு பெண்பாலிடத்தும் உண்டு.

முன்னுள்ள விஷ பாகம் புணர்ச்சிக் காலையில் வெளிப்பட்டால் தேகநஷ்டம். பூதம் வெளிப்பட்டால் வியாதி. அமுதம் வெளிப்பட்டால் சந்ததி விருத்தி. கடவுள் அருளால் காலச்சக்கரம் போல் ஏகதேசத்தில் கோச உபஸ்தங்களின் அமுதபாக நாடியை முன்னே தள்ளி, விஷாதிகளைப் பின்னே சேர்த்துக் கருத்தரிக்கச் செய்விப்பார்.

இந்த நியாயத்தால் இடைவிடாது புணருகிறவர்களுக்குக் கர்ப்பமில்லை. மேலும் விந்துவளம், இடவளம், வன்னி, கிருமி, மோக விசேடம் இவற்றாலும் கர்ப்பம் இல்லை. [திருஅருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம் 360)

**குழந்தைகளின் பாலின உருவாக்கம் பற்றி வள்ளலார் கூறுவது என்ன?**

சுரோணிதப் பையிடத்தில் [கர்ப்ப பை] மூன்றுமணி சேர்ந்த கொத்து ஒன்று வலது புறத்திலும், நான்கு மணி சேர்ந்த கொத்து ஒன்று இடது புறத்திலும் இருக்கின்றன. சுரோணித சுக்கிலம் கலந்து கர்ப்பந் தரிக்கின்ற காலத்தில், மூன்று சேர்ந்த கொத்தில் [வலது புறத்தில் உள்ளது] சம்பந்தப் பட்டால் ஆண் குழந்தையும், நான்கு சேர்ந்த கொத்தில் [இடது புறத்தில் உள்ளது] சம்பந்தப்பட்டால் பெண் குழந்தையும் பிறக்கும்.

புணர்ச்சிக் காலத்தில் வலது புறம் சாய்வாக புணர்ந்தால் ஆணும், இடது புறம் சாய்வாகப் புணர்ந்தால் பெண் குழந்தையும் பிறக்கும். [திருஅருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம் 360)

சூரியக்கலை [பிங்கலை], சந்திரக்கலை [இடகலை] பற்றி வள்ளலார் கூறுவது என்ன?

1. சாதாரண ஜீவர்கள் சந்திரக்கலையில் இறப்பதும் பிறப்பதும் இயற்கை.
2. பக்குவர்கள் சூரியகலையில் பிறப்பதும் இறப்பதும் இயற்கை.
3. சூரியகலை அனுபவம் கிடைப்பது கஷ்டம்.
4. தினம் சூரிய கலையில் செல்லும்படி மனதை அந்தக் கண்களில் செலுத்தல் வேண்டும்.
5. சூரியக்கலையில்தான் தியானம் செய்யவேண்டும். [திருஅருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம் 398)

*"தோன்றின் புகழோடு தோன்றுக அஃதிலார்*
*தோன்றின் தோன்றாமை நன்று."*

என்பார் திருவள்ளுவர். ஒருவன் புகழோடு தோன்றுவது அவன் கையிலா இருக்கிறது. பிறக்கும்போது ஒன்றும் தெரியா குழந்தையாக பிறந்து அழுகிறோம். அக்குழந்தைக்கு, நாம் புகழோடு தோன்றினோமா, என்று எவ்வாறு தெரியும்?

இங்கு வள்ளலார் கூறியுள்ளதை சற்று பார்ப்போம். பக்குவர்கள் சூரியகலையில் பிறப்பார்கள் என்று கூறியுள்ளார். இது எவ்வாறு முடிகிறது? பக்குவர்கள் சூரியகலையில் இறப்பார்கள் என்கிறார் வள்ளலார். எனவே சூரிய கலையில் மூச்சு சரம் ஓடுகையில் ஒருவன் இறந்தால், அவனது மறுபிறவி கட்டாயம் சூரியகலை மூச்சு ஓட்டத்தில் ஆரம்பமாகும். இவ்வாறு சூரிய கலையில் பிறப்பவர்களே ஞானிகளாக ஆகமுடியும். எனவே நாம் நமது இந்த வாழ்நாளில் எப்போதும் சூரியக்கலையில் இருக்க பழகிக்கொள்வோம். முக்கியமாக இறக்கும் தருவாயை, நாம் உணர்ந்தால் சூரியகலை இருக்குமாறு பார்த்துக்கொள்ளவேண்டும்.

அப்படியில்லையேல் சுத்த சன்மார்க்க நெறியில் சாகா வரம் பெற்று அடுத்துத் தோன்றாமை / பிறவாமை நன்று. என்பதே இக்குறளின் உண்மை பொருளாக உள்ளது.

**சூரிய சந்திரக் கலைகள் இயற்கையாக நிகழும் நாட்கள் எவை எவை?**

சரம் பார்த்தல் என்பது, காலை நான்கு மணியிலிருந்து ஆறு மணிவரை பார்க்கவேண்டும்.

1. திங்கள், புதன், வெள்ளிக்கிழமைகளில் தவறாமல் நமது மூச்சு இடப்புறம் வரவேண்டும். அதாவது காலை நான்கு மணியிலிருந்து ஆறு மணிக்குள் பார்த்தால் இந்த மூன்று நாட்களிலும் நமது சரம் சந்திரக்கலையில் இயங்க வேண்டும்.

திங்கள் அன்று சூரியக்கலை ஓடினால் - தாயிடம் வெறுப்பு, ஆஸ்துமா, அலர்ஜி, ஜலதோசம், தலைவலி, கண், காது நோய்கள் உண்டாகும்.

புதன் அன்று சூரியக்கலை ஓடினால் - மாமனாரிடம் மதிப்பு போகும், தாய்மாமனிடம் உறவு கெடும், உடல் வலி, குடைச்சல், மூட்டு வலி வரும்.

வெள்ளி அன்று சூரியக்கலை ஓடினால் - பார்வை பழுதாகும், தாம்பத்ய உறவு கெடும்.

2. சனி, ஞாயிறு, செவ்வாய் கிழமைகளில் தவறாமல் நமது மூச்சு வலப்புறம் ஓடவேண்டும். அதாவது காலை நான்கு மணியிலிருந்து ஆறு மணிக்குள் பார்த்தால் இந்த மூன்று நாட்களிலும் நமது சரம் சூரியக் கலையில் இயங்க வேண்டும்.

சனிக்கிழமை சந்திரக்கலை ஓடினால், கடன் தொல்லை, சண்டை சச்சரவு, சரும நோய், ஜுரம் வரும்.

ஞாயிறு அன்று சந்திரக்கலை ஓடினால், தந்தையிடம் அன்பு குறையும், தொழிலில் அமைதி இருக்காது, தலைவலி, இருமல், சளி உண்டாகும்.

செவ்வாய் அன்று சந்திரக்கலை ஓடினால், உடன்பிறந்தோரிடம் பிணக்கு, வெப்பக்காய்ச்சல், கண் எரிச்சல், நெஞ்சுவலி ஏற்படும்.

3. வளர்பிறையில் வருகின்ற வியாழன் அன்று இடப்புறம் (சந்திரக்கலை) சுவாசம் நடைபெறவேண்டும். தேய்பிறையில் வருகின்ற வியாழன் அன்று வலப்புறம் (சூரியகலை) சுவாசம் நடைபெறவேண்டும்.

வியாழக்கிழமைகளில் மட்டும் பிறைக்குத் தக்க சரம் ஓடும். மேற்கண்டவாறு ஓடாமல் மாறி இயங்கினால், பெற்ற மக்களால் துயரம், அடிவயிற்று வலி, மலடு ஆதல் போன்றவை நிகழும்.

மேற்கண்டவாறு அந்தந்த நாட்களில் அந்தந்த சரம் ஓடவில்லை எனில் தக்க உபாயத்தினாலும் ஆசாரியரிடமும் பயின்று சர ஓட்டத்தை சரி செய்ய வேண்டும்.

**காரிய சித்திபெற சர ஓட்டம் பார்ப்பது எப்படி?**

நாம் சில முக்கிய காரியங்கள் செய்யும்முன், அச்செயலுக்கு ஏற்ற சர ஓட்டத்தை மாற்றிவிட்டு செய்தால் அது நிச்சயம் பலிக்கும். அல்லது சர ஓட்டத்திற்கு தக்கபடி செயல்களில் ஈடுபட்டால் செய்யும் காரியம் தோல்வியை தழுவாது, வெற்றியை கொடுக்கும்.

நமக்கு வலப்புறம் (பிங்கலை) மூச்சோட்டம் செல்லும்போது செய்யப்பட வேண்டிய காரியங்கள்:-

1. உணவு உட்கொள்வதற்கு.
2. குளிப்பதற்கு.
3. மலம் கழிப்பதற்கு.
4. முக்கியமானவரைக் காணுவதற்கு.
5. விஞ்ஞான, கணித ஆய்வு செய்வதற்கு.

6. கடினமான தொழில் செய்வதற்கு.
7. பணம் கோரி பெறுவதற்கு.
8. தன் பொருளை விற்பனை செய்வதற்கு.
9. நோய் தீருவதற்கு, மருந்து உட்கொள்வதற்கு.
10. போதனை செய்வதற்கு.
11. தீராத வழக்கு தீருவதற்கு.
12. உறங்குவதற்கு.

மேற்கண்ட காரியங்களை நமது மூச்சோட்டம் சூரியகலையில் இருக்கும்போது செய்ய, அவை சுபமாக முடியும். சூரியகலை ஆண்தன்மையுடையது.

நமக்கு இடப்புறம் (இடகலை) மூச்சோட்டம் செல்லும்போது செய்யப்பட வேண்டிய காரியங்கள்:-

1. தாகம் தீர்க்க நீர் அருந்துதல்.
2. பொருள் வாங்குதல்.
3. ஜலம் (சிறுநீர்) கழிப்பதற்கு.
4. சொத்துகள் வாங்குவதற்கும், பதிவு செய்வதற்கும்.
5. வீடுகட்ட, கடகால் தோண்டுவதற்கு.
6. புதுமனை புகுதல்.
7. சிகை அலங்கரிக்க.
8. ஆடை, ஆபரணம் வாங்குவதற்கு.
9. விவசாய நாற்று நடுவதற்கு.
10. தாலுக்கு பொன் வாங்குவதற்கு.
11. தாலி கட்டுவதற்கு.
12. கிணறு வெட்டுவதற்கு.
13. புதிய படிப்பு படிக்க.
14. அரசியல் அமைச்சர்களை பார்க்க.

மேற்கண்ட காரியங்களை நமது மூச்சோட்டம் சந்திரகலையில் இருக்கும்போது செய்ய, அவை சுபமாக முடியும், என்று ஞான சர நூல் கூறுகிறது. சந்திர கலை பெண் தன்மையுடையது.

நமக்கு இருபுற நாசியிலும் (சுழுமுனை) மூச்சோட்டம் சில நேரங்களில் மட்டுமே செல்லும். அந்நேரத்தில் நாம் இறைநினைப்புடன் தியானம் செய்ய சமாதி நிலை கிட்டும். முனிவர்கள், சித்தர்கள், இறையாளர்கள், அருளாளர்கள் எப்பொழுதும் தமது கலை திறனால் தமது மூச்சினை சுழுமுனையில் நிறுத்தி யிருப்பார்கள். அப்போதுதான் இறைநிலை விரைவில் கிடைக்கும்.

யாருக்கேனும் சுழுமுனை ஓட்டம் இருப்பின் அவர்கள் மௌனமாக அமைதியாக இருக்கவேண்டும். ஏனெனில் அந்நேரத்தில் நாம் என்ன சொன்னாலும் அது பலிக்கும். நல்லது மற்றும் கெட்டது என்ற வித்தியாசம் இல்லாமல் எது சொன்னாலும் பலித்துவிடும். எனவேதான் மேற்கண்ட இறையாளர்கள் கடிந்து ஒரு சாபமிட்டால் அது பலித்துவிடும். சுழுமுனை அழிவின் சக்தியாக உள்ளது. அதீத சக்தியுடையது. ஆண், பெண் தன்மையற்ற அலி தன்மையுடையது. எனவே சரம் தெரிந்தவர்களிடம் நாம் விளையாட்டாக நடந்துக்கொள்ளக்கூடாது.

பெரும்பாலும் சுழுமுனை இயக்கம் பகல் 12 மணி அல்லது இரவு 12 மணிக்கு நடைபெறும். பாதி இரவில் பாவியேனை எழுப்பி தன்னுடன் இறைவன் கலந்ததாக வள்ளலார் கூறுவார். இறைவன் பாதி இரவில் வரக்காரணம், அந்நேரத்தில்தான் நமக்கு சுழுமுனை இயக்கம் நடைபெறும்.

**இன்னும் சில உபாயங்களைக் காண்போம்.**

1. எந்த ஒரு பயணத்தையும் சந்திரக்கலையில் துவங்கி சூரியக்கலை நடக்கும்போது செல்லவேண்டிய இடம் சென்றால் சென்ற காரியம் நிச்சம் வெற்றி.

2. சரம் ஓடும் பக்கம் "பூரணம்" என்று பெயர். சரம் ஓடாத பக்கம் "சூன்யம்" என்று பெயர். நம் வழக்கில் நாம் வெற்றிபெற, நம்மை பார்க்க வருபவரை சூன்ய பாகத்தில் நிறுத்தி, அதாவது நமக்கு மூச்சு ஓடாத பாகத்தில் அவரை நிறுத்தி பேசினால் நமக்கு வெற்றி கிடைக்கும். இதனை, அவர் சந்தேகம் ஏற்படாதவாறு செய்யவேண்டும். அல்லது சர கலை தெரிந்தால் அவர் எந்தப்பக்கம் இருக்கிறாரோ அந்த பக்கத்தில் நமது மூச்சின் ஓட்டத்தை தடுத்து மறு பக்கத்தில் ஓடவிடுவதின்மூலம் இதனை சுலபமாக செய்யலாம்.

3. சந்தரக்கலை நடக்கும்போது மேற்கும், தெற்கும் நோக்கிப் போனால் எடுத்தக்காரியம் அனைத்திலும் வெற்றி.

4. சூரியக்கலை நடக்கும்போது வடக்கும், கிழக்கும் நோக்கிப் போனால் எடுத்தக்காரியம் அனைத்திலும் வெற்றி.

5. மூச்சு உள்ளே இழுக்கும்போது வேண்டிய விருப்பம் நினைக்க அவை கைகூடும்.

6. மூச்சு வெளியே போகும்போது நமக்கு வேண்டாததையும் வெளியே தள்ளலாம். காமமே போ, சினமே போ, வறுமையே போ, சாவே போ என்பது போல சிந்தனை செய்ய அவை நடக்கும்.

**சர ஓட்டத்தின்படி தம்பதிகள், விரும்பிய குழந்தைகளை பெறுவது எப்படி?**

'நாத விந்து கலாதி நமோ நம
வேத மந்திர சொரூப நமோ நம்' (திருப்புகழ்)

நாதத்திற்கும் (பெண்களிடமுள்ள ஜீவசக்தி) விந்துவிற்கும் (ஆண்களிடமுள்ள ஜீவசக்தி) முதல் வணக்கத்தை தெரிவித்த பின்புதான் இறைவனுக்கே வணக்கம் செலுத்துகிறார் அருணகிரிநாதர். ஏனெனில் இந்த நாத விந்து இயக்கங்கள்தான் இவ்வுலகத்திற்கு அச்சாரம். 'எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க' என்பார் வள்ளலார். அப்படி எல்லா உயிர்களுக்கும் இன்புற்று வாழ இந்த நாதமும் விந்துவும் தேவைப்படுகிறது. இவைகள் இன்றி இந்த உலகம் இயங்காது. எனவேதான் நாதத்தை சக்தியாகவும், விந்துவை சிவனாகவும் உருவகப்படுத்தி இந்து மதம் பல கதைகளை சொல்லியிருக்கிறது. நாம் அனைவருமே நாதவிந்து சொரூபிகளே!

ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகில் பெண்ணாகும்
பூணிரண்டொத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகுமாகில் தரணி முழுதாளும்
பாணவமிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே. (திருமந்திரம்)

குழவியும் ஆணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவியும் அலியாம் கொண்டகால் ஒக்கிலே (திருமந்திரம்)

கரு தரிக்கும் காலத்தில் ஆணுக்கு வலப்பக்கம் மூச்சு சென்றால் அதே சமயம் பெண்ணுக்கு இடது நாசியில் மூச்சு சென்றால் பிறக்கும் உயிர் ஆணாகும்.
மாறாக பெண்ணுக்கு வலப்பக்கம் மூச்சும் ஆணுக்கு இடப்பக்கம் மூச்சும் சென்றால் தரிக்கும் உயிர் பெண்ணாகும்.
இரண்டு பேருக்கும் ஒரே பக்கம் மூச்சு ஒத்திருந்தால் பிறக்கும் உயிர் அலியாகும்.
விந்து வெளிப்படும்போது அபானவாயு அதனை எதிர்க்குமானால் ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் தரித்துப்பிறக்கும்.
எனவே, நாம் விரும்பும் குழந்தையினை பெற்றெடுக்கும் இரகசியம் நமது மூச்சில்தான் உள்ளது.

## யந்திரங்கள் அதன் வகைகள்

- யந்திரங்கள் என்று கூறினால் நம்முடைய எண்ணத்தை செயல்படுத்த பயன் படுகின்றது .யந்திரங்கள் பொதுவாக உலோகங்களில் தான் எழுது கிறார்கள்,

- அக்காலத்தில் உலோகங்கள் கிடைக்காத பட்சத்தில் அவர்கள்ளந்த மரத்திற்கு ஆகாயத்திற்கும் பூமிக்கும் இடையே கதிர் வீச்சை ஏற்படுத்துகிற சக்தி இருக்கிறது என்று கண்டறிந்து,.

- அதில் எது நல்லவை செய்யும் எது தீமைகள் செய்யும் எனது நிறுத்தி வைக்கும் எது வரவழைக்கும் என்று அறிந்து அதற்கான மரங்களை உபயோகப்படுத்தினர் .

## அஷ்ட கர்மங்களுக்கான மரங்கள்

- 1. வசியம் -------- வில்வ பலகை
- 2. உச்சாடனம்------ பலாப்பலகை
- 3. மோகனம் ------- மாம்பலகை
- 4. தம்பனம் ------- ஆலம்பலகை
- 5. ஆகர்சனம் ----- தேவதாரு பலகை
- 6. பேதனம் ------- தில்லை பலகை
- 7. வித்வேடனம் ---- எட்டி பலகை
- 8. மாரணம் ------- அத்திப்பலகை

## இப்போது அஷ்ட கர்மத்திர்கான உலோகங்கள்

- 1. வசியம் -------- காரியத்தகடு
- 2. உச்சாடனம்------ வெள்ளி தகடு
- 3. மோகனம் ------- தங்க தகடு
- 4. தம்பனம் ---- செம்பு தகடு
- 5. ஆகர்சனம் -------வெள்ளி தகடு
- 6. பேதனம் -------- இரும்பு தகடு
- 7. வித்வேடனம் ---- குருதது ஓலை
- 8. மாரணம் -------- வெள்ளி தகடு

- இப்படியும் யந்திரங்களை பயன் படுத்தலாம் எல்லா விசயங்களுக்கும் செவ்வாய் வெள்ளி பொதுவானதாக கருதப்படுகிறது ,ஒவ்வொருவரும் தனக்கு தேவையான யந்திரத்தை வரைந்து உருவேற்றலாம் .

- பனை ஓலை குருத்து ஓலையாக பார்த்து எடுத்து யந்திரங்கள் வரையலாம் அதற்கும் அதிகமான மின்சார சக்தி உள்ளது நம்முடைய எண்ணங்களை உடனே நிறைவேற்ற கூடியது .

- அதுமட்டும் இல்லாமல் சாதாரண பேப்பரில் கூட பச்சை மையுள்ள பேனாவால் எழுதி உருவேற்றி நமது பாக்கெற்றில் வைத்து கொள்ளலாம்

- விபூதியில் யந்திரம் வரையலாம் ,குங்குமத்தில் வரையலாம் சந்தனத்தில்; வரையலாம் .இப்படி யந்திரங்களை அந்தந்த சமயத்தில் எது கையில் கிடைக்கிறதோ அதில் வரைந்து பல காரிய சாதனைகளை நிகழ்த்தி உள்ளார்கள் .

**மூலிகை வித்தைகள்**

உலகத்தில் உள்ள ஒவ்வொரு மூலிகைகளுக்கும் சாபம் உண்டு ,அதைப்போல ஒவ்வொரு மூலிகைகளுக்கும் ஒவ்வொரு தன்மை உண்டு.மனிதன் தன்னுடைய தன்மையை குணத்தை அடிக்கடி மாற்றி கொண்டே இருப்பான் அவனால் ஒரு சரியான தன்மையால் இருக்க முடியாது .அப்படி ஒரே தன்மையோடு இருந்து விட்டான்ஆனால் அவன் பக்குவமடைந்த மனிதனாக மாறிவிடுகிறான் .மூலிகைகள் தன்னுடைய குணத்தை எப்பொழுதும் மாற்றுவதில்லை .

அதனால் தான் மனிதனால் ஆகாத காரியங்கள் கூட மூலிகை வைத்து செய்தால் எளிதில் வெற்றியடையலாம் மூலிகையை காப்புக்கட்டி எடுப்பதனால் அதன் உயிர் அதன் வேரிலே தங்கி அதனுடைய தன்மையை வெளிக்காட்டுகிறது .

அக்காலத்தில் எந்த மூலிகை என்ன செய்யும் என்று ஆராய்ந்து பார்த்து அதற்கான மூலிகையை வைத்து பல காரியங்கள் செய்தார்கள் .அதுதான் மூலிகை வித்தைகள் ,மை வித்தைகள் ,யந்திரங்களோடு மூலிகை வேறை பயன்படுத்து காரியமாற்றுதல், வெறும் மூலிகை யிலே மந்திர உரு ஏற்றி மோதிரம் அல்லது தாயத்து கட்டுதல் என்று பல சூட்சமமான விசயங்கள் இந்த இந்த மூலிகை வித்தையில் உள்ளது

வெறும் மூலிகையில் உருவேற்றும் பொது அதில் மந்திர உருக்கள் தங்க வேண்டுமானால் அதற்கு அஷ்ட கர்மங்களுக்கும் ஒவ்வொரு வகை நூல் உள்ளன அந்த நூல்களை சுற்ற வேண்டும் ஜெபிக்கும் பொது சுற்றிகொண்டே ஜெபிக்க வேண்டும் அப்படி ஜெபித்தால் நாம் ஏற்றிய மந்திரங்கள் அந்த நூலிலேயே தங்கி நல்ல பலனை நமக்கு அழிக்கிறது .

நான் திரு முத்து பாண்டி வைத்தியர் என் தாத்தாவின் உதவியோடு மிகவும் ஸ்டைலாக ஆக கையில் அணிய மோதிரம் கயிறுகள் கழுத்தில் அணிய தாயத்து தயாரித்து உபயோகிக்கிறேன் .அதனால் வெளியில் சென்றால் நல்ல மரியாதையும் நான் பேசுவதை சபையில் எல்லோரும் கேட்பார்கள் என்னை சுற்றி எப்போதும் பத்து பேர்கள் இருப்பார்கள் அவ்வளவு வசீகரம் அந்த பொருட்களுக்கு பெண்களும் நல்ல மரியாதையும் கொடுப்பார்கள் .

**அள்ள அள்ள குறையாத செல்வத்திற்கு அஷ்ட லக்ஷ்மி யந்திரம்**

இந்த அறிய வகை யந்திரம் தமிழகத்தில் எங்கும் கிடைப்பதற்கு வாய்ப்பே இல்லை ஏனென்றால் எங்கள் பரம்பரையில் இந்த யந்திரம் காலம் காலமாக உபயோகப்படுத்தப்பட்டு வருகிறோம் .

இந்த யந்திரத்தால் அனைத்து வகையான செல்வங்களும் காரியத்தடைகளை நீக்கி ஸ்ரீ மஹா லக்ஷ்மியின் அருளால் சகல நன்மைகளும் உண்டாகும் .இந்த அஷ்ட லக்ஷ்மி யந்திரத்தை வீட்டின் பூஜை அறையில் வைத்து வழிபாடு செய்யலாம் .அல்லது கடைகளில் தொங்க விடலாம் .வியாபார ஸ்தலங்களில் வைக்கலாம் .

**செல்வ வளத்திற்கான யந்திரங்கள் பல வகை உள்ளது அதில்**

மஹா லக்ஷ்மி யந்திரம்
லட்சுமி யந்திரம்
அஷ்ட லக்ஷ்மி யந்திரம்
ராஜ வசிய யந்திரம்
லக்ஷ்மி குபேர யந்திரம்
குபேரன் யந்திரம்
அஸ்வ ஆருட யந்திரம்
காரிய சித்தி யந்திரம்
முக வசிய யந்திரம்
பஞ்சாட்சர வசிய யந்திரம்

இன்னும் பல வகைகள் எட்டில் உள்ளன இவைகள் யாவும் தற்போது பயன் பாட்டில் உள்ளன அதிக மான ஜோதிடர்கள் குரிசொல்பவர்கள் இந்த மாதிரி யந்திரத்தையே அதிகம் வாங்கு கின்றனர் .

யந்திரங்கள் பொதுவாகவே கையால் எழுதி பூஜை செய்து உருவேற்றி கொடுத்தால் மட்டுமே முழு பலனை தரும் கடைகளில் வாங்கும் பிரிண்ட் செய்த யந்திரங்களால் எந்த பயனும் கிடையாது .

அதைப்போல வீடுகளில் வைக்கும் யந்திரங்கள் மிகவும் லேசானதாக இருக்க வேண்டும் சிலையின் அடியில் வைப்பது வேண்டுமானால் தடிமனாக இருந்தாலும் பரவாயில்லை .

இப்படி யந்திரங்களில் பல சூட்சம ரகசியங்கள் உள்ளன .

**நவக்கிரக பாதிப்பிற்கான யந்திரங்கள்**

நவக்கிரகங்கள் ஒன்பதுவும் நேரடியாக ஒவ்வொரு மனிதனையும் பாதிக்கின்றன .கிரகங்களில் இருந்து வரும் கதிர்வீச்சானது நேரடியாக மனிதனை சோர்வுறச்செய்கிறது. மனிதனின் மனத்தை மாற்றுகிறேது பெண்கள் மேல் மோகமுறச்செய்கின்றது என்ன செய்தால்என்ன என்ற ஒரு ஆணவம் ஏற்படுகிறது எல்லாம் எனக்கு தெரியும் என்ற அகங்காரம் ஏற்படுகின்றது.

இந்த காரணங்களால் மனிதன் மீள முடியாத கடன் தொல்லைக்கு ஆளாகின்றான் .அல்லது பெரிய பிரச்சனைகளில் மாட்டிக்கொண்டு சிக்கி தவிக்கின்றான் .இந்த கிரகங்கள் அவனை மட்டும் அல்லாமல் அவன் குடும்பமும் தனால் பாதிப்புக்குள்ளாகிறது .

இப்படிப்பட்ட நவக்கிரக பாதிப்பிலிருந்து விடுபட வேண்டுமானால் கிரகங்களிலிருந்து ஒரு கதிர் வீச்சு மனிதனை தாக்குகிறது .அந்த கதிர் வீச்சானது நமக்கு நன்மை செய்யும் விதத்தில் அமைத்து கொள்ள நம்மிடம் யந்திரங்களில் மந்திர உருக்கள் ஏற்றி வைத்திருந்தால் இந்த யந்திரத்திலிருந்து ஒரு வகையான நல்ல கதிர்வீச்சு நமக்கு நன்மை அளிக்கும் விதத்தில் இருக்கும்

.பெரிய மகான்கள் முனிவர்கள் சித்தர்கள் இவர்களுக்கு ஏன் கிரக பாதிப்புகள் வருவதில்லை ஏனென்றால் இவர்கள் உடம்பில் இருந்து ஒரு தெய்வீக சக்தி பிரகாசிக்கும் அதற்கு காரணம் என்னவென்றால் அவர்கள் கூறிய மந்திர ஒலி அதிர்வுகள் தான்.

இப்படி நாம் அனைவருக்கும் கிரகங்களின் பாதிப்புகள் தோஷங்களில் இருந்து விடுபட வேண்டுமால் எந்த கிரகம் பலகீனமாக இருக்கிறதோ உங்கள் ஜாதகத்தில் அதனை கண்டறிந்து அதற்கான எந்திர தாயத்துக்கள் கிலோ கழுத்திலோ அணியலாம் இல்லைஎன்றால் எந்த ஒரு கிரகத்தினாலும் பாதிப்ப் அடையாமல் என் குடும்பத்தை பாதுகாக்க வேண்டும் என்றால் அதற்கான யந்திரங்களை வீட்டில் பூஜை அறையில் வைத்து வழி படலாம் .இந்த முறை மிகவும் சிறந்த முறை .

**நவக்கிரகங்களால் ஏற்படும் பாதிப்புகள் :**

நோய் நொடிகள் உருவாகின்றன.
உடல் சோர்வு
வேலை செய்யும் இடத்தில் தூக்கம் வருதல்
நான் என்ற அகங்காரம் ஏற்பட்டு யாரிடமும் ஆலோசனை கேட்காமல் ஒரு சில கடன்தொல்லைகளில் அகப்படுதல் .
வாகன விபத்துக்கள் ஏற்படுதல்
வீட்டில் உள்ளவர்களுக்கு நோய் வந்து வந்து போகும்
கெட்ட கனவுகள் வருதல்
வாழ்க்கையை பற்றிய பயம் ஏற்படுதல்
தன்னம்பிக்கை இல்லாமை .

**நிவர்த்தியாக்கும் யந்திரங்கள் :**

நவக்கிரக யந்திரம்
சூரியன் யந்திரம்
சந்திரன் யந்திரம்
செவ்வாய் யந்திரம்
புதன் யந்திரம்
குரு யந்திரம்
சனி யந்திரம்
ராகு யந்திரம்
கேது யந்திரம்
செவ்வாய் தோஷ யந்திரம்
திருமண தடைக்கான யந்திரம்
களத்திர தோஷம் யந்திரம்
பித்ரு தோஷம் யந்திரம்
குடும்ப தோஷம்
சகோதர தோஷம்
மனை தோஷம்
புத்திர தோஷம்
பூர்வீக சாப தோஷம்
செய்வினை தோஷம்
நாக தோஷம்
பட்சி தோஷம்
மாங்கல்ய தோஷம்
தார தோஷம்
கால சர்ப்ப தோஷம்

பித்ரு தோஷம் குல தெய்வ தோஷம்
மாந்தி தோஷம்

இந்த ஜோதிட சம்பந்தமான தொஷங்களுக்கான யந்திரங்கள் கிடைக்கும் நல்ல முறையில்; யந்திரங்கள் முறைப்பாடு உருவேற்றி கொடுக்கப்படும் ஜோதிடர்கள் குறி சொல்பவர்கள் தனிநபர்களும் பெறலாம் மிகவும் சக்தி வாய்ந்தவைகள் பல தலைமுறை கண்ட அனுபவ சாத்திர முறைகள் .

**கண்ணை மறைக்கும் வாதை எனும் தேவதை**

எங்கள் பகுதிகளில் இந்த வாதை உலவுவதாகவும் அதனால் தான் வாகன விபத்துக்கள் ஏற்படுவதாகவும் .இப்போதும் கூறப்பட்டு வருகிறது .அதை வழிபாடு நடத்தி வருவதாகவும் கூறுகிறார்கள்

இதைப்பற்றி முத்துபாண்டி வைத்தியரிடம் கேட்டதற்கு இந்த விசயங்கள் அனைத்தும் உண்மைதான் வாதை எனும் தேவதை உண்மையிலேயே உண்டு அதற்கு தேவையானதை கொடுத்தால் நமக்கு தேவையான வேலைகளை அது செய்யும் .

எங்களது தோட்டம் சுமார் 5 ஏக்கர் சுற்றளவு இருக்கும் அந்த தோட்டத்தை சுற்றி 21 கற்கள் நடப்பட்டு இருக்கும் அந்த கற்கள் எதற்காக நடப்பட்டு இருக்கிறது என்று கேட்டால் அதுதான் வாதை இருந்த இடம் என்று கூறினார்கள் .

எங்கள் தாத்தாவின் அப்பா அவர் பெரிய மாந்திரீகர்தான் அவர் என்ன செய்தார் என்றால் கேரளாவிற்கு சென்று அங்கு உள்ள காணி காரர்கள் என்று கூறுவார்கள் அவர்கள் கேரளாவில் பெரிய மாந்திரிகர்கள் அவர்களிடம் இருந்து 21 வாதைகளை வாங்கி விட்டு அங்கிருந்தே நடந்து மேளம் அடித்து கொண்டே கொண்டு வந்து விட்டார் அதை எங்களது தோட்டத்தை சுற்றி 21 கற்கள் நட்டு வைத்து அதில் பிரதிஷ்டை செய்து பயன் படுத்தி வந்திருக்கிறார்

இந்த வாதை தேவதையை ஏன் தோட்டத்தில் வைத்தார் என்றால் திருடர்கள் தோட்டத்திற்கு னுள்ளே வந்து விட்டு வெளியே செல்ல முடியாது ஏனென்றால் வழி தேடி தேடி அலைந்தாலும் கிடைக்காது அந்த தோட்டத்தில் இருந்து வெளியே செல்வதற்கான வழி அவரால் கண்டு பிடிக்க முடியாது இப்படி இந்த வாதையானது அவர்களின் கண்ணை மறைத்து விடும் .

அப்போது இந்த 21வாதைகளுக்கும் வாரம் ஒரு முறை கோழி பலியிட்டு படையல் வைத்து பயன் படுத்தி வந்திருக்கிறார்

இந்த வாதை தான் வாகனங்கள் ஓட்டி செல்லும் பொது திடீர் என்று நம்மை அறியாமல் விபத்துக்கள் ஏற்படுவதற்கு காரணம் இந்த வாதை தான் வாகனங்கள் ஓட்டுபவரின் சிந்தையை மயக்கி என்ன நடந்தது என்றே தெரியாத அளவிற்கு செய்து விடும் .

**திருமண தடை நீங்க யந்திரம்**

இப்போது தமிழகத்தை பொறுத்த வரையில் எல்லா குடும்பத்திலும் நம் மகனுக்கு நல்ல வரன் அமைய வில்லையே நாம் நினைத்த அளவிற்கு பெண் கிடைக்க வில்லையே?பையனின் வயது அதிகம் ஆகிக்கொண்டே போகின்றது .என்ன செய்யலாம் .

ஜோதிடர்கள் கூறினார்கள் என்று தோஷங்கள் எல்லாம் கழித்து விட்டோம் அதற்கு பிறகும் திருமணம் கூட வில்லையே என்று ஒவ்வொரு குடும்பத்தாரும் தத்தளிக்கின்றனர் .

அதி சரி செய்வதற்காக நாங்கள் அதற்கான யந்திரங்கள் தாயத்துக்கள் மஞ்சள் அல்லது திருநீறு குங்குமம் என்று பல முறைகளில் இந்த களத்திர தோஷத்தை களைவதற்கான எந்திரங்கள் இருக்கின்றன .அதன் படி நீங்கள் செய்தால் நிச்சயமாக 41 நாட்களுக்குள் நல்ல வரன் அமையும் என்பது உறுதி திரு முத்துபாண்டி வைத்தியர் அவர்கள் வாய் பேசாதவர்கள் ஊனமுற்றவர்களுக்கு கூட யந்திரங்கள் கொடுத்து பலருக்கு திருமணம் நடந்திருக்கிறது ..

உங்களது தோஷம் உங்களை விட்டு விலகி நின்றால் திருமண தடை எல்லாம் நீங்கி விடும் .அதற்கான முயற்சிதான் இந்த யந்திர பிரயோக முறைகள் .இதன் படி நீங்கள் வாங்கி அணிந்து பாருங்கள் .நிச்சயம் நல்ல வரன் அமையும் என்பது உறுதி

**திருமண தடைக்கான காரணங்கள் :**

- பெண்வீட்டார் என்றால் பெண்ணுக்கு கொடுக்க போதிய பணம் இருக்காது இதுவும் ஒரு வகையான திருமண தடைதான் இதையும் சரி செய்யலாம்
- நமது அந்தஸ்துக்கு தகுந்த கணவன் கிடைக்க வேண்டும் கிடைத்தாலும் அது எதோ ஒரு வழியில் தவறி போய் விடும்
- எவ்வளவோ தேடியும் அழகான குடும்பத்தில் பெண் கிடைத்தால் கடைசியில் ஜாதக பொருத்தம் இருக்காது
- நமது ஊருக்குள்ளேயே நல்ல பெண் அமைந்தால் யாராவது நம்மை பற்றி தவறான விசயங்களை கூறி மனம் மாற்றி விடுவார்கள்

- நாம் நேசித்த பெண்ணை திருமணம் முடிக்க வேண்டுமென்றால் அவர்கள் குடும்பத்திலோ அல்லது நம் குடும்பத்திலோ சம்மதிக்க மாட்டார்கள் .

இப்படி பல விதங்களில் தடை களத்திர தோஷம், செவ்வாய் தோஷம், மாங்கல்ய தோஷம் ,இப்படி பட்ட தோஷங்கள் எல்லாம் நம்மிடம் பாதுகாப்பான நல்ல கதிர்வீச்சுகள் இல்லாத காரணத்தினால் தான் நம்மை வந்து தாக்குகின்றன .அதனால் நாங்கள் கொடுக்கும் யந்திரங்கள் கிரகங்களினால் வரும் பாதிப்புகளை அகற்றி நல்வாழ்வுக்கு வழிவகுக்கும் .

**இசக்கி அம்மன் மந்திர பிரயோகம்**

எங்கள் பகுதிகளில் இசக்கி அம்மன் என்று ஒரு காவல் தெய்வத்தை தெய்வமாக வணங்கி வருகின்றனர்.அவரவர் தோட்டத்தில் கன்னி மூலையிலே இந்த தெய்வத்தை பிரதிஷ்டை செய்து அதற்கு எண்ணெய் மஞ்சனம் என்று குங்குமங்கள் சாத்துவார்கள் அதை குளிமை படுத்துவதற்காக நல்லெண்ணெய் சாத்துவார்கள் அதற்கு சிவப்பு பட்டு உடுத்தி அரளி மாலை அணிவிப்பார்கள்

இந்த தேவதையானது இடது புறம் இடுப்பில் ஒரு குழந்தையை வைத்து கொடு இருக்கும் ஒவ்வொருவர் தோட்டங்களிலும் காவல் தெய்வமாக இருந்து வருகிறது .இதற்கு ஒரு கருங்கல் நடப்பட்டு இதற்கு பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்திலே அதற்கு பொங்கல் வைத்து பலி கொடுத்து கொடை விழா போல சிறப்பாக நடத்துவார்கள் ஒவ்வொரு தோட்டங்களிலும் .

இந்த தெய்வத்தை வைத்து பல மாந்திரீக வேலைகளை மாந்திரீகர்கள் செய்வார்கள் இந்த விஷயம் மிகவும் சூட்சமமான விஷயம் இது எனது தாத்தா முத்து பாண்டி வைத்தியர் கூறிதான் எனக்கு இதை போல பல விஷயங்கள் தெரிய வந்தது இப்போது கூட தினமும் பாடம் எடுப்பார் .

**இசக்கி அம்மன் வசியம்**

இந்த இசக்கி அம்மனை வசியம் செய்து சித்தி செய்து கொண்டால் ஒருவர் குடும்பத்தை அளிக்க வேண்டும் என்று கூறினால் அந்த குடும்பத்திற்கு வரும் நல்ல விசயங்கள் யாவும் தடை பட்டு நிற்கும் நோய் நொடிகள் அதிகம் வரும் அவர்கள் வீட்டில் யார் மேலாவது ஆட்டம் வரும் சாமி ஆட்டம் ,இப்படி அந்த குடும்பத்தை உபத்திரம் செய்யும் . இப்படி இந்த தேவதையை வசியம் செய்யாமலும் பல விஷயங்கள் செய்யலாம் அது ஒரு குறுப்பிட்ட தூரம் வரைதான் வேலை செய்யும் இந்த தேவதை வைத்து மாந்திரீக வேலை செய்வதால் இதற்கு வாரம் ஒரு முறை கோழி பலியிட வேண்டும் .சரியான தருணத்தில் கொடுக்க வில்லை என்றால் அந்த தேவதை நம் வீட்டில் உள்ளவர்களை நிம்மதியாக இருக்க விடாது .

**ஏவல் செய்தால் இப்படித்தான் நடக்கும்**

இந்த தேவதை நமக்கு நல்ல முறையில் வேலை செய்யும் நாம் ஏவல் செய்த இடம் மிகுந்த பக்தி உள்ளவர்களாகவும் தெய்வ பலம் அதிகம் உள்ளவர்களாகவும் இருந்தால் அது மறு படியும் நம்மிடம் வந்து உபத்திரம் செய்யும் இந்த தேவதை வைத்து மாந்திரீகம் செய்தால் பல் இன்னல்களுக்கு ஆளாக வேண்டி இருக்கும் .

அதனால் பெரிய தெய்வங்களை நாம் சித்தி செய்து கொண்டால் நமக்கு எந்த பயமும் வேண்டாம் இந்த விசயங்கள் யாரும் வெளி விட மாட்டார்கள் நான் தான் நிறைய ஆன்மிக அன்பர்கள் சரியான குரு கிடைக்காமல் அல்லல் படுகின்றனர் அவர்களுக்கு இந்த விஷயங்கள் மிகுந்த பயன் உள்ளதாக இருக்கும் .

**சீறி அழும் குழந்தைகளுக்கான கணபதி யந்திரம்**

நிறைய வீடுகளில் குழந்தைகள் இருக்கும் இந்த குழந்தைகள் மட்டும் ஏன் அழுகிறது எதற்காக அழுகின்றது என்று பெற்ற தாயாராலே கண்டுபிடிக்க முடியாத ஒரு சூழ்நிலையில் பல குடும்பங்கள் தத்தளிக்கின்றது .அதற்கு காரணம் என்ன என்றால் அவர்களுக்கு இந்த யந்திர மந்திரங்களின் மேல் நம்பிக்கை இல்லாததுதான் காரணம்

**எங்கள் அனுபவங்கள்**

சிறு குழந்தைகள் திடீர் திடீர் என பயந்து அழுது விடும் அந்த இடத்தில் யாரும் வந்து பயம் காட்ட கூடிய வாய்ப்பே இல்லை ஆனாலும் குழந்தை அழுகின்றதே ஏன்? ,

அடுத்து இரவு நன்றாக குழந்தை தூங்கி கொண்டிருக்கும் பொது திடீர் என அழும் .திடீர் என பேதி ஆகும் அதற்கு மருத்துவரிடம் காண்பித்தால் எந்த பிரச்சனையும் இல்லை என்று கூறுவார்கள் .

இப்படி எதனால் ஆகிறது என்றால் இளம் குழந்தை மனோதிடம் இல்லை எந்த ஒரு தேவதையும் வந்து உடலின் உள்ளே ஏறி பல இன்னல்களை கொடுக்கும் அடிக்கடி நோய் வந்துகொண்டே இருக்கும் .இதனைத்தான் பால கிரக தோஷம் ,பாலாரிஷ்டம் என்று கூறுவார்கள்

இந்த தோஷங்களில் இருந்து நீங்க வேண்டுமானால் எங்களிடம் கணபதி உள்ளதை அதை வாங்கி குழந்தயின் இடுப்பிலோ அல்லது கழுத்திலோ அணிந்து கொண்டால் எந்த ஒரு தேவதைகளும் இக்குழந்தையிடம் அணுகாது பாது காத்து கொள்ளலாம்

எதற்காக இதில் கணபதியை குறிப்பிட்டுள்ளோம் என்று கூறினால் தொஷங்களுக்கே தோஷம் கொடுப்பவர் கணபதி என்கிற காரணத்தால் கணபதி யந்திரத்தை அணிந்து கொண்டால் எல்லா தோஷங்களும் பறந்தோடும்

இது தவிர பல தேவதைகள் குழந்தைகளை அண்டும் அதனை இந்த தேவதைதான் இந்த குழந்தையின் உடலில் இருக்கிறது என்று கண்டறிய ஒவ்வொரு தேவதைகளும் வித விதமான அறிகுறிகளை உடலில் காட்டும் அதை வைத்து கண்டுகொள்ளல் வேண்டும்

**தேவதைகளின் பெயர்கள்**

தாட்சி வாட்சி
நீலகண்டி
விரோத கன்னி
உத்திர காலாக்கினி
சின்னு
வைத்திரி
உத்திர கவுரி
மாதங்கி
குணத்தி வாயாக்கினி
ஆகஞ்சு
சடாதரி
அரக்கி உச்சங்கி
பிடாரி
மடன்
மயான ருத்திரி
தெய்வக்கன்னி

இந்த தேவதைகளின் பிடியில் குழந்தைகள் இருந்தால் அந்த குழந்தையின் உடலில் பல நோய்கள் வரும் சோர்வு ,வாந்தி,பாலுண்ணாது இப்படி நோய்கள் வந்தனுகும் இதற்கென்று தனித்தனியாக பூஜை முறைகள் உண்டு அதை விட கணபதி யந்திரமே சிறந்தது .இந்த கணபதி யந்திரத்தை கொடுத்து அனுபவத்தில் பல குழந்தைகள் சரியாக ஆகி இருக்கின்றனர் அதனால் தான் நாங்கள் இதை கூறுகின்றோம் .

**அஷ்ட கர்மங்கள் செய்ய தெரிந்திருக்க வேண்டியவைகள்**

அஷ்ட கர்மங்கள் என்னும் எண் தொழில்கள் செய்ய வேண்டுமானால் அதற்கான விதி முறைகள் சரி வர பயன் படுத்தவில்லை என்றால் அந்த வேலைகள் வெற்றி அடையாது .

அதற்காக நாம் எந்த திசை எந்த கிழமை எந்த திரி எந்த எண்ணெய் என்று சரியாக பயன் படுத்தினால் மட்டுமே வெற்றியடைய முடியும் .

எண்ணெய் மற்றும் திரிகள்

| அஷ்ட கர்மங்கள் | | எண்ணெய் & திரி |
|---|---|---|
| 1. வசியம் | | காராம் பசு நெய் & தாமரை நூல் திரி |
| 2. தம்பனம் | - | ஆதளைக்கொட்டை எண்ணெய் & பஞ்சுத்திரி |
| 3. மோகனம் | | நல்லெண்ணெய் & கன்னி நூல் திரி |
| 4. உச்சாடனம் | | புங்கெண்ணெய் & இலவம்பஞ்சு திரி |
| 5. பேதனம் | | புன்னைக்கொட்டை எண்ணெய் & துணித்திரி |
| 6. ஆகர்ஷணம் | | எரண்டத்துஎண்ணெய் & வெள்ளெருக்கன் திரி |
| 7. வித்வேஷனம் | - | பசு+ஆடு+பன்றி நெய் & தாமரை நூல்திரி |
| 8. மாரணம் | | வேப்பெண்ணெய் & வேலிப்பருத்தி திரி |

மேலே சொல்லிய எண்ணெய் மற்றும் திரி வகைகளை போட்டு விளக்கேற்றி அந்தந்த காரியங்களுக்கு உண்டான மந்திரங்களை ஜெபம் செய்ய அந்த காரியங்களில் எளிதில் வெற்றியடையலாம்.

**கிழமைகள்**

| அஷ்ட கர்மங்கள் | | கிழமைகள் |
|---|---|---|
| 1. வசியம் | | ஞாயறு |
| 2. தம்பனம் | - | புதன் |
| 3. மோகனம் | | திங்கள் |
| 4. உச்சாடனம் | | வியாழன் |
| 5. பேதனம் | - | செவ்வாய் |
| 6. ஆகர்ஷணம் | - | வெள்ளி |
| 7. வித்வேஷனம் | - | செவ்வாய் |
| 8. மாரணம் | | சனி |

**திசைகள்**

| அஷ்ட கர்ம பெயர் | | திசைகள் |
|---|---|---|
| 1. வசியம் | - | கிழக்கு |
| 2. தம்பனம் | | தென்மேற்கு |
| 3. மோகனம் | | தெற்கு |
| 4. உச்சாடனம் | | மேற்கு |
| 5. பேதனம் | | வடக்கு |
| 6. ஆகர்ஷணம் | - | வடமேற்கு |
| 7. வித்வேஷனம் | - | தென்மேற்கு |
| 8. மாரணம் | | தெற்கு |

**உடைகள்**

| | | |
|---|---|---|
| வசியம் | - | சிவப்பு |
| மோகனம் | - | மஞ்சள் |
| பேதனம் | - | வெள்ளை |
| சகல கர்மம் | - | தனி பட்டு |

**உலோகம்**

| | | |
|---|---|---|
| வசியம் | - | காரியம் |
| மோகனம் | - | வங்கம் |
| ஆகர்சனம் | - | பொன் |
| தம்பனம் | - | செம்பு |
| உச்சாடனம் | - | வெள்ளீயம் |
| வித்வேஷனம் | - | குருத்தோலை |
| பேதனம் | - | இரும்பு |
| மாரணம் | - | வெள்ளி |

அஷ்டகர்ம செயல்களான வசியம், ஆகர்ஷணம், மோகனம், வித்வேஷனம், தம்பனம், உச்சாடனம், பேதனம், மாரணம் ஆகிய காரியங்களுக்கான நூல் இழை கணக்கினை நாம் தெளிவாக அறியமுடிகிறது. அவையாவது :

வசியம் - 2 இழை,

மோகனம் - 3 இழை,

தம்பனம் - 4 இழை,

உச்சாடனம் - 4 இழை,

ஆகர்ஷணம் - 2 இழை,

வித்வேஷனம் - 3 இழை,

பேதனம் - 5 இழை,

மாரணம் - 6 இழை

இவற்றை தெளிவாக கவனத்தில் கொண்டு அந்தந்த எந்திரங்கள் எழுதும்போது அதற்குரிய இழை கணக்கில் அதற்குரிய வண்ண நூலால் கட்டி மந்திரங்களை உருவேற்றினால் அந்த காரியங்கள் ஜெயமுடன் முடியும்.

**சகல செல்வங்களையும் அள்ளித்தரும் மஹாலக்ஷ்மி லோக வசிய யந்திரம்**

இதுவரை பலரும் சொல்லி வருவது தன வசியம், தொழில் வசியம், வியாபார வசியம், குபேர வசியம் எனும் முறைகளை தான் இந்த முறைகள் மூலம் பொரும் தனத்தை அடைந்தவர்கள், வியாபாரத்தில் பெரும் வெற்றிகளை குவித்தவர்கள்,

தொழிலில் மிகப் பெரிய பேரும் புகழும் செல்வமும் அடைந்தவர்கள் எத்தனை பேர் என்றால் ஒரு சிலரே. ஏனென்றால் தனக்கு பிரபஞ்ச சக்திகள் வசியமாகி செயல்படாத போது, இந்த வசிய முறைகளை யார் பயன்படுத்தினாலும் வெற்றி தராது.

ஆனால் திரு முத்துபாண்டி வைத்தியர் அவர்கள் கண்டெடுத்து அனுபவத்தில் பலருக்கும் செய்துகொடுத்து பயனடைய செய்து பேரும், புகழும், பெரும் பண வசதிகளையும் அடைய வைத்த இன்று வரையில் யாரிடமும் உலகில் இல்லாத ஒரு முறைதான் மகாலக்ஷ்மி லோக வசிய யந்திரம் .

இந்த மஹாலக்ஷ்மி லோக வசிய யந்திரம் அணிவதன் மூலம் மிக குறுகிய காலத்தில் உங்கள் தொழில் அல்லது வியாபாரத்தில் பேரும் புகழும் பெற்று மிகப் பெரும் தன வசதிகளை அடையச்செய்யும், இதனை அணிபவர்கள் பெற முடியாத பலன்கள் ஏதுமில்லை

இந்த யந்திரங்கள் கடைகள் வியாபார ஸ்தலங்கள் அலுவலகங்கள் இவற்றில் வைக்க எதுவாக பெரிய யந்திரமாகவும் கைகைகளில் கழுத்தில் இடுப்பில் அணியும் விதமாக தாயத்துகளாகவும் செய்து தரப்படும் .

**நீங்காத செல்வ வளம் பெறுவதற்கு யந்திர பிரயோகம்**

பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது சான்றோர் வாக்கு. மனித மனம் மண், பொன், பெண் இந்த மூவசைகளையும் சுற்றியே அலைப்பாய்ந்து வருகிறது. மனித வாழ்வுக்கும் அஸ்திவாரமாக இந்த மூவசைகளே விளங்குகிறது. மனித மனம் செல்வத்தில் அந்தஸ்த்தில் புகழில் மற்றவனை கட்டிலும் நாம் தான் சிறந்து விளங்க வேண்டும் என்று போராடுகிறது. இந்த முயற்சியில் தான் ஒவ்வொரு மனிதனும் போராடி வருகிறான்.

பிறக்கும் போதே ஒருவன் செல்வ செழிப்பான பெற்றோருக்கு பிறப்பதும், ஏழ்மையில் வாடும் பெற்றோருக்கு பிறப்பதற்கும் காரணம் அவரவர்களின் உழ்வினையே. சரி உழ்வினையை அறுத்து நாமும் செல்வ செழிப்பில் குபேர அந்தஸ்தை அடைய முடியுமா என்று ஒவ்வொரு மனிதனும் பல வழிகளையும் தேடி அலைகிறான்.

அதற்காக ஜாதகம் பரிகாரம் மந்திரம் எந்திரம் தந்திரம் கோவில் குளம் என்றும் தேடி அலைகிறான். அந்த போக்கில் தவறான நபர்களிடம் மனிதன் சிக்கி தவிக்கின்றான் எப்படி எத்தனை காலம் தேடி அலைந்தாலும் அவ்வாறு ஒரு குபேர அந்தஸ்தை யாராலும் அடைய முடியவில்லை.

இன்று ஒரு வியாபாரத்தை செய்வதனால் லட்சங்கள் கோடிகள் மில்லியன்கள் பில்லியன்கள் என்று முதலீடு செய்து வியாபாரங்களை நடத்தி அதில் வெற்றியை பெற்று குபேர அந்தஸ்தை அடைந்தவர்கள் ஒரு சிலர். வியாபாரத்தில் தோல்வியடைந்து முதலீட்டையும் இழந்து மேலும் கடன் பட்டு காணாமல் போனவர்கள் பல பேர்.

இந்த யந்திர பிரயோக முறைகளினால் உங்கள் கர்ம வினைகள் யாவும் மாறி உங்கள் ஜாதக தோஷங்கள் யாவும் போகும். உங்களையும் குபேர அந்தஸ்தை பெற வைக்கும். உங்கள் உடலில் உள்ள தீராத நோய்களும் சூரியனை கண்ட பனிபோல் விலகும். உங்களை கண்டு எதிரிகள் நடுநடுங்கி ஓடுவார்கள். பேய் பிசாசு மோகினி ஏவல் பில்லி சூனியம் கண்திருஷ்டி யாவும் பறந்தோடும். இந்த லக்ஷ்மி குபேர சஞ்சீவி இருக்கும் இடத்தில் உள்ள வாஸ்து குற்றங்களும் நீங்கும்.

**வசிய வகைகள் அதன் குணங்களும் விளைவுகளும்**

**வசியம்**

வசியம் என்பது ஐந்து விதங்களிலே செய்யப்படுகின்றது இதனை செய்பவர்கள் தம் முழு நம்பிக்கையும் அதன் மேல் செலுத்தியே செய்கின்றனர். அவ்வைந்து வசியங்களையும் கீழ்வருமாறு நோக்கலாம்.

**1. ராஜவசியம்**

தேவைப்படும் நபர்களின் பெயர்களைப் பதித்து, அவர்களை வசியப்படுத்தி வைத்திருக்க வேண்டும் எனும் நோக்குடன் செய்யப்படுகின்றது. அநேகமாக யாரேனும் ஒருவர் எதிரியாக இருந்தால் அவரை தம்முடன் நன்றாகியிருக்க வேண்டுமென வசியம் செய்யப்படும்.

**2. லோக வசியம்**

இது ஜனங்களையும், தெய்வங்களையும் ஆவிகளையும் வசியம் செய்து கொள்வதை குறிக்கின்றது. லோக வசியம் அநேகமானோரால் நடைமுறையில் செய்யப்பட்டு வருகின்றது. கூடுதலாக இதனை பலரும் விரும்புகின்றனர்.

**3. சர்வ வசியம்**

இது ஆவிகளை வசீகரித்து வைத்து, காரியங்களையும் செய்யும்படிக்கு செய்யும் வசியமாகும். ஆவிகளை வசீகரப்படுத்தி செய்யும் மந்திரம்

**4. மிருக வசியம்**

இது மனிதர்கள் தெய்வங்களை வசீகரப்படுத்தப்படுவதைப்போல மிருக ஜீவன்களையும் வசிகரித்தலாகும். உதாரணமாக எடுத்துக் கொண்டால் மிகவும் கொடூரமான நாய் இருக்கும் வீட்டில் களவு செய்ய வேண்டுமானால் அந்த நாயிலிருந்து தப்பும் முகமாக அதனை வசப்படுத்தச் செய்யும் வசியமாகும்.

**5. ஆண் பெண் வசியம்**

இது தமது காதல், திருமணம் என்பன தடைப்பட்டிருப்பவர்கள் ஆண் பெணையோ பெண் ஆணையோ வசியம் செய்து தமது காதல் ஆசையை அல்லது திருமணத்தினை நடாத்தும்படி வசியப் படுத்துவதாகும். இவ்வசியம் செய்யவதற்கு குறிப்பிட்ட நபரினது பாவனைப் பொருட்கள் ஏதேனும் இருந்தால் தான் நல்லது இல்லாவிட்டாலும் வசியம் செய்யலாம். இவ்வசிய முறையானது இரண்டு முறைகளிலே செய்யப்படுகின்றது

1. **சாதாரண தரம்**
2. **உயர்தரம்**

**சாதாரண தரம்**

இதனைச் செய்ய நாட்கள் சற்று அதிகம் தேவைப்படும் இதற்கான பொருட்கள் சாப்பாடு, விபூதி, எண்ணெய், என்பவற்றைப் பயன்படுத்தி, சாப்பிடக் கொடுத்தால் அல்லது எண்ணெய் உடுப்புகளில் தேய்த்தால் அல்லது தலைமயிரில் தேய்த்தால் இது நாளடைவில் பலனளிக்கும் .இச்சாதாரணதர வசியமானது சற்று செலவு குறைந்தாக காணப்படுகின்றது.

**உயர்தரம்**

இவ்விசயம் செய்வதற்கு பணச்செலவானது சற்று அதிகமாகும். ஓர் ஆணுக்கு வசியம் செய்ய வேண்டுமானால் அந்த ஆணின் வலது காலில் ஒரு துளி இரத்தம் எடுத்து, அதனை மந்திர வசியம் செய்வதற்காக பயன்படுத்தும் ஜவகை எண்ணெய், மூலிகையுடன் கலந்து இரவு நேரத்திலே, வசியம் செய்பவரினதும் [யாருக்கு] செய்யும்படி சொன்னாரோ அவரின் பெயரையும் உச்சரித்து, மோகினி ஆவியின் பெயரைக் கூறி ஒரு

நாளுக்கு 1008 தடவையாக முறையாக 7 நாட்களுக்கு எந்திரம் வைத்து தேசிக்காய் எடுத்து எண்ணெயின் மேல் கொண்டு போகையில் எண்ணெயில் அசைவுகள் தென்படும். [இது ஆண் செய்ய வேண்டும்] இவ்வெண்ணெயினை பெண் சுண்டு விரல், உடுப்பு, நெற்றியில் வைத்து பார்த்தல், சாப்பாட்டில் கலந்து முதுகில் எந்திரம் வைத்து நினைத்தால் அவளுக்கு அது தெரியும். அப்போது வா என்று கூறினால் அவள் வருவாள். இதுதான் உயர்தர வசியமாகும்.

**அசுத்த ஆவிகள்**

வசியம் செய்யப்படுகையில் ஆவிகளுடன் தொடர்பு ஏற்படுகின்றது. ஆவிகளுடன் பேசுதல் என்பது தெய்வங்களின் ஆவிகளுடன் பேசுதல் என்று கூறுவர். இங்கு தெய்வத்தின் ஆவிகளாக தெய்வங்களையே குறிப்பிடப்படுகின்றது. இரண்டாவதாக செத்த மனித ஆவிகளுடன் பேசுதல் ஆவிகளோடு பேசுதல் எனப்படும்.

**ஏவல் பில்லி சூனியம்**

ஏவல் பில்லி சூனியம் என்பன ஆவிகளை ஏவி விடுதல் எனப்படும். இது பின்வரும் மூன்று முறைகளில் செய்யப்படும்.

தெய்வம் எனும் ஆவிகளை ஏவி விடுதல் – உம் - முனி, காளி,

செத்த ஆவிகளை ஏவி விடுதல் –

மிருகங்கள், ஊர்வனவற்றை ஏவி விடுதல்

நாய் – கடிக்கும்படி

மாடு – முட்டும்படி

பாம்பு – கொத்தும்படி

**மந்திரம் பில்லி சூனியம் வசியம் எனபவற்றால் ஏற்படும் விளைவுகள்**

1. பணவிரயம்

2. ஏமாற்றம்

3. மரணம் ஏற்பட வாய்ப்புண்டு

**சர்வ வசீகரத்திற்கு [ சகல வசியம் ]**
**கன்னி நூல்**

நிறைய சாஸ்திரங்களில் கன்னி நூல் என்று குறிப்பிட்டிருப்பார்கள் அது என்னவென்று யாரும் குறிப்பிட மாட்டார்கள் அதனுடைய உண்மை பொருளை நான் உங்களுக்கு விளக்கு கிறேன்

கன்னி நூல் என்பது கன்னிகழியாத பிள்ளை கையால் நூல் நூற்க சொல்லி அந்த நூலில் மஞ்சள் தடவி வைத்துகொள்ள வேண்டும் இதுதான் கண்ணிநூல் இந்த கன்னி நூல் காப்புகட்டிதான் மூலிகை பிடுங்குவார்கள் .இதற்கு இன்னொரு முறையும் கூறுவார்கள் தாமரை தண்டை உடைத்தால் அதிலும் நூல் வரும் அதையும் உபயோகப்படுத்தலாம் .

சரி இனி வசியத்திற்கான முறையைப்பார்ப்போம்

*வெள்ளை எருக்கலன் வேர்*
*செம்பருத்தி வேர்*
*செவ்வகத்தி வேர்*

இந்த மூன்றையும் சாபம் நிவர்த்தி செய்து வேர் அறாமல் பிடுங்கி கொண்டுவந்து அந்த வேரை மேற்படி நூலால் தாயத்து போல சுற்றி கட்டி அதில் ஒரு கோழி அறுத்து ரத்தம் தெளிக்கவும்

இதனை இப்போது உடலில் அணியக்கூடாது தேவைப்படும் பொது மட்டும் அணியவேண்டும் இதனால் சர்வ வசியமும் உண்டாகும் ஆண் பெண் வசியம் முதற்கொண்டு சகலமும் உங்களுக்கு வசியமாகும்

இந்த தாயத்தை எப்போதும் அணிந்தால் விந்து நஷ்டமாகும்

இதனை இடுப்பில் தொப்புளுக்கு நேராக கட்டிக்கொண்டு பெண்ணிடம் உடலுறவு கொண்டால் விந்து இறங்காது எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் உடலுறவு கொள்ளலாம் அந்த தாயத்தை முதுகு பக்கம் தள்ளிவிட்டால் உடனே விந்து வெளியேறும் .இதனை அடிக்கடி உபயோகிப்பது உடல் நலத்திற்கு கேடு விளையும் .

**ஐங்கோல மை பிரயோகம் மற்றும் செய்முறை**

அன்பர்களே முதலில் நான் ஒரு பெரிய மாந்திரீக வாதி என்று குறிப்பிடுபவர்கள் இந்த ஐங்கோல மை பிரயோக முறையினை தெரிந்திருக்க வேண்டும் அதை எப்படி பயன் படுத்தி காரியத்தை சாதிக்கலாம் என்ற முழு அறிவு வேண்டும் .

இந்த ஐங்கோல மையினை பொதுவாகவே துர்தேவதைகளை வைத்து ஏவல் செய்வதற்காக பயன் படுத்துகிறார்கள் .இந்த மையானது கேரளாவில் கொல்லம் பகுதியில் ஒரு சில கிராணிகாரர்கள் என்று கூறுவார்கள் அவர்களிடம் வாங்கலாம் .

இந்த மையை பயன்படுத்தி எதிரியின் ஏவலை திக் பந்தனம் செய்வதற்கும் சிறு தெய்வங்களை வேலை வாங்குவதற்கும் ஏவல் செய்வதற்கும் செய்வினைகள் புரிவதற்கும் இந்த மை பயன் படும் .இந்த மை நமது கையில் இருந்தால் மட்டுமே எல்லோரும் கூறும் ஏவல் பில்லி சூன்யம் செய்வினை அனைத்தும் சாத்தியமாகும் எதிரி ஏவி விட்ட தேவதையை கட்டு படுத்தவும் இந்த ஐங்கோல மை பயன்படும் .

**ஐங்கோல மை செய்முறை :**

இறந்து போன பிணத்தின் நாடியில் கட்டியுள்ள நாடிக்கட்டு துணி ,கையில் கட்டியுள்ள கைகட்டுதுணி ,கால் கட்டுத்துணி , வில் போட்ட வாய்க்கரிசி ,பிணத்தின் நெற்றியில் வைத்த சந்தனம் ,போட்டு ,பிணத்தின் கழுத்தில் அணிந்த மாலை ,மண்டை ஓடு ,இவையெல்லாம் சேகரித்து பொடிசெய்து சித்தாமனக்கு எண்ணெய் விட்டு அரைத்து அதிலிருந்து தைலம் இறக்குவார்கள் இதுதான் ஐங்கோல தைலம் மை செய்யும் முறை .

**ஐங்கோல மை பிரயோகம் :**

இந்த மையை பயன் படுத்திதான் நிறைய பேர் கேரளாவில் ஜால வித்தைகள் காட்டுகிறார்கள் ,இந்தமையை பயன்படுத்தி குறிப்பாக மாடன்மார்கள் என்று கூறப்படும் எட்டு வகை மாடன்மார்களை வேலை வாங்கலாம் நாம் என்ன சொன்னாலும் அது செய்துய் விட்டு வரும் .

துர்தேவதைகளுக்கு பூஜைபோட்டு ஒரு சில யந்திரங்களை இந்த வீட்டில் வைக்க சொன்னால் அந்த யந்திரமானது நாம் கூறிய இடத்திற்கு சென்று விடும்

இந்த மையை பயன்படுத்தி ஏவல் செய்யலாம் அடுத்து நல்ல வியாபாரம் நடக்கும் இடத்தில் இந்த மையுடன் கொஞ்சம் சுடுகாட்டு சாம்பலை சேர்த்து

வியாபாரம் நடக்கும் இடத்தில் தூவி விட்டால் வியாபாரம் நடக்காமல் முடங்கி போய் விடும் .தாண்டு என்று கூறப்படுகிற முறை அதாவது ஒரு சில பூஜைகள் செய்து கருமைதடவி ஒரு சில பொருட்களை ஒரு இடத்தில் புதைத்து வைத்து விட்டால் அந்த இடத்தை எதிரி தாண்டியவுடன் அவன் மாண்டுபோவான் .இதுதான் தாண்டு என்று கூறப்படுவது .

இந்த விஷயங்கள் மிகவும் சூட்ஷமா சூட்சம விஷயங்கள் எல்லோரும் தெரிந்துகொள்வதற்காக கூறுகிறேன் ,யாரும் போலிகளை நம்பி ஏமாந்துவிடக்கூடாது என்பதற்காக .

**புதையல் கண்டறிய ,நீர் நிலை கண்டறிய , பாதாள மை ...**

யாரிடமும் இல்லாத மிகவும் சூட்சமமான விஷயத்தை இந்த பதிவில் வெளியிட உள்ளேன் .இந்த மை பிரயோகம் தமிழகத்தில் ஓரிருவரிடம் மட்டும் தான் தெரிந்திருக்கும் அவர்களும் கேரளம் சென்று வித்தை கற்றவர்களுக்கு மட்டும் தான் இவ்வகை சாத்தியம் .

**பாதாள மை செய்முறை :**

ஐம்பது குளித்தவளை எடுத்து அதை நிழலில் உலர்த்தி அதிலிருந்து தைலம் எடுத்து வசியத்திற்கு பயன்படுத்தப்படும் பாதாள மூலயில் சமூலம் பிடுங்கி அதை சுள்ளியில் வைத்து கருக்கி அண்டங்காக்கையின் கண்ணும் சேர்த்து அதனுடன் அஞ்சனக்கல் சேர்த்து .ஆழமான கிணற்றில் பாலம் அமைத்து அதிலிருந்து அரைத்து சிமிழில் வைத்து கொண்டு அஞ்சனா தேவி பூஜை செய்ய வேண்டும் .அஞ்சனா தேவி மந்திரத்தை ஜெபித்து உள்ளங்கையில் மையை தடவி பார்த்தால் பாதாளத்தில் உள்ள அனைத்தும் தெள்ள தெளிவாக தெரியும் .

**அஞ்சனா தேவி மந்திரம் :**

"அங் ரிங் உம் மம் மும் ரம் றீம் க்லீம்
அஞ்சனாதேவி விடு விடு திசை திசை ஓம் "

மேற்கூறிய விதமாக மை தயாரித்து செயல்படுத்தினால் தேவர்கள் எப்போதும் உங்களிடமே இருப்பார்கள் .இந்த செய்தியில் எந்த ஒளிவு மறைவும் இல்லை ,இதை முறையாக மாந்திரீகம் பயின்றவர்கள் புத்திசாலிகள் சரியாக செய்து பல சாதனைகள் படிக்கலாம் .

**மகா நவசக்தி அஞ்ஜனம்(மை)**

பூர்வ கர்மதோஷத்தால் ஏற்படும் கர்ம வியாதிகள் எதுவாயினும் பீடிக்காமல் தடுக்கும். வெண்குஷ்டம், மயக்கம், உடல் சோர்வு, மர்ம ஸ்தானங்களில் ஏற்படும் வியாதிகளைப் போக்கவல்லது. சத்ரு உபாதைகள், துற்செயல்கள் எதுவும் பாதிக்காமல் செய்யும். இதன்மூலம் திடீர் அதிர்ஷ்டங்களை கொடுக்கவல்லது. கிரஹ தோஷம் இருந்தால் விலகிவிடும்.

**சர்ப்ப அஞ்ஜனம்(மை)**

இதனால் சர்ப்பதோஷம், ராகு, கேது, திசைபலன் தராத தோஷம், திருமணத்தடை, கோர்ட், வியாஜ்ஜியவழக்கு, ராஜாங்கத்தொல்லை, கெட்டகனவு, வீண்பயம், நடுக்கம், எதிரிசெய்யும் மரணம், பேதனம், வசியம், மாரக பந்தனம், மோகனம், பில்லி, சூன்யம், ஏவல், துர் உச்சடானம், பேய், பிசாசுத்தொல்லை, கலவரம், இந்திரிய ஸ்கலிதம், வெடவெடப்பு, நாக்கு உலர்ந்து போதல், மூதேவி தோஷம், துன்பம், சத்துருத்தொல்லை இது போன்ற 78 வகையான துன்பங்களை அடியோடு ஒழித்து பரிபூரண சுகம் தரக்கூடிய மை இது.

**உபயோகிக்கும் முறை:**

மேற்படி குறையாடுகள் கொண்டவர்களுக்கு தினம் காலை, மாலை நெற்றியில் துளி வைக்கவும். தலையில் உச்சி பாகத்திலும் தடவிக் கொண்டு வரலாம். இதுபோல 48 நாட்களுக்கு உபயோகம் செய்தால் வாழ்க்கைப்பாதை அடியோடு மாறும். நல்ல கனவுகள் உண்டாகும். முகத்தில் நல்ல தேஜஸ் உண்டாகும்.

**பாலாரிஷ்ட தோஷ அஞ்ஜனம்(மை)**

இதனால் பபூர்வ ஜென்மசாபம், ஸ்தீரிசாபம், கோசாபம், தெய்வசாபம், மாதுர்பிதுர்சாபம், இப்படிப்பட்ட சாபங்களால் குழந்தைச் செல்வம் இல்லாத தோஷங்களை நிவர்த்தி செய்யும் யோகமுடையது. செவிடு, குருடு, கூன், நொண்டி இப்படிப்பட்ட ஊனமுடைய குழந்தைகளின் தோஷத்தையும் போக்கக்கூடிய அபூர்வ சக்தி படைத்தது. சகல புத்திரசோகம், புத்திர துக்கம், புத்திரநாசம் இவைகளை நிவர்த்தி செய்யும் சக்தி படைத்தது இந்த அஞ்ஜனம்.

**புத்திர தோஷ நிவர்த்தி அஞ்ஜனம்**

உலகில் மனிதனாகப் பிறப்பதே அரிது.
அப்படி மனிதனாகப் பிறந்தாலும் கூன்,
குருடு, செவிடு, ஊமை, நொண்டியாக
இல்லாமல் பிறப்பது அரிது.

நல்ல ஆரோக்கியத்துடன் வாழ்ந்து திருமணமாகி மனைவியுடன் இன்பமாக வாழ்க்கை நடத்தி புத்திரபாக்கியத்துடன் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தைகள் இல்லாதவள் வீட்டில் குடி தண்ணீர் சாப்பிட்டாலும் பெரும்பாவம் என்று சாஸ்திரம் வர்ணிக்கிறது. ஸ்தீரிசாபம், கோசாபம், மாதுர்பிதுர்சாபம், சர்ப்பசாபம், தெய்வசாபம் என பஞ்ஜசமாபாதக சாபங்கள் மனிதனுக்கு ஏற்பட்டால் அது மூன்று தலைமுறைகளுக்கும் வெகுவாக தாக்கிவிடுகிறது.

இப்படிப்பட்ட சாபம் இருப்பவர்களுக்கு பிள்ளைகள் பிறப்பது இல்லை. அப்படியே பிறந்தாலும் பலகுறைகளுடன் பிறந்து வாழ்க்கையே நரகமாகி விடுகிறது. இப்படிப் பட்டவர்களுக்காகவே மேற்படி புத்திரதோஷ நிவர்த்தி அஞ்ஜனம் ஸ்ரீ நாரத மகரிஷுயால் உபதேசிக்கப்பட்டதாக ஸ்ரீசுகமக "ரிஷி வாக்கியம்" என்னும் நூலில் கூறப்படுகிறது. புத்திரர் இல்லாத ஆண், பெண்கள், (அ) ஊனமுற்ற குழந்தையை உடையவர்களும், ஜாதகப்படி அவரவர் கால, சமய சந்தர்ப்ப சூழ்நிலைகளை அறிந்து செயல்பட்டால் நிச்சயம் நிவர்த்தி உண்டு. இந்த அஞ்ஜனம் பூர்வ ஜென்ம பாவத்தையும் போக்கி அதே சமயம் உடலில் இருக்கும் குறைகளையும் போக்கும்.

**மகா சுதர்சன சத்துரு பீட நிவாரண அஞ்ஜனம்**

இன்றைய உலகில் அனைவருக்கும் ஒரு வகையில் ஜாதகக் கிரக கோளாறுகளோ அல்லது விதிவசமோ மனிதனாகப் பிறந்த ஒவ்வொரு வருக்கும் சத்ருக்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். துஷ்டர்களைக் கண்டால் தூரவிலகு என்பார்கள் பெரியோர்கள். நாம் நம்மை சத்ருபயம், உபாதையிலிருந்து பாதுகாத்துக்கொள்ள வேண்டும். இதனால் சத்ருவின் மூலம் செய்யப்படும் கெடுதல்கள் உங்களைப் பாதிக்காது.

எப்படிப்பட்ட எதிரியாயினும் அவரை தோற்கடித்து விடும் இந்த அஞ்ஜனம். சத்துரு, சண்டை சச்சரவு, கோர்ட்டு, வியாஜ்ஜியம் இந்த தொல்லைகள் அடியோடு நீங்கி உங்களுக்கு சர்வ ஜெயத்தையும் தரக்கூடியது. நினைத்ததை நினைத்தபடி செய்து முடிக்கும் யோகமும், அதிர்ஷ்டமும், சுக அனுகூலங்களும் ஏற்படும். நல்ல தனவசதி, தொழில் மேன்மை, தெய்வ அனுகூலம், லட்சுமி கடாட்சம், அதிர்ஷ்டம் இவைகள் உண்டாகும்.

**மங்கள ரதிபதி வசீகர அஞ்ஜனம்**

உலகில் ஆணும், பெண்ணும் சேர்வதே தர்மம். இல்லறம் இல்லையேல் நல்லறம் கிடையாது. புருஷனுக்கு மனைவியும், மனைவிக்கு புருஷனும், வசியமாகவும், அன்பாகவும், ஒற்றுமையாகவும் இருந்தால்தான் வாழ்வு மலரும்.

சுகம் உண்டாகும். எத்தனைதான் ஜாதகம் பல பார்த்தாலும், பொருத்தம் பார்த்து திருமணம் செய்து கொண்டாலும், பல வருஷமாக காதலித்து திருமணம் செய்து கொண்டாலும், விதிவசமோ அல்லது காலபலனின் வினையோ அல்லது விதியின் விளையாட்டோ தெரியவில்லை. 100க்கு 85 பேர் கணவன், மனைவி ஒற்றுமை இல்லாமல் மிகவும் கஷ்டப்படுவதோடு, கணவன், மனைவி ஒற்றுமை இல்லாமல் சிலர் பிரிந்து விடுவதும் உண்டு.

சிலர் கீரி, பாம்பு போல பகைமை ப10ண்டு எப்படியாவது மனைவியைப் பெட்டிப்பாம்பாக ஆக்கிவிட வேண்டுமெனவும், கணவன்மார்களும் எப்படி ஆவது பொம்மைபோல ஆக்கிவிடவேண்டும் என்று மனைவிமார்களும் நினைக்கின்றனர். இதில் தவறே கிடையாது. இந்த அஞ்ஜனம் ஒற்றுமை இல்லாத தம்பதிகளை ஒன்று சேர்ப்பதில் நிகரற்றது, ஒவ்வொருவரும் உபயோகிக்கலாம். எப்பேர்ப்பட்ட சண்டை, மனவேற்றுமை, மன நிம்மதி இல்லாமை ஒருவருக்கொருவர் வேற்றுமையாக இருப்பினும் இவை நீங்க இது வரப்பிரசாதமாகும்.

**உபயோகிக்கும் முறை:**

மங்கள ரதிபதி வசீகர அஞ்ஜனத்தை தினம் குளித்த பின்பு துளி சுண்டு விரலில் எடுத்து நெற்றியில் துளியும் உச்சந்தலையில் சிறுதுளி வைத்துக் கொள்ளலாம். ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் வைக்கலாம். துளி எடுத்து 3 வெற்றிலையில் மடித்து ஏலக்காய், கிராம்பு, பாக்கு, சுண்ணாம்பு இவைகளுடன் பீடாபோல வைத்து உண்ணவும் செய்யலாம். இது ஆண், பெண், கணவன், மனைவி உறவை அதிகப் படுத்தும். மிகவும் சிறந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள முறையாகும். இது கெடுதலுக்கோ, அகால முறைக்கோ, குறுக்கு வழிக்கோ இது உதவாது.

**மன வசீகர – ஸ்திரீ வசீகர –மன்மத போக விருத்தி மகாஅஞ்ஜனம்**

மனவசீகரம், காதலில் தோல்வியுற்றவர்கள், போகசக்தி இல்லாதவர்கள், ஆண்மையை இழந்தவர்கள், பயந்த சுபாவம் உடையவர்கள், சஞ்சலப்புத்தி உடையவர்களுக்கு இந்த அஞ்ஜனம் மிகச் சிறந்தது. போகசக்தியை அதிகரிக்கும். தேஜஸ் ஏற்பட்டு தேககாந்தி உண்டாகும்.

**மகாலட்சுமி குபேரவசிய மகா அஞ்ஜனம்**

இந்த அஞ்ஜனம் மிக அபூர்வமானது. ஸ்ரீ போகரால் மிகவும் சிறப்பாக சொல்லப்பட்ட மகா அஞ்ஜனமாகும். மேலும் இந்த "மகாலட்சுமி குபேரவசிய மகா அஞ்ஜனம்" பாகவதத்தில் கிருஷ்ணபகவானால் தயார் செய்யப்பட்டு தேவர்களுக்கு சமமான பஞ்சபாண்டவர்களுக்குக் கொடுக்கப்பட்டு பெரும் பலன் அடையப்பட்ட மகா அஞ்ஜனமாகும்.

உலகத்தில் ஒரு மனிதன் எவ்வளவுதான் படித்தவனாக இருந்தாலும், புத்திசாலியாக இருந்தாலும், அவன் எப்படிப்பட்ட உத்தமனாக இருந்தாலும் இந்தக் கலிகாலத்தில் மதிப்பே கிடையாது. பணமே ஒருவனுக்கு உயர்ந்த அந்தஸ்த்தையும் செல்வாக்கையும் தருகின்றது. அதுமட்டும் அல்ல. பணம் பாதாள லோகம் வரை பாய்கிறது. மேலும் பணம் இல்லாதவனை உலகம் மதிப்பதே இல்லை அப்படிப்பட்ட பணமோ ஒருவர்கையிலும் அவ்வளவு சுலபமாகத் தங்குவது கிடையாது.

மகாலட்சுமியின் பூரண கடாட்சமான பணத்தைத்தேட ஒவ்வொரு வரும் காலை எழுந்தது முதல் இரவு ஓய்வு எடுக்கும் வரை படாதபாடு படுகின்றார்கள். சிலருக்கு எப்படியாவது பணத்தைச் சம்பாதித்தே ஆக வேண்டும் என்ற வெறியில் சதா சர்வகாலமும் யோசனையுடன் இருக்கின்றார்கள். சிலர் ரேஸ், லாட்டரிச் சீட்டு மற்றும் சூதாட்டத்திலாவது அதைச் சேர்த்துவிட வேண்டுமென்ற ஆசையுடன் பல வழிகளை நாடிய படியே இருக்கின்றனர். மேற்படி அஞ்ஜனத்தை முறைப்படி உபயோகம் செய்து வந்தால் எப்படிப்பட்ட தரித்திரத்திலும் குபேர சம்பத்தை அடைந்து விடுவர் என சாஸ்திரம் கூறுகின்றது.

குடும்பத்தில் ஏற்பட்ட சகல சாபம், முன்கர்மவினை அடியோடு அகலும். நல்ல தனவசதி தொழில்மேன்மை, அனுகூலம், சுகம், அதிர்ஷ்டம், லட்சுமிகடாட்சம், சுகபோகம் இவை உண்டாகும். தெய்வ அனுகூலம் ஏற்படும். மீண்டும் பிறவாவரம் கிட்டும். நினைத்ததை நினைத்தபடி செய்து முடிக்கும் யோகமும், அதிர்ஷ்டமும் சுகஅனு கூலங்களும் ஏற்படும்.

**ஜெயமங்கள அஞ்ஜனம்**

இந்த அஞ்ஜனத்தை குழந்தைகளுக்கு நெற்றிக்கு இட்டுவர சர்வ கிரக, பாலகிரக தோஷங்கள் அடியோடு விலகிவிடும். திருமணம் ஆகாமல் இருக்கும் கன்னிப்பெண்கள் தினம் காலை, மாலை நெற்றிக்கு இட்டுக் கொள்ள திருமணம் தடையின்று நடைபெறும்.

புருஷவசியம் தேவைப்படுவோர் புருஷனுடன் நல்ல அந்நியோன்யமாக இருப்பதற்கும், குடும்பத்தில் அமைதி, சுகம், அதிர்ஷ்டம் பெருகவும், நல்ல அழகு, வசீகரம், இன்பம் இவைகளுக்கும், இந்த அஞ்ஜனத்தை உபயோகம் செய்து வரலாம். குழந்தைகளுக்கு நெற்றியில் வைக்க பூரண கல்வி அறிவு உண்டாகும். செய்வினை தோஷத்தால் பிடிக்கப்பட்டவர்கள் தினம் இரவில் அஞ்ஜனத்தை நெற்றியில் வைத்துக் கொள்ள நல்ல தூக்கம் கொடுக்கும். கெடுதல்கள் யாவும் பூரணமாக நீங்கிவிடும் எப்படிப்பட்ட செய்வினைகளையும் நீங்கும்.

**சர்வ வசிய அஞ்ஜனம்**

சிலருக்கு எவ்வளவு பெயர், கைராசி இருந்தாலும், முகராசி இல்லாததால் உலகில் பிரகாசிக்க முடிவதில்லை. சிலருக்கு அபாரமான பாண்டித்யம் இருந்தும் புகழ் ஏணியில் ஏறமுடியாதபடி மங்கிவிடுகின்றனர். இன்னும் சிலருக்கு எவ்வளவுதான் பக்தி, நம்பிக்கை இருந்தும் கடவுள் அருள்கிட்டாமல் போய்விடுகிறது. சிலருக்கு ரத்தம் சுண்ட உழைத்தும் யாவரிடமும் பெயர் வாங்க இயலாமல் போய்விடுகின்றது. இன்னும் சிலருக்கு எவ்வளவு வரவு வந்தாலும், சதா பற்றாக்குறை, முக்கியமாக ஜனவசியம், தனவசியம், முகவசியம், மனவசியம், தேவதாவசியம், வித்யா வசியம், ஞானவசியம், ஸ்திரீவசியம் இவைகளுக்கு இந்த அஞ்ஜனம் மிகப்பெரிய வரப்பிரசாதமாகும். டாக்டர்கள், வக்கீல்கள், விரிவுரையாளர்கள், உபாத்தியாயர்கள், குருமார்கள், வேதவிற்பன்னர்கள், ஜோதிடர்கள், அலுவலகத்தில் பணிபுரியும் அலுவலர்கள், பெரிய ஸ்தானம் வகிப்பவர்கள், ஹோட்டல், சினிமாத் தியேட்டர், பஸ், பொது வாழ்வில் இருப்பவர்களுக்கு இந்த அஞ்ஜனம் பெரும் பலனைக் கொடுக்கும்.

**உபயோகிக்கும் முறை:**

துளி எடுத்து தேங்காய் எண்ணையில் கலந்து ஒரு துளி உச்சந்தலையில் தடவிக்கொண்டு வர லட்சுமியின் பரிபூரண அருள் கிடைக்கும். ஜனவசீகரம் வேண்டுவோர் ஒரு வெற்றிலையில் இந்த அஞ்ஜனத்தை தடவி வெயிலில் வைத்து உருகும் பக்குவம் வந்தவுடன் சூரிய பகவானை நமஸ்காரம் செய்து உச்சந்தலையில் அதை தடவிக்கொண்டு 15 நிமிடம் கழித்து குளிக்கவேண்டும். இப்படி 67 நாட்கள் செய்தால் ஜனவசீகரம் உண்டாகும்.

**பாதாளமூலிகை அஞ்ஜனம்**

பாதாளமூலிகை அஞ்ஜனம் வீட்டில் உள்ள செய்வினை தோஷங்கள் ஏவல், பில்லி சூனியங்களால் கிரகத்தில் ஏற்பட்ட தீமைகள், பூமிக்கு அடியில் உள்ள தோஷங்களையும் இது காட்டி விடும். கல்லாப்பெட்டிகள், பணம் வைக்கும் பெட்டிகளில் துளி தடவ சகல தரித்திரமும் பஞ்சாய் பறந்து விடும். ஆடு, மாடு, கோழிகள், கால்நடைகளுக்கு பௌர்ணமி தினம் தடவி விட தோஷமும் எவ்வித ஆபத்தும் இல்லாமல் சேமமாய் நன்றாக வளரும். வீட்டில் வாசல் கதவுகளுக்கு மேல் உள்பக்கமாக தடவி (பிரதி வெள்ளிக்கிழமை) தூபம் காட்ட பெரும் ஐஸ்வர்யத்தை தரும். கிணற்றில் உள்ள தோஷங்கள் நீங்க தேங்காய் உடைத்து அதனுள் 9 வெற்றிலையில் இந்த அஞ்ஜனத்தை தடவி தேங்காய்க்குள் வைத்து தேங்காயை மூடிக் கட்டி கிணற்றுக்குள் புதைத்து விட கிணற்றில் உள்ள தோஷங்கள் விலகிவிடும். இந்த அஞ்ஜனத்தை சாம்பிராணி சட்டியில் தடவி காலை மாலை தூபம் போட பெரும் பலன் கிட்டும். அந்த அஞ்ஜனத்தை பேய் பிடித்தவர்களுக்கு ஒரு துளி எடுத்து தினம் காலை வெறும் வயிற்றில் 5 வெற்றிலையில் தடவி மடித்து உண்ணக் கொடுக்க (48 நாட்கள்) பேய், பிசாசு, உன்மத்தம் அடியோடு நீங்கி சர்வ மேன்மை உண்டாகும்.

**கோச்சார துர்பல நிவாரண அஞ்ஜனம்**

இந்த அஞ்ஜனம் அற்புத யோகபலன் தரக்கூடியது. எப்படிப்பட்ட கோச்சார பலஹீனங்கள் திசாபுத்தி கோளாறுகள், கிரக பலஹீனம் இவற்றை நீக்கி வாழக்கையில் திட்டமிட்டபடி எதையும் செய்யக்கூடிய சக்தியை தரக்கூடியது இது. வியாபார மேன்மை, தொழில் விருத்தி, தனலாபம், யோக சித்தி, நற்காலம், இவைகளை தரும். இதை பூஜை செய்யும் பொழுது சாம்பிராணி புகை போடுவது போல் போட்டுவர மகாபலன் கிட்டும்.

**அஷ்டம சித்து மகா அஞ்ஜனம்**

இந்த அஞ்ஜனத்தைக் கொண்டு எப்படிபட்ட சத்ருவையும், வசியப் படுத்திவிடலாம். பக்தி, முக்தி, சித்தி, ஞானம், மோட்சம், தனம், சுகம், இஷ்டசித்தி அடையலாம். பெரும்சக்தி வாய்ந்தது இது.

**வீரிய விருத்தி அஞ்ஜனம்**

இந்த அஞ்ஜனம் பல முனிவர்களாலும், சித்தர்களாலும் மிகவும் சிறப்பாக சொல்லப்பட்டுள்ளது. இந்த அஞ்ஜனம் பூரண ஆண்மையைத் தரும். மேலும் சிறு வயதில் தெரிந்தோ, தெரியாமலோ செய்த தவறுகளினால் இழந்த ஆண்மை, வீரம், பலம், சுகம் இவைகளை மீண்டும் கிடைக்கச் செய்யும். போக சக்தியை அதிகரிக்கும். தேஜஸ் ஏற்பட்டு தேக காந்தி உண்டாகும்.

**உடற்கட்டு மந்திர பிரயோகம்**

மாந்திரீக தொழிலில் உடற்கட்டு என்பது மிக முக்கியமாக கருதப்படுகிறது .இந்த உடற்கட்டு மந்திரத்தை சித்தி செய்து கொண்டு மயானத்தில் அல்லது வெளி இடங்களில் பூஜை செய்யும் பொது மற்ற தேவதைகள் நாம் செய்யும் பூஜையை தடை செய்யும் பொருட்டு நம்மை தாக்க வரும் அதிலிருந்து நம்மை பாதுகாக்க வேண்டுமானால் .முதலில் உடற்கட்டு மந்திரத்தை முறையாக சித்தி செய்து கொண்டு அதன் பிறகு எந்த ஒரு பூஜையையும் துவங்க வேண்டும் .

**உடற்கட்டு மந்திரம் :**

ஓம் உமா மகேஸ்வரன் முன்னிற்க பாதமிரண்டும் பூமி தேவி காக்க ,

கனுக்காலிரண்டும் கணபதி காக்க ,

துடையுமுந்தியும் துர்க்கை காக்க ,

வயிறு மார்பும் வைரவன் காக்க ,

கழுத்தும் புஜமும் கதிர்வேல் காக்க ,

கண்ணும் புருவமும் காளி காக்க ,

முகமும் கபாலமும் மும்மூர்த்தி காக்க,

ஓம் அம் உம் சம் வம் சிவ சிவா

கட்டு கட்டு என் தேகம் முழுவதும்

சங்கு சக்கரம் காக்க பகைவரைக்கட்டு ,

பிசாசுகளை கட்டு எதிரிகளை கட்டு ஏவலை கட்டு ,

இந்திரன் முதல் ஈசானயங்கட்டு நான் தொட்ட மந்திரம் நீ தொட்ட மந்திரம் ,

நான் தொட்ட மூலி ,நீ தொட்ட மூலி

எட்டு திசையும் பதினாறு கோணமும் என் முகமாக

ஓம் சிவய நம சிவய நம சிவய நம .

இந்த மந்திரத்தை ஓடுகின்ற தண்ணீரில் நின்று கொண்டு 1008 ஜெபித்து விட்டு மறுநாளில் இருந்து பிள்ளையார் பிடித்து வைத்து அருகு சூட்டி அதற்கான அவள் பொறி கடலை படைத்து ஒரு நாளுக்கு 108 வீதம் 11 நாட்கள் ஜெபித்தால் மந்திரம் சித்தியாகும் .இதனால் சர்வ மந்திர சித்தியும் சர்வ மூலிகை சித்தியும் ஆகும் .இம்மந்திரத்தை சித்தி செய்யாமல் மந்திர பிரயோகம் செய்தால் அதன் அனுபவ முறைகளை கூறுகின்றேன் .

ஏதாவது இடத்தில் பூஜை செய்து கொண்டிருக்கும் போது இந்த உடற்கட்டு போடாமல் பூஜைகள் செய்தால் அந்த போச்சி வெற்றியடையாது .அந்த தேவதைகளுக்கு தேவையான படையல் போடவில்லை என்றால் அது நம்மை தாக்கும் அதன் அறிகுறி அந்த நேரமோ அல்லது மறுநாள் காலையிலோ நமக்கு உழலில் ஏற்படும் மாற்றங்களை வைத்து கண்டு பிடிக்கலாம் அதனை போக்க அதற்கான உச்சாடன மந்திரம் கொடுத்து அதை விரட்ட வேண்டும் . இப்படி அனுபவத்தில் பல உள்ளன ஆகவே ஏதாவது புத்தகங்களை படித்து விட்டு மாந்திரீகம் செய்கிறேன் என்று முயற்சிக்க வேண்டாம் ஏனென்றால் அந்த மந்திரங்களில் எதிர் விளைவுகள் நமக்கு கிடைக்க இருக்கும் வெற்றிகளை தடை செய்யும் .அதனால் சரியானவர்களிடம் பயின்று பிரயோகம் செய்ய முயலுங்கள் .

**குறி சொல்ல மையும் கர்ண எட்சணி தியானம்**

**குறிசொல்ல மை செய்யும் முறை :**

*சிறிய நங்கை*
*பெரியநங்கை*
*அழுகண்ணி ஆனைவணங்கி*
*ஆடை ஓட்டி*

இந்த மூலிகைகளுக்கு முறையாக சாப நிவர்த்தி செய்து காப்புக்கட்டி பிடுங்கி வந்து அதன்பின்

*சந்தனம்*
*ஆந்தை பித்து*
*வெள்ளை கெவுளி பித்தும்*

இவையெல்லாம் ஒன்றாய் சேர்த்து காரம்பசுவின் பால் விட்டரைத்து குன்றி மணி அளவிற்கு ஒவ்வொரு குளிகை செய்து நிழலில் உலர்த்தி செப்பு சிமிளிற்குள் வைத்து .கர்ண எட்சணி தியானம் ஓத நடந்த நடக்கிற நிகழ்வுகள் அனைத்தயும் மற்றவர்கள் ஆச்சரியப்படும் படி தெளிவாக கூற முடியும் மேற்குறிப்பிட்ட குளிகையை தண்ணீரில் நனைத்து அதை நெற்றியில் திலகமிட்டு குறிசொல்ல வேண்டும்

**கர்ண எட்சணி தியானம் :**

அரி ஓம் அங் மங் வங் கர்ண எட்சணி வா வா
வந்து குரிசொல்லம்மா வந்து என் முன் நில் .

இதற்கான யந்திரம் எழுதி சித்தி செய்து கொண்டால் அனைத்து குறிகளும் வெட்ட வெளிச்சமாக பளிச்சென்று கூற முடியும்,.

**வசிய ஜால வித்தை**

மலை பிரதேசத்திற்கு சென்றால் தேவாங்கு கிடைக்கும் அங்கு சென்று ஒரு ஆண் தேவாங்கும் பெண் தேவாங்கும் பிடித்து வந்து 40 நாட்கள் வளர்த்து 40 நாளாகிய அன்று ஒவ்வொன்றையும் ஒவ்வொரு புதிய பாண்டத்திலிட்டு ஓர் ஆற்றங்கரைக்கு சென்று இரண்டு பக்கங்களிலும் தனித்தனியாக காளி தியானம் 108 செய்து தேவாங்கை உயிருடன் தனித்தனியாக பாண்டத்தில் வைத்து புதைத்து வைக்க வேண்டும் .

பின்பு 40 நாட்கள் கழித்து சென்று ஆண் தேவாங்கு புதைத்து வைத்த இடத்தை தோண்டி பார்த்தால் பெண் தேவாங்கும் அந்த குழியில் உள்ள பாண்டத்தில் வந்து விடும் இப்படி அகப்பட்ட தேவாங்கை எடுத்து காளிக்கு பலி கொடுக்க வேண்டும்

அதன் பிறகு இந்த பலி கொடுத்த தேவாங்கிலிருந்து குழித்தைலம் இறக்கி அதை ஒரு சிமிழில் பதனம் செய்து வைத்து கொள்ள வேண்டும் மேற்படி தைலத்தை நெற்றியில் திலர்த மிட்டு சென்றால் நீங்கள் எதை வசியம் செய்ய விரும்புகிறீர்களோ அவற்றை வசியம் செய்யலாம் இதனால் மனித வசியம், பெண் வசியம் ,தேவ வசியம் ,சர்வ வசியம் லோக வசியம் என்ற வசிய வகைகள் அனைத்தும் சித்திக்கும் .

**மலக்குட்டி ஜால வித்தைகள்**

மலக்குட்டி என்கிற தேவதையை வசியம் செய்ய அதற்கான தியான மந்திரத்தை ஒரு லக்ஷம் முறை ஜெபம் செய்து சித்தி செய்து கொள்ள வேண்டும் அப்படி செய்த பின்னர்தான் இந்த தேவதையை வைத்து பல எதிரிகளை வெல்லக்கூடிய ஜால வித்தைகளெல்லாம் செய்து எதிரி நம்முடைய காலில் வந்து விழும் நிலைமை ஏற்படும் .

இந்த தேவதைகளை சித்தி செய்துகொண்டால் அதற்கான படையல் தினமும் கொடுக்க வேண்டும் அதுதான் இந்த செயல் பாவமான செயல்தான் ஆனால் நம்மை துன்புறுத்துபவனை நாமும் புத்தி வரும் படி பாடம் புகட்டுவதில் தவறொன்றும் இல்லை .

**மலக்குட்டி மந்திரம் :**

**ஓம் இரீம் வா வா மலக் குட்டி சாத்தான் .**

என்று மந்திரத்தை சொல்லி இந்த மந்திரத்தை தகட்டில் எழுதி ராஜ பலியுடன் கூடிய பூஜை செய்து எதிரியின் பெயரையும் சுடுகாட்டு சாம்பலையும் அவனுடைய தலைமுடி ,காலடி மண் ,எதாவது ஒரு கருவையும் தகட்டில் வைத்து கொஞ்சம் மலமும் தட்டில் வைத்து உரு ஜெபித்தால் நம்முடைய எதிரியின் மலங்களை வாரி அடிக்கும் இந்த மலக்குட்டி சாத்தான் .

இந்த மந்திரத்தை பூஜை படையல் படித்தி ஒரு லக்ஷம் தடவை மந்திரம் ஜெபித்தால் சித்திக்கும் அந்த தேவதை நேரில் பிரசன்னமாகி கேட்கும் அப்போது கொஞ்சம் மலத்தை வாரி தகட்டில் வைத்தால் நீ நினைத்த இடத்தில் கொண்டு போடும் எதிரியின் வீடு முழுவதும் மலமாக வாடை வீசும் .

**ஆண் பெண் பாவை செய்து பிரச்சனைகளை தீர்க்கும் விதம்**

**பாவையின் வகைகள் :**

*மெழுகு பொம்மை பாவை*
*மாவினால் பாவை செய்தல்*
*சுடுகாட்டு சாம்பலினால் பாவை செய்தல்*
*மஞ்சள் கிழங்கினால் பாவை செய்தல்*
*களிமண்ணால் பாவை செய்தல்*
*மரத்தினால் பாவை செய்தல்*

இப்படியாக பாவை இந்த முறைகளில் செய்யப்படுகிறது .இத்தனை வகை பாவை எதற்காக பயன்படுத்தலாம் என்றால் அஷ்ட கர்மங்கள் ஆடவும் ,எதிரிகளின் கரு ஒன்றும் நம் கையில் இல்லாத சூழலில் இந்த பாவை செய்து அதில் அதற்குரிய மந்திர உருக்களை ஏற்றி அவர்கள் வீட்டின் முன் புதைத்தால் அந்த பாவையை தாண்டிய உடன் அவனுக்கு நன்மையோ தீமையோ நடக்கும் .

இந்த முறையினால் பிரச்சனையில் அகப்பட்டவர்கள் நம்மிடம் நேராக வர வேண்டிய கட்டாயம் இல்லை அவர்களுடைய கரு மட்டும் இருந்தால் போதும் அவர்கல்க்குரிய ஏவல் பில்லி சூன்யம் பேய் பிசாசு பிரம்மராட்சசி போன்ற அனைத்து வகையான பிரச்சனைகளையும் அந்த நபர் வராமலேயே எழுத்தில் விரட்டி விட முடியும் .

இந்த பாவையினை பயன்படுத்துவது எப்படி என்றால் ஒவ்வொரு காரியங்களுக்கும் ஒவ்வொரு விதமாக பயன்படுத்த வேண்டும் .ஆகவே குருவின் ஆலோசனைப்படி முறை அறிந்து இந்த சூட்சமங்களை தெரிந்து செய்தால் வெற்றி நிச்சயம் ஒரு சில பாவைக்குள் யந்திரங்கள் வைத்தும் பாவை செய்வார்கள் ஒரு சிலவற்றில் அதற்கான மூலிகை வேர்களை

இதனாலேயே வசிய சித்தி பெற்றவர்கள் அதை பௌதீக விஷயங்களுக்குப் பயன்படுத்தாமல் இறைவனை வசப்படுத்த அதை ஒரு சாதனமாகக் கொண்டார்கள்.

சில வசிய மந்திரங்கள் பற்பல தேவதைகளை நமக்கு அடிமையாக்கும். அந்த தேவதைகளிடமிருந்து நம் வினைத் துன்பங்களில் இருந்து விடுதலை கேட்க வேண்டும். மாறாக அவைகளிடம் இகபர சுகங்களை யாசிக்கக்கூடாது.

வினைத் துன்பங்கள் நீங்கிய நிலையில் வசீகரிப்பும் அதிகரித்து அதன் காரணமாக இறைவனை எண்ணிச் செய்யும் தவமானது, வெகு வேகமாக ஈடேறும். பல நூறு ஆண்டுகள் தவம் செய்து அடைய வேண்டிய பலனை, வசீகரிப்பு மிகுந்தவர்கள் சில ஆண்டிலேயே அடைந்திடலாம். அஷ்டமா சித்துவில் “வசிய சித்து” வின் உண்மையான பணி இதுவே. அதற்கு மாறாக இதை பயன்படுத்துகிறவர்கள் உலக வாழ்வில் உழன்று கொண்டே இருப்பார்கள். குட்டிக் குட்டி தேவதைகளிடம் சிக்கிக் கொண்டு விடுவார்கள். முதலில் அவர்களுக்கு கட்டுப்படும் அந்தத் தேவதைகள் பின்னர் அவர்களை விழுங்கிவிடும்.

அகோர மந்திரங்களின் பலன்கள்

- துங் நமசிவாய என்று உச்சரிக்க - வித்துவான் ஆகலாம்.
- ஓங் கங்சிவய என்று உச்சரிக்க - சக்தி அருள் உண்டாம்.
- ஓம் சிங்சிவாய என்று நம என்று உச்சரிக்க - நினைப்பது நடக்கும்.
- ஓம் பங்சிவாய நம என்று உச்சரிக்க - தடைகள் நீக்கும்.
- ஓம் யங்சிவாய நம என்று உச்சரிக்க - துன்பங்கள் விலகும்.
- ஓம் மாங்நமசிவாய என்று உச்சரிக்க - செல்வம் செழித்தோங்கும்.
- ஓம் மங்சிவாயநம என்று உச்சரிக்க - கவலைகள் வற்றும்
- கெங்ஓம் நமசிவாய என்று உச்சரிக்க - வசிய சக்தி மிகும்
- ஓம் மங்யங் சிவாய என்று உச்சரிக்க - விஷங்கள் இறங்கும்.
- அங் ரங்ஓம்சிவாய என்று உச்சரிக்க - சாதனை படைக்கலாம்.
- ஓங் அங் சிங் சிவாயநம என்று உச்சரிக்க - சப்த கன்னியர் தரிசனம்.
- ஓங் வங்சிங் சிவாயநம என்று உச்சரிக்க - முக்குணத்தையும் வெல்லலாம்.
- ஹிரீம் நமசிவாய என்று உச்சரிக்க - அரிய பேறுகள் கிடைக்கும்.
- ஐயுஞ் சிவாயநம என்று உச்சரிக்க - ஆறு சாஸ்திரம் அறியலாம்.
- வங்சிங் ஓம்சிவாயா என்று உச்சரிக்க - தேவர்கள் தரிசனம் காணலாம்.
- சங் சிவய நம என்று உச்சரிக்க - விஷ பாதிப்பு நீக்கும்.
- ஓம் துங்சிவாய நம என்று உச்சரிக்க - முத்தொழிலும் சிறக்கும். ஶ்ரீலம்ஹ்ரீம் ஓம் நமசிவாய என்று உச்சரிக்க- பெரிய பூமிகள் கொடுக்கும்.

- சிங் நமசிவய என்று உச்சரிக்க - பயிர்களால் நன்மை.
- வங் சிவய நம என்று உச்சரிக்க - மழை நனைக்காது.
- சிவாய ஓம்ஸ்ரீ என்று உச்சரிக்க - மழை நிற்கும்.
- கலியுங் சிவாய என்று உச்சரிக்க - வெள்ளம் பெருக்கெடுக்கும்.
- ஓம் கங்சிவ்வுங்சிவய என்று உச்சரிக்க - பெரியகாரியங்களில் வெற்றி. சங்யவ் சி மந என்று உச்சரிக்க - தண்ணீரில் நடக்கலாம்.
- மங் நங் சிங் சிவய என்று உச்சரிக்க - பிசாசு, பேய் சரணம் செய்யும்.
- "சங் கங் சிவாயநமா" என உச்சரிக்க ஜீவனில் சிவத்தைக் காணலாம்.
- "மங் மங் மங்" என உச்சரித்தால் உணவை வெறுத்து பசியை துறக்கலாம்.
- "வசாலல சால்ல சிவாய நமா" என உச்சரித்தால் மழையில் நனையாமல் செல்லலாம்.
- "சரனையச் சிவாய நம" என உச்சரிக்க வானில் பறக்கலாமாம்.
- "கேங் கேங் ஓம் நமசிவாயம்" என உச்சரிக்க எல்லோரும் வசியமாவர்.
- "ஓங் சருவ நம சிவாய" என உச்சரிக்க மழை உண்டாகும்
- வாமதேவ மந்திரம்
- "கங்கங்ணங் நிஷர் சிவிங்கம்" என உச்சரித்தால் காமதேவன் அருள் கிட்டுமாம்.
- "வங் வங் சிங் சிவாய நம"என உச்சரிக்க உலகின் எப்பாகத்திற்கும் வழி தெரியுமாம்.
- "சதா சிவாய நம" என உச்சரிக்க நான்கு வேதத்தின் பொருள் அறியலாம்.
- "ஓம் அங்கிஷ ஊங் சிவாயநம" என உச்சரிக்க நினைத்த இடத்தில் மனதினை விரைவாக செய்யலாம்.
- சத்யோசாத மந்திரங்கள்
- "சிவாய ஓம்" என உச்சரிக்க திருமாலில் ஆற்றல் கிட்டும்.
- "ஓங் உங் சிவாய ஓம்" என உச்சரிக்க குண்டலினியின் சக்தியை காணலாம்.
- "கிருட்டிணன் ஓம் சிவாய நம" என உச்சரிக்க இராவணன் மலையைப் பெயர்த்த பலம் கிட்டும்
- ஈசான மந்திரங்கள்
- "சிமிறியும் ஊங்சிவாய ஊங் அங் நம ஓ" என உச்சரிக்க சிவதத்துவத்தை காணலாம்.
- "மங் நங் சிவ சிவாய ஓம்" என உச்சரிக்க நந்தியின் தத்துவத்தை உணரலாம்.
- "வங் யங் சிங் ஓம் சிவாய" என உச்சரிக்க எதிரியின் உடல் தனலாகும்.
- "சிங் சிங் சிவாய ஓ" என உச்சரிக்க முக்காலத்தையும் உணரலாம்.
- "மய நசிவ சுவாக" உச்சரிக்க ஆகாயத்தில் பறந்து செல்லும் சித்தர்களின் ஆசி கிட்டும்.

தீப அஞ்சனம்

ஏதாவது ஒரு அமாவாசை அன்று 50 கிராம் பசுநெய்யும், 50 கிராம் நல்லெண்ணையும், தாமரை நூல் திரியும் வாங்கிக் கொள்ள வேண்டும். இதை நம் வீட்டில் இருக்கும் திருவிளக்கில் போட்டு தீபம் ஏற்ற வேண்டும்.

விளக்கில் இருந்து நான்கு அடி தூரம் தள்ளி சுத்தமான மஞ்சள் விரிப்பு விரித்து அதில் நிமிர்ந்து உட்கார வேண்டும். நமது புருவமத்திக்கு நேராக தீபம் எரிய வேண்டும். 108 முறைக்கு குறையாமல் தினமும் பின்வரும் மந்திரம் ஜபித்து வரவேண்டும். வாயாலும் சொல்லலாம்.

ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் நமோ
பகவதி தீபிகா ஜோதி சொரூபணி
ஆகர்ஷய ஆகர்ஷய வாவா ஸ்வாஹா

சரியாக 90 தினங்களுக்குள் தீபம் உங்களுடன் பேசுவதை நீங்கள் சூட்சுமமாக உணர முடியும். உங்கள் எதிர்காலத்தையும், உங்கள் அன்றாட பிரச்சினைகளுக்கு தீர்வையும், எடுக்கும் ஒவ்வொரு முடிவிலும் தடங்கல்களைத் தாண்டும் வழிமுறைகளையும், நீங்கள் கண்கூடாக உணர முடியும். இந்த பயிற்சி மேற்கொள்ள ஆரம்பித்ததும் கண்டிப்பாக அசைவம், மது, புகை தவிர்க்க வேண்டும்.

அள்ள அள்ள குறையாத செல்வத்திற்கு பூஜை

ஆடி மாதம் பவுர்ணமி அல்லது ஆடி மாதம் வளர்பிறை ஞாயிறு அன்று ஆவாரை செடிக்கு தூப தீபம் காட்டி நிவேதனம் செய்து செடியிடம் வேண்டி கொண்டு அதன் வேர் அறுந்து விடாமல் செடியை எடுத்து ஆயுதம் உபயோகிக்காமல் வேரை மட்டும் எடுத்து மஞ்சள் பூசி, மஞ்சள் துணியில் கட்டி பணப்பெட்டியில் வைத்து அடிக்கடி தூப தீபங்கள் காட்டி வர லக்ஷ்மி கடாட்சம் ஏற்பட்டு மிகுந்த செல்வம் சேரும்.

அதே போன்று வெள்ளிக்கிழமை 6-7 மணிக்குள் கரு ஊமத்தை செடிக்கு பூஜைகள் செய்து வேரை மேற்சொன்ன முறைப்படி எடுத்து மஞ்சள் தடவி தூப தீபம் காட்டி தாயத்தில் அடைத்து வலது புஜத்தில் கட்டி கொள்ள பணம் பல வழிகளில் வரும். இது போன்று நம் முன்னோர்கள் கொடுத்து சென்ற முறைகள் பல உள்ளது.

கணவன் மனைவி வசியம்

சில குடும்பங்களில் கணவன் - மனைவியிடையே ஒற்றுமையே இருக்காது. ஏனென்றால் நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் எனும்படி கணவன் சொல் கேளாமல், கணவன் வார்த்தைகளை மதியாமல் நடக்கும் மனைவிகள் ஏராளம். இதனால் வாழ்வில் நிம்மதியின்றி தவிக்கும் கணவர்களின் தவிப்பு வர்ணிக்க இயலாது.

விரும்பிய கன்னிகைகளை மயக்கி காதலில் விழ வைக்க ஏங்கி தவிக்கும் காளையர் பலர். அலுவலகங்களில் நமக்கு மேலே உயர் பதவி வகிக்கும் பெண்களால் அடையும் துன்பங்கள் பல...

இப்படி பிறந்தது முதல் இறக்கும் வரை தாய், தாரம், சகோதரி, உடன் பணிபுரிவோர், உயரதிகாரி, காத
லி, நண்பர்கள் என சந்தித்து பழக வேண்டிய சூழல்கள் பல, இதனால் இவர்களால் அடையும் இன்னல்கள் பல..

இச்சூழலில் செல்லும் இடமெல்லாம் எந்த பெண்களை கண்டாலும் அவர்கள் நமக்கு வசியப்பட்டால் நமக்கு வேண்டிய உதவிகளை செய்தால் நம் வாழ்க்கை இனிமையாக மாறும். இதற்கு நல்ல வசியம் ஒன்றை சொல்லும்படி வாசகர்கள் கேட்டதால் இதனை விரிவாக சொல்கிற்றேன்.

வெள்ளிக்கிழமை தினம் தன் நட்சத்திர பட்சி ஆட்சி செய்யும் வேளையில் மிளகு சாரணை செடிக்கு காப்பு கட்டி சாப நிவர்த்தி செய்து கிழக்கே போகும் வேரை எடுத்து வசிய மந்திரம் (யநமசிவ) என்று 1008 உரு சொல்லி தாயத்தில் அடைத்துக் கட்டிக்கொண்டால் பார்க்கும் அனைத்து பெண்களும் வசியமாவார்கள்.

எந்த வசிய முறையையும் குரு வழிகாட்டுதலுடன் செய்ய உடனே பலன் தரும்..

யந்திரத்தின் மகிமைகள்

யந்திரம் என்பது வெறும் கோடுகள் என்று எண்ணக்கூடாது . மிக பெறிய ஆலயநிர்மானம் எப்படியோ அதே போன்றதுதான் யந்திரத்தின் அங்கங்கள் .ஒருஆலயம் கட்ட துவங்கும் முன் நல்ல முகூர்த்தம் பார்த்து மனை ஆயாதி முறையாக அமைத்து வாஸ்த்து பார்த்து மனை தோஸம் விலக்கி பின்பு ஆலயம் எழுப்பி பின்பு ஒரு நல்ல நாள் பார்த்து கும்பாபிஸேகம் செய்து ஆலயத்திலே நிருவுகிற ஒவ்வொரு தெய்வ சிலைக்கும் எவ்வாறு தனித்தனியாக அபிஸேகம் ஆராதனை செய்கிறார்களோ அதேபோல் முறையாக யந்திரம் அமைக்க வேண்டும் .

யந்திரத்தில் உள்ள ஒவ்வொரு கோடுகளும் எழுத்துகளும் உயிர் உள்ள தெய்வ சிற்பங்களாகும் . அதில் நம் எண்ண உணர்வுகளை பதித்து வணங்கி எழுதவேண்டும் . ஆலயம் போல் யந்திரத்தை அலங்கரித்து சுத்தமாய் காக்க வேண்டும் . அப்போதுதான் யந்திரம் பலன் கொடுக்கும் .

பல செயல்களுக்கும் . பல தெய்வங்களுக்கும் தனித்தனி யந்திரம் மந்திரம் உண்டு . இதை அறிவது தந்திரம் . தந்திரம் அறிந்து மந்திரம் செபித்து யந்திரம் உயிர்ப்பித்தால் அளவிட முடியாத பலன் உண்டு . அனுபவிப்பவர்கள் தவறு செய்தாலும் யந்திரம் எழுதுபவர்கள் தவறு செய்யக்கூடாது .

எதற்க்கும் குரு மந்திரம் உண்டு அப்போதுதான் யந்திரம் உயிர்ப்பெரும் . மூலிகை பொட்டு வைக்க சகல வசியம் உண்டாகும் . நல்ல எச்செயலுக்கும் . வேண்டுவோர்க்கு முறையாக யாகத்தில் வைத்து வசியம் ஓதி வரைந்து தரப்படும் .

யந்திரத்திற்க்கு முறையான மந்திரம் ஓதினால் தந்திரம் வேலை செய்யும்

தன வசியம் ,ஜன வசியம்

ஹத ஜோரி மற்றும் ஹத ஜோடி என அழைக்கப்படும் மூலிகையானது மிகவும் அபூர்வமான ஒன்று மட்டுமல்ல-காண்பதற்கு அரிதும் கூட.இதன் மொத்த உயரமே 1-2 இன்சு மட்டுமே. மத்திய பிரதேச மாநிலம் மற்றும் நேபால் பள்ளத்தாக்குகளில் விளையும் இது-தாந்த்ரீகத்தில் மிக முக்கிய பங்கு வகிக்கும் ஒன்றாகும். பண மற்றும் ஜன வசியத்திர்க்கு பிரசத்தி பெற்ற ஒன்றும் கூட. இந்த செடியின் பெயர் "பிர்வா" என அழைக்கப்படுகிறது. மிக அதிகமான எம் தேடுதலுக்கு பிறகு யாம் தெரிந்து கொண்ட விஷயம்-தமிழில் இதற்கு "புலி நகம்" மற்றும் "காக்கா மூக்கு செடி","தேள் கொடுக்கி" என்றெல்லாம் அழைக்கப்பட்டு வந்துள்ளது.

இதன் வேரானது மனித கைகள் இரண்டும் கை கூப்புவது போல் இருப்பதால் இதற்கு ஹிந்தியில் மற்றும் தாந்த்ரீகத்தில் "ஹத ஜோடி" என அழைக்கப்பட்டு வந்தது.தாந்த்ரீகத்தில் - இதை உடன் வைத்திருந்தாலே நடக்க முடியாத காரியம் என்று எண்ணி இருந்ததெல்லாம் நடந்து முடியும் என கூறப்படுகிறது. மேலும் எவ்விதமான பயத்தையும் போக்கி மனிதனில் வசீகர சக்தியை ஏற்படுத்தும் இது.

தாந்த்ரீகத்தில் இதன் பெருமைகளாக : பயத்தை போக்கும், பணத்தை வசீகரிக்கும், மனிதர்களை வசீகரிக்கும், விபத்துக்கள் ஏற்படாமல் காக்கும் மற்றும் இதை வைத்திருப்போரை அதிர்ஷ்டசாலி ஆக்கும் என்றெல்லாம் கூறப்படுகிறது. மத்திய பிரதேசம் மற்றும் வடக்கு மாவட்டங்களின் குக்கிராமங்கள் மற்றும் தாந்த்ரீகத்திற்கு பெயர் பெற்ற சட்டீஸ்கார் மாநிலம்

போன்றவற்றில் இது மிக பிரபலம். சாமுண்டீஸ்வரியின் தோற்றமாக இது கூறப்படுகிறது.

மந்திரித்த கயிறுகளின் மகிமைகள்

பல கோவில்களில், தர்காக்களில், மாந்திரீகர்களிடத்தில் பலர் மந்திரிக்கப்பட்ட முடிக்கயிறுகளை வாங்கி அணிந்திருப்பதை காணலாம். தேர்ந்த மந்திர உபாசனை உள்ளவர்கள் கொடுத்தால் மட்டுமே இது வேலை செய்யும். இதை பற்றி நன்கு ஆராய்ந்திருக்கிறேன். சிலர் இதனால் பயன் இல்லை என்று அறியாமையில் சொல்வதுண்டு. இதற்கு அறிவியல் ரீதியாகவும் விளக்கம் கொடுக்க என்னால் முடியும்.

நமது கைகளில் உள்ள நாடியில் தான் உடலில் உள்ள வாதம்,பித்தம், கபம் போன்றவற்றை அறிய முடியும்.மேலும் நாடியில் கிரகங்கள் சூரியன்,சந்திரன் மற்றும் குரு அமைந்துள்ளன. ஆகவே சிகப்பு,வெள்ளை, மஞ்சள் போன்ற முடிக்கயிறுகள் நம் நாடியில் பட்டு வர பல்வேறு பலன்கள் உண்டாகும். சிகப்பு அனுமனுக்கும் உகந்தது,மேலும் உடல் கோளாறுகள், மன கோளாறுகள் நீக்குவதிலும் இது சிறந்த பங்கு வகிக்கிறது. குறிப்பிட்ட வண்ணத்தை குறிப்பிட்ட தேவைக்கு ஏற்றவாறு தேர்ந்தெடுத்து தேவையான பீஜ மந்திரங்களை குறிப்பிட்ட
எண்ணிக்கையில் உச்சரித்தவாரே முடி போடுதல் தான் முடிக்கயிறு.

இதன் மூலம் பல காரியங்களை செய்ய முடியும். கருப்பு நிற கயிறு திருஷ்டி, குழந்தைகளின் தோஷங்கள், கிரக தோஷங்கள் மற்றும் செய்வினை போன்றவற்றிற்கும், சிவப்பு நிற கயிறு பல வித சித்து,வசியம் மற்றும் அதிர்ஷ்டத்திற்கும் உபயோகப்படுத்தலாம்.

தெய்வீக சக்திகளை பெற, சுபமுண்டாக ஆரஞ்சு மற்றும் மஞ்சள் கயிரும்,வெள்ளை உடலில் சக்திகள் விரயமாகாமல் தடுப்பதற்கும் பயன் படுத்த வேண்டும். சித்தர்கள், மாமுனிகள் பல முன்னோர்கள் புஜத்தில், கழுத்தில் மற்றும் கணுக்காலில் முடிக்கயிறுகள் உபயோகித்து வந்ததை நாம் யாவரும் அறிந்திருப்போம். 36,108,1008 என பல்வேறு எண்ணிக்கையில் முடிக்கயிறு இடலாம். இவற்றின் சக்தி குறிப்பிட்ட கால அளவே இருக்கும்.பின்பு மாற்றி விட வேண்டும்.

சூரிய உதயத்திற்கு முன் விடிகாலையில் சுத்தத்துடன் கட்டுபவரும், கட்டப்படுபவரும் வடக்கு முகமாக நின்று கட்ட சக்தி மிகும்.கிரகங்களுக்காக கட்டி கொள்வதென்றால் ஞாயிறு சிகப்பும், திங்கள் கிழமை வெள்ளையும்,வியாழக்கிழமை மஞ்சளும் நாமே கட்டி கொள்ளலாம்.பலன் தரும். இது போன்று விபூதி, குங்குமம் போன்றவற்றில் சக்திகள் ஏற்றி கொடுப்பதும் முறையில் உள்ளன.

எட்சணி வசியம்:

சின்ஹணி யட்சணி வசிய முறை:

இந்த தேவதையை வசியம் செய்ய நீங்கள் ஒரு திடமான மனதோடு இருந்து மந்திரம் ஜெபித்தால் மட்டுமே சாத்தியமாகும் .இந்த தேவதை பிரசன்னமாகும் சமயம் நாம் மனதில் சிறிது சலனம் ஏற்பட்டாலும் பாதிப்புகள் ஏற்படும் வாய்ப்புகள் உள்ளன .

மூல மந்திரம் :

ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் பட் பட்
ஹூம் ஹூம் ஹூம்
சின்ஹணி பட்

பிரயோக முறைகள் :

மேற்கூறிய மந்திரத்தை தனிமையான இடம் நந்தவனம் ,அல்லதுசிவன் கோயிலில் இருந்து 10000 உருக்கள் ஜெபிக்க வேண்டும் இந்த பூஜை துவங்குவதற்கு முன்னால் கணபதி பூஜை , சிவ பூஜை செய்து விட்டு அதற்கு பிறகு இந்த மந்திரத்தை 10000 உருக்கள் ஜெபித்தால் சித்தியாகும் .

இந்த தேவதையை வசியம் செய்து கொண்டால் உலகில் உள்ள அனைத்து விதமான வசிய வேலைகள் அனைத்தும் செய்ய முடியும் .இதனால் ஆண் பெண் வசியம் ,லோக வசியம் ,ராஜ வசியம் தன வசியம் ,மிருக வசியம் என்று அனைத்து விதமான வசிய பிரயோகங்களும் செய்யலாம் .இந்த தேவதை சித்தி செய்யும் பொது பல இடையூறுகள் ஏற்படக்கூடும் .

மனோ திடம் உள்ளவர்கள் மட்டும் குரு உபதேசம் பெற்று முயற்சிக்கவும் .இது அனுபவ முறை அல்ல .........

கர்ண பிசாசினி மந்திரம்

கர்ண பிசாசினி என்னும் தேவதை யட்சணி வகையை சார்ந்ததுதான் கர்ண யட்சணி என்றும் ஒரு தேவதை உண்டு அந்த தேவதையும் முக்காலமும் காதில் வந்து பேசிக்கொண்டிருக்கும் நீங்கள் நினைத்த கேள்விகளுக்கான குறி சொல்லும் இந்த சப்தம் ஒரு வகையான கீச்சு குரலில் அமையும் .அந்த தேவதையை போலவே இந்த கர்ண பிசாசினி தேவதையும் குறி சொல்ல கூடியதுதான் .

மற்ற குறி சொல்லும் தேவதைகளுக்கும் இந்த தேவதைகளுக்கும் என்ன வித்தியாசம் என்றால் மற்ற தேவதைகளை வைத்து குறி சொன்னால் உணர்ந்து சொல்ல வேண்டும் .இந்த தேவதைகள் அப்படி அல்ல .இந்த தேவதையானது காதில் வந்து பேசும் .முதலில் சித்தி செய்யும் போது காதில் ஒரு வகையான இரைச்சல் சப்தம் கேட்கும் அதற்கு பிறகு ஒரு காத்து சுத்தமாக கேட்காது .அதற்கு பிறகுதான் அந்த தேவதை பேசும் சப்தம் நம் காதுக்கு கேட்கும் .

இந்த மந்திரத்தை அகோரிகள்தான் பயன்படுத்துகிறார்கள் அதனால் இந்த உபாசனா செய்யும் பொது மிகவும் பாதுகாப்பு அவசியம் .

கர்ண பிசாசினிமூலமந்திரம் :

ஓம் ஹ்ரீம் சமன் சக்தி பகவதி கர்ண பிசாசினி
சந்திர ரூபிணி வட் வட் சுவாகா

இந்த மந்திரத்தை 125000 உருக்கள் ஏற்றி சித்தி செய்த பின்னர் அந்த தேவதை உங்களிடம் பேசும் .

ஷோபன எட்சணி மந்திரம்

இந்த எட்சணி ஒரு குறிப்பிட்ட விஷயங்களின் பாதுகாவலுக்காக வைத்திருந்ததாகவும் ,இந்த தேவதையை சித்தி செய்து கொண்டால் நல்ல செல்வ வளமோடு வாழலாம் என்றும் கூறுகிறார்கள் .இந்த எட்சணி இருக்கும் இடத்தில் சகல செல்வங்களும் கொழிக்கும் .

ஷோபன எட்சணி மூலமந்திரம் :

ஓம் அசோக் பல்லவ கர் கர்த்தலே
ஷோபிணி ஷ்ரீம் க்ஷா சுவாகா

இந்த மந்திரத்தை எவ்வளவு அதிகம் உருக்கள் எவ்வளவு அதிகம் ஏற்ற முடியுமோ அவ்வளவு 14 நாட்கள் தொடர்ச்சியாக ஓத வேண்டும் மந்திரம் ஜெபிக்கும் பொது சிவப்பு பட்டு உடுத்த வேண்டும் சிவப்பு மணிமாலை அணிந்து மந்திரம் ஜெபிக்க வேண்டும் .

இந்த மந்திரம் எவ்வளவு அதிகம் ஜெபிக்க முடியுமோ ஜெபித்தால் சகல செல்வ வளங்களும் குறைவில்லாமல் கிடைக்கும் .

ஜெய விஜய யட்சணி மந்திர பிரயோகம்

ஜெய யட்சணி மூல மந்திரம்

ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் நமோ நம ஜெய ஹம் பட்

விஜய யட்சணி மூல மந்திரம்

ஓம் கிலி கிலி குதி காதி துகத் துகத்
வசமானாய விஜயே ஆஹ் ஆஹ் சுவாகா

இந்த தேவதையை விஷ்ணு ஆலயத்தின் வாயிலில் இரண்டு பக்கத்திலும் பெண் உருவங்களில் சிலை வைத்திருப்பார்கள் அந்த தேவதைகளுக்கான மந்திரம் தான் மேற்கூறியவை .

இந்த மந்திரம் பிரயோகம் செய்யும் பொது இரண்டு மந்திரங்களையும் ஒரே முறையில் சொல்லி விடக்கூடாது ஒன்று ஜெபித்து சித்தி ஆன பின்பு அடுத்ததை தொடர வேண்டும் .

இந்த மந்திரத்தை எதாவது அமாவாசை தினங்களில் தான் பூஜை துவங்க வேண்டும் இதை ஏதாவது ஆற்றங்கரை அல்லது நந்தவனம் ,சிவன் ஆலயம் இது போன்ற இடங்களிலிருந்து ஜெபிக்கலாம் .

காமேஸ்வரி எட்சணி மந்திர பிரயோகம்

காமேஸ்வரி எட்சணி மூல மந்திரம்

ஓம் காமேஷ்வரி காம் சித்தேஷ்வரி சுவாஹா
ஓம் பட் சுவாஹா ஓம் க்ரீம் குரு சுவாஹா

காமேஸ்வரி எட்சணி மூல மந்திரம் 2

ஓம் ஹ்ரீம் ஆகச்ச ஆகச்ச
காமேஷ்வரி சுவாஹா

காமேஸ்வரி எட்சணி மூல மந்திரம் 3

ஓம் ஹீம் ஹம் காமேஸ்வர்யே

ஹூம் ஹூம் ஹூம்

இந்த ஏதாவது ஒரு மந்திரத்தை முப்பது நாட்களில் ஒரு லக்ஷம் முறை ஜெபித்தால் சித்தியாகும் .இதனால் பல காரிய சாதனைகள் புரியலாம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது

மந்திரம் என்றால் என்ன ?

மந்திரங்கள் என்று சொல்லப்படுபவை ஒலிக்கூட்டங்களாகும். ஒலிக் கூட்டங்கள் எப்படி மந்திரங்கள் என்ற சிறப்பைப் பெறுகின்றன என்று சிந்திக்க வேண்டும். உதாரணமாக ‘நமசிவாய’ என்ற ஒரு சக்தி வாய்ந்த மந்திரத்தை எடுத்துக் கொள்வோமேயானால் அந்தச் சொல்லின் பொருளைச் சிந்திக்க வேண்டும். ‘சிவனை வணங்குகிறேன்’ என்ற பொருளுடையது நமசிவாய என்ற சொல். சாதாரணக் குழந்தைகூடப் புரிந்து கொள்ளக்கூடிய ‘சிவனை வணங்குகிறேன்’ என்ற இரண்டு சொற்கள் எப்படி சக்திவாய்ந்த மந்திரமாக மாறின என்பதை ஆழ்ந்து பார்க்க வேண்டும். கொள்ள முடிகிறது.

நம்மைப் போன்ற மக்கள் பேசும்போது, நாம் பேசுகிற மொழி ‘குறைமொழி’ என்று சொல்லப் பெறும். ஏன் குறைமொழி என்று சொல்லப்படுகிறது என்றால் நம்முடைய மனத்திலுள்ள கருத்தை முழுவதுமாக வெளியிடுகின்ற ஆற்றல் பெற்ற சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பேச நம்மால் முடிவதில்லை. மிகச் சிரமப்பட்டு நல்ல சொற்களை எடுத்துக் கோத்து நம்முடைய கருத்தைத் தெரிவித்தால் கூட எதிரே இருக்கின்றவர்கள் அவற்றைப் புரிந்து கொள்கின்றனரா என்பது ஆராய்ச்சிக்குரியது. பல சமயங்களில் நாம் சொல்லிய கருத்தை எதிரே இருந்து கேட்பவர்கள் புரிந்து கொள்வதாகத் தெரிவதில்லை. இன்னும் சில சமயங்களில் நாமேகூடப் பேசி முடித்த பிறகு, ‘இதை இப்படிச் சொல்லியிருக்கலாமே; அதை அப்படிச் சொல்லியிருக்கலாமே’ என்று நினைக்கிறோம். அதற்குக் காரணம் என்னவென்றால் நாம் பயன்படுத்திய சொற்கள் முழுவதுமாக ஆற்றல் பெற்ற சொற்களாக இல்லாமல், நம்முடைய கருத்தை வெளியிடுகின்ற சக்தி வாய்ந்தவையாக இல்லாமல் குறைமொழியாக இருப்பதுதான். இப்படி குறைமொழியாக இருக்கின்ற சொற்களைப் பேசுகின்ற நாம் மந்திரங்களைக் காண்பது என்பது இயலாத காரியம்.

ஆயினும் நம்முடைய முன்னோர், பெரியவர்கள், ஞானிகள், தபசிகள், ரிஷிகள் ஆகியோர் நிறைமொழி பேசுபவர்களாக இருந்தார்கள். தொல்காப்பியனார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் மந்திரங்களைப் பற்றி ஆராய்ந்து மிகச் சிறந்த கருத்து ஒன்றை வெளியிட்டுள்ளார். “நிறைமொழி மாந்தர்” என்று இந்தப் பெரியவர்களுக்குப் பெயர் வைத்துள்ளார்.

நிறைமொழி மாந்தர் என்றால் என்ன? நாம் பேசுகின்ற குறைமொழிகளையே எடுத்துக் கொண்டு, அந்தக் குறைமொழிகளை நிறைமொழிகளாக மாற்றுகின்ற பேராற்றல் வாய்ந்தவர்கள் அவர்கள். அப்படியானால் இந்த ஆற்றல் எங்கே இருக்கிறது? இந்தச் சொற்களிலா? இல்லை.

சாதாரண சொற்களைத்தான் அவர்கள் எடுத்துக் கொள்கிறார்கள். ஆனால் அந்தச் சொற்களை எடுத்துக்கொண்டு அவர்கள் அவற்றைத் தம்முடைய ஆற்றல் காரணமாக, தம்முடைய சக்தி முழுவதையும் அந்தச் சொற்களில் ஏற்றி, 'இவை மந்திரங்களாக ஆகக் கடவன' என்று ஆணையிடுவதன் மூலம் அவற்றை மந்திரங்களாக மாற்றுகிறார்கள். இதனைத்தான் தொல்காப்பியனார்

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி....

என்று சொல்லியுள்ளார். இந்த ஆணையிடுதல் என்பது, குறைமொழியாக உள்ள எழுத்துக் கோவைகளை, சொற்கோவைகளை, சக்திபெற்ற மந்திரங்களாக மாற்றுவதுதான்.

அப்படியானால் இந்தச் சொற்கள் எப்படி இந்த ஆற்றலைப் பெறுகின்றன என்று சிந்திக்க வேண்டும். எல்லாச் சொற்களுக்கும் எழுத்துகளுக்கும் வைப்ரேஷன்ஸ் (க்ஷிமிஙிஸிகிஜிமிளிழிஷி) என்று சொல்லப்படுகிற அதிர்வுகள் உண்டு. இந்த அதிர்வுகளை எல்லா எழுத்துகளும், சொற்களும் பெற்றிருந்தாலும் எந்த அதிர்வுகளோடு சேர்த்தால் அவை பயன்படும் என்பதை ஆராய்ந்து அவர்கள் அறிந்திருந்தார்கள். அப்படி அறிந்திருந்த காரணத்தினாலேதான் இந்தப் பல்வேறு எழுத்துகளை ஒன்று சேர்ப்பதன் மூலம் பல்வேறு அதிர்வுகளை ஒன்று சேர்த்துப் புதியதொரு ஆற்றலை அவை பெறுமாறு செய்கின்றார்கள். அப்படி ஆற்றலைப் பெறுமாறு அவற்றைச் செய்துவிட்ட பிறகு அவை மந்திரங்களாக மாறி விடுகின்றன.

பல சமயங்களில் அக்ஷரங்கள் என்று சொல்லப்படுகிற மந்திரங்களுக்குப் பொருளே இருப்பதில்லை. ஐம், ஹ்ரீம், க்லீம் என்ற பீஜ அக்ஷரங்கள் எல்லாவிதமான பொருளையும் தருவதில்லை. பொருளில்லாமல் சொற்கள் உண்டா என்று சிந்திக்க வேண்டும். பொருளில்லாமலும் சொற்கள் இருக்கலாம். ஆனால் அவை குறைமொழி மாந்தரால் பேசப்படும்போது அர்த்தமற்ற ஒலிக் கூட்டங்களாக மாறிவிடுகின்றன. ஆனால் நிறைமொழி மாந்தர் வேண்டுமென்று நினைக்கும் பொழுது அந்த அதிர்வுகளையுடைய எழுத்துகளை ஒன்று சேர்க்கிறார்கள். அப்படி ஒன்று சேர்த்த பிறகு - ஹ்ரீம் என்ற மந்திரத்தை உண்டாக்கிவிட்ட பிறகு அது அன்னையின் பூரண சக்தியைப் பெற்ற மந்திரமாக இருக்கிறதே தவிர அதற்கு மேல் பொருள் ஒன்றும் அதற்குத் தேவையில்லை.

இந்த ஆற்றலைப் பெற்ற அந்த மந்திரங்களை ஓயாமல் திருப்பித் திருப்பிச் சொல்கிறவர்கள், ஜபிக்கிறவர்கள் இந்த ஆற்றலைத் தம்முள் பெற்று விடுகிறார்கள். ஆகவே பரம கருணையுடையவர்களாகிய நம் முன்னோர் தம்முடைய பேராற்றலை இந்த ஒலிக் கூட்டங்களில் செலுத்தி, செல்லுமாறு ஆணையிட்டுப் பிறகு அவற்றை நமக்குத் தந்திருக்கிறார்கள். அவற்றைத்தான் மந்திரங்கள் என்று சொல்லுகிறோம்.

இந்த மந்திரங்களைத் தொல்காப்பியனார் ‘மறைமொழி’ என்று சொல்ல வேண்டுமா? சாதாரணமாகப் பார்க்கும்போது அவற்றிலுள்ள ஆற்றல் நமக்குத் தெரிவதேயில்லை. ‘ஹ்ரீம்’ என்ற சொல்லை யாரும் உச்சரிக்கலாம். ஆனால் அதன் உள்ளே இருக்கிற ஆற்றலை நாம் புரிந்து கொள்வதேயில்லை. ஆகையினால் தான் அது மறைமொழி. அப்படியானால் மறைமொழி என்றால் அதனைப் புரிந்து கொள்ளக்கூடிய தகுதியை நாம் பெற வேண்டும். அப்பொழுது அந்த மந்திரங்கள் பேராற்றலைப் பெற்றவையாக நமக்குத் தெரியும். இப்படிப்பட்ட சொற்களை ஒன்று சேர்ப்பதன் மூலம் மந்திரங்களைக் காண்கிறார்கள். இப்படிக் கண்ட மந்திரங்களை அவர்கள் சொற்கோவைகளாக, அதிர்வுகளின் கோவைகளாக வெளிப்படுத்தி எங்கே எங்கே எப்போது எப்போது தேவையோ அங்கே அங்கே அவ்வப்போது பயன்படுத்திக் கொள்ளுமாறு நமக்கு வழங்கியிருக்கிறார்கள்.

திருக்கோவில்களின் அடிப்படைத் தத்துவமும் இதுதான். கோவில்கள் அடிப்படையில் பார்ப்போமேயானால் கருங்கல்லினாலே செய்யப்பெற்ற விக்கிரகங்கள் கருவறையில் பதிக்கப்பெறுகின்றன. அவை சாதாரணக் கல்லினாலே செய்யப்பட்டவையே என்பதை மறந்துவிடக் கூடாது. ஆகவே அந்த விக்கிரகங்களைப் பதிப்பதற்கு முன்னால் அவற்றுக்குரிய சக்கரங்களை எழுதி அவற்றின் அடியிலே வைத்து மேலே விக்கிரகங்களைப் பதித்து விடுகிறார்கள்.

நம் முன்னோர் ஒவ்வொரு மூர்த்திக்கும் ஒவ்வொரு சக்கரத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது செப்புத் தகடுதான். அதில் அந்த அந்த மூர்த்திக்குரிய கோணங்களை எழுதி, கோணங்களுக்குள் அவ்வவற்றுக்குரிய சில எழுத்துகளை எழுதியபின் அவை சக்தி வாய்ந்த சக்கரங்களாக மாறிவிடுகின்றன.

இந்தச் சக்கரங்களை அடியில் வைத்து மேலே விக்கிரகங்கள் பதிக்கப்படும்போது அந்த விக்கிரகங்கள் சக்தி பெறுகின்றன. அந்தச் சக்தி முழுமைபெற்று விளங்குவதற்காகத்தான் குடமுழுக்கு - கும்பாபிஷேகம் என்று செய்கிறார்கள். குடமுழுக்கு செய்யும் போது யாகசாலை அமைத்து, அதில் ஒவ்வொரு மூர்த்திக்கும் ஒரு கடம் அதாவது குடம் வைத்து பூஜிக்கிறார்கள். கடம் என்பது சாதாரணமாக உலோகத்தில் செய்யப்பட்ட பாத்திரம்தான். அதன்புறத்தே முப்புரி நூலினால் சுற்றி, உள்ளே நீரை நிரப்பி மேலே

மாவிலை, தர்ப்பை, தேங்காய் வைத்து மூர்த்தியை ஆவாஹனம் செய்து ஜபம் செய்வார்கள்.

குறிப்பிட்ட மூர்த்திக்குரிய மந்திரங்களை, ஆசார்யனாக இருக்கிறவன் எதிரே இருந்து ஐந்து நாள் அல்லது ஏழு நாள் அல்லது மூன்று நாள் என்ற முறையில் குறிப்பிட்ட ஆவர்த்திகள் மந்திர ஜபம் செய்வார்கள். அதனால் குடத்திலுள்ள நீரை குடமுழுக்கு அன்று கர்ப்பகிருஹத்திலுள்ள மூல மூர்த்திக்கும், அந்த மூல மூர்த்தி அமர்ந்திருக்கும் கோபுர கலசத்திற்கும் அபிஷேகம் செய்வார்கள். அதன்பிறகு அந்த மூர்த்தியை யார் சென்று வணங்கினாலும் தன் அருள் சக்தியை அவர்களுக்கும் வழங்குகிற ஆற்றலை அந்த விக்கிரகம் பெற்று விடுகிறது.

அதுபோல இருக்கிற ஒன்றை நாம் புரிந்து கொள்ள வேண்டுமேயானால்-கார்களிலுள்ள ‘பாட்டரி’ என்று சொல்கிறார்களே அவற்றை கொஞ்சம் மனத்தில் வாங்கிக் கொண்டு பார்க்க வேண்டும். உலோகத் தகடுகள், ஆசிட், தண்ணீர் இரண்டும் கலந்த கலவையிலே அமுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அப்படி அமுக்கி வைத்துவிட்டால் ஆற்றலைப் பெற்றுவிடுகிறதா? நிச்சயமாக இல்லை. இந்த பாட்டரியை டெட் பாட்டரி என்று சொல்லுவார்கள். எவ்விதமான ஆற்றலும் இல்லாத பாட்டரியாக இருக்கிறது. அதை மின்சாரத்தில் வைத்து 40 மணி நேரம் மின்சாரத்தை அதில் ஏற்றிய பிறகு இந்த பாட்டரி முழு சக்தி வாய்ந்ததாக ஆகிவிடுகிறது. பிறகு அதன்மீது கையை வைத்தால் நிச்சயமாக மின்சாரம் பாய்ந்து ஊறு விளைவிக்கும்.

அது போலத்தான் கருங்கல்லினாலான சாதாரண விக்கிரகங்களாக இருந்த உருவங்கள், குடமுழுக்கு செய்யப்படும்போது, குடங்களில் இருந்த தண்ணீரை அவற்றின் மீது ஊற்றிய பிறகு முழு சக்தி வாய்ந்த தெய்வப் படிமங்களாக மாறிவிடுகின்றன.

இன்னும் சில கோவில்களைப் பொறுத்தமட்டில் இந்த ஆற்றல் நாளுக்குநாள் வளரவேண்டுமென்ற பரம கருணையினாலே புலிப்பாணி, போகர் போன்ற சித்தர்கள் அந்தத் திருக்கோவில்களிலேயே இருந்து தங்களுடைய ஆற்றலை அந்த விக்கிரகங்களுக்கு ஏற்றிக் கொண்டேயிருக்கிறார்கள். அப்படி இருக்கிற காரணத்தால்தான் ஆயிரக்கணக்கான பக்தர்கள் சென்று வழிபட்டாலும் அந்த ஆற்றல் குறையாமல் இருந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆக, கும்பாபிஷேகம் செய்வது என்பதன் அடிப்படை நோக்கம் சாதாரணமாக கருங்கல்லிலே செய்யப்பட்ட படிமத்தின் ஆற்றலை மக்களுக்குப் பயன்படுமாறு செய்வதுதான்.

கோபுரங்கள் இருக்கின்றன. கோபுரத்தின் மீது கலசங்கள் இருக்கின்றன. இந்தக் கலசங்களுக்குள்ளும் பலவகையான பொருள்களையிட்டு

நிரப்பி, கலசங்களை கோபுரத்தின் மீது பதித்துவிடுகிறார்கள். இந்தக் கலசங்களோடு கூடிய கோபுரம் ஸ்தூல வடிவமாக இறைவனைக் குறிக்கிற ஒன்று என்று பெரியவர்கள் சொல்வார்கள்.

ஆக ஸ்தூல வடிவமாக இருக்கிற கோபுரங்களுக்கும், சூக்ஷ்ம வடிவமாக இருக்கிற விக்கிரகங்களுக்கும் ஒரு சேர ஆற்றலைத் தருவதுதான் குடமுழுக்கு விழாவின் அடிப்படை நோக்கமாகும்.

இந்தக் கோவில்களிலுள்ள படிமங்கள் நாளாவட்டத்தில் தங்களுடைய ஆற்றலை இழக்க முடியுமா என்றால் ஓரளவு இழக்கவும் கூடும். அது எப்படி என்றால் இந்தக் கோவிலுக்கு வருகிற ஆயிரக்கணக்கானவர்கள், பதினாயிரக் கணக்கானவர்கள் எத்தனையோ வகையான மாறுபாடுகள், கருத்து வேறுபாடுகள், எண்ணப் போராட்டங்கள் ஆகிய பாபங்கள் நிறைந்து உள்ளே செல்வதால் நாளாவட்டத்தில் விக்கிரகங்களின் ஆற்றல் ஓரளவு குறையவும் கூடும். அதற்காகத்தான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை குடமுழுக்கு செய்ய வேண்டுமென்று சொல்லுகிறார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை குடமுழுக்கு செய்வது என்பது ஸ்தூல, சூக்ஷ்ம வடிவங்களுக்கு ஆற்றலை மறுபடியும் வழங்க வேண்டும் என்பதற்காகத்தான் என அறிந்து கொள்ளல் வேண்டும். ஆக, திருக்கோவில்கள் குடமுழுக்கு அன்று முழு ஆற்றலைப் பெற்று விடுகின்றன. ஸ்தூலமாக இருக்கிற கோபுரமும், சூக்ஷ்மமாக இருக்கிற விக்கிரகங்களும் ஆற்றலைப் பெறுவதற்குரிய நாள்தான் குடமுழுக்கு நாளாகும். பலமுறை ஜபிக்கப்பட்ட மந்திரங்கள் தங்கள் ஆற்றலை நீரின் மூலம் விக்கிரங்களுக்கு ஏற்றுகின்றன என அறிந்து கொள்ள வேண்டும்.

நிறைமொழி மாந்தரால் உண்டுபண்ணப்பட்ட மந்திரங்களைத் தனியே வீட்டில் இருந்து ஜபித்தாலும், கோவில்களுக்குச் சென்று ஜபித்தாலும் அதன் ஆற்றலைப் பெற முடியும். சாதாரணமாக மக்கள் இந்த மந்திரங்களை ஒருமுகப்பட்ட மனத்துடன் ஜபிக்கும்போது அவை நிறைந்த ஆற்றலைத் தருகின்றன. பல சமயங்களில் ஒருமுகப்பட்ட மனத்துடன் ஜபிக்காவிட்டாலும் அவை பலன்தராமல் போவதில்லை. காரணம் ஒலி அதிர்வுகள் மந்திரங்களை ஜபிக்கும்போது உண்டவாதால், வேண்டினாலும், வேண்டாவிட்டாலும் அந்த அதிர்வுகளின் பலன் இருந்தே தீரும்.

மந்திரங்களை ஓயாமல் சொல்வதன் மூலம் இந்த ஒலி அதிர்வுகளினால் ஏற்படுகிற பயனைப் பெறுகின்றோம். சில சமயங்களில் மந்திரங்களை முழுவதுமாக உச்சரிக்கின்ற நிலைமாறி நம்மையும் அறியாமல் குறைவு, நிறைவுகள் ஏற்படத்தான் செய்யும். அப்படி ஏற்பட்டாலும் பலன் குறைவதில்லை என அறிந்து கொள்ள வேண்டும். அறிந்தோ அறியாமலோ மின்சாரத்தில் கைவைத்தால் எப்படி நமக்கு அதிர்ச்சியைத் தருகிறதோ

அதுபோல இந்த மந்திரங்களை அறிந்து கூறினாலும், அறியாமல் கூறினாலும் அந்த ஒலி அதிர்வுகள் நமக்கு ஆற்றலைத் தரத்தான் செய்கின்றன.

செப்புத் தகட்டிலே சக்திவாய்ந்த சக்கரங்களாக அமைவதும், குடத்திலே உள்ள நீரை சக்தி வாய்ந்ததாக மாற்றுவதும், ஓயாமல் தன்னை ஜபிக்கிறவர்களுக்குத் தன் முழுசக்தியைத் தருவதும் ஆக விளங்குவது மந்திரங்களாகும்.

முறையாக மந்திர சக்தி வாய்ந்த குருவிடம் தீட்சை பெற்று மந்திரங்களை நாம் உபாசனை செய்யும்போது நாம் அணைத்து சக்திகளையும் அடையலாம். அணைத்து நல்ல செயல்களிலும் வெற்றி அடையலாம். ஒரு மந்திரத்தை ஒரு மனிதன் முறையாக

உபாசனை செய்யும்போது அம்மனிதனது ஆன்மா மந்திர ஆன்மாகவே ஆகிவிடும். ஆனால் மந்திர சக்தி பெற்றவர்கள் எக்கலாத்திலும் யாருக்கும் நன்மை மட்டுமே செய்ய வேண்டும். தீமை செய்யக்கூடாது. மீறி செய்பவர்கள் பிற்காலத்தில் துர்மரணம் அடைவார்கள் என்பது உறுதி.

எனவே நல்லதை மட்டும் செய்ய வேண்டும். முறையாக மந்திரங்களை பயன்படுத்தும்போது வெற்றி பெற முடியாத விசயமே இல்லை எனலாம்

வியாபார வசியம் :

ஆதி வாரம் பௌர்ணமியும் கூடி வரும் தினம் பார்த்து சிறிய நாங்கள் செடிக்கு காப்பு கட்டி சாபம் போக்கி அடுத்து வரும் ஆதி வாரத்தில் பிடுங்கி வந்து கால பைரவர் மந்திரம் லட்சம் கூறி தாயத்தில் அடைத்து பூஜையில் வைத்து கட்டி கொண்டால் எந்த விதமான வியாபாரமும் பலிதமாகி செழிப்பு ஏற்படும்

வியாபார வசியம் :

அதைப்போல குப்பை மேனி செடிக்கும் மேற்சொன்ன பிரகாரம் காப்புக்கட்டி தாயத்தில் அடைத்து கட்ட கொண்டால் வியாபார வசியம் உண்டாகும் .

புல்லாமணக்கு வசிய வித்தை

இந்த புல்லாமணக்கு செடியினை ஆதிவாரம் பொங்கலிட்டு காப்பு கட்டி பலிகொடுத்து இந்த மூல்கையை வேரோடு பிடுங்கி வந்து இந்த மூலியை நிழலில் காய வைத்து இடித்து வஸ்திர காயஞ் செய்து வைத்து கொள்ள வேண்டும் அதனை ஒரு காற்று புகாத கள் கார்க்கு பாட்டிலில் அடைத்து வைத்து கொள்ள வேண்டும் இதை ஒரு வராகன் எடை காலையும் மாலையும்

நெய்யில் குழைத்து சாப்பிட ஆண்கள் பெண்களுக்கும் பெண்கள் ஆண்களுக்கும் வைத்த இடுமருந்து இருந்த இடம் தெரியாமல் முறிந்து போகும்

இதே புல்லாமணக்கு மூலிகையில் அஞ்சனம் தயாரித்து பயன்படுத்தினால் வசியம் உண்டாகும் புல்லாமணக்கு வசியத்திற்கு சிறந்த மூலிகை .

வாழ்வில் அதிஷ்டம் செல்வம் சொத்துகள் அதிகரிக்க மயூர் தந்திரம்

மயூர் தந்திரம் [மயில் தந்திரம் ]

மயில் என்பது பார்பவர்களுக்கு ஒரு மன மகிழ்ச்சி தரக்கூடிய ஒரு பறவை அதன் தொகை வைத்து விசிறிகள் அந்த காலத்தில் பெரிய அரண்மனைகளில் ராஜாக்கள் உபயோகிப்பதையும் ஸ்ரீ கிருஷ்ணர் தலையில் மயில் முடி வைத்திருப்பதும் ஒரு சில தந்திர முறைகள்தான் அந்த காலத்து இந்து மத நூல்களைப்பார்த்தால் இந்த மயில் தந்திர இரகசியங்கள் புரிய வரும் .

இந்த மயூர் தந்திரத்தின் மூலமாக வாஸ்து தோஷம் மற்றும் கடன் தொல்லைகள் ,பல அமானுஷ்ய சாதனைகளை என் தாத்தா முத்துபாண்டி வைத்தியர் அவர்கள் செய்திருக்கிறார்கள் .

தந்திர இரகசிய முறை :

தற்செயலாக நீங்கள் சென்று கொண்டிருக்கும் போது உங்கள் கண்ணில் மயில் பார்த்தால் உடனடியாக அதன் அருகில் சென்று அதன் காலடி மண்ணை எடுத்து கொண்டு வந்து அதில் சிலை செய்து அதை வைத்து வழிபாட்டால் அதிஷ்டம் உங்கள் வாழ்வில் கூடவே இருக்கும் இன்னும் சில தந்திரங்கள் உள்ளன .

மயில் தோகையை வைத்தும் பல தந்திரங்கள் உள்ளன மயில் கொண்டு செய்யும் தந்திரங்கள் அனைத்தும் வாழ்வில் செல்வா வளத்தை பெருக்ககூடியதுதான் .

ஹோம மந்திரங்களும் அதன் பலன்களும்

1. ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷரீ – சகல யோகமும் சௌபாக்யமும் உண்டாக.

2. சுத்த பஞ்சாக்ஷரீ – மனோரத இஷ்ட காம்யார்த்த அபிலாஷைகள் நிறைவேற.

3. சிவ அஷ்டாக்ஷரீ - ஸர்வ சத்ரு, மிருக, ரோக உபாதிகள் நீங்க.

4. சிவ பஞ்ச தசாக்ஷரீ – அஷ்ட ஐஸ்வர்யப் பிராப்தி அடைய.

5. சிதம்பர பஞ்சாக்ஷரீ – ஞான வைராக்யம், சிவ கடாக்ஷம் பெற.

6. குரு தாரக பஞ்சாக்ஷரீ – ஸகல ஜன வசீகரணம், ராஜாங்க வெற்றி, தேவதா ப்ரீதி உண்டாக.

7. ம்ருத்யுஞ்ஜய த்ரயக்ஷரீ – அகால, அபம்ருத்யு பயம் நீங்க, ஆயுள் விருத்தியடைய.

8. சிதம்பர சபாநடன மந்த்ரம் – அனைத்து பாப தோஷ பரிகாரம், ரக்ஷா பந்தனம்.

9. நீலகண்ட மந்த்ரம் – எதிர்பாராத கொடிய ஆபத்தினின்று மீளல், தவிர்த்துக் கொள்ள.

10. மஹா நீலகண்ட மந்த்ரம் – பூதப்பிரேத பிசாச உபத்ரவம், ஸர்வாரிஷ்டம் நிவாரணம்.

11. த்வனி மந்த்ரம் – மன சாந்தி, சந்தி, சந்துஷ்டி, சிவானந்த அநுபூதி பெற.

12. சிவ காயத்ரீ – நினைவுத்திறன், சமயோசித புத்தி, புதிய யுக்தி, வாக்சாதுர்யம் கூட.

13. மார்கதர்சீ சிவ மந்த்ரம் – பிரயாண சௌகர்யம், எவ்வித ஆபத்துகளும் விபத்துகளும் நேராதிருக்க.

14. ருணமோசன சிவ மந்த்ரம் – கடன் நீங்க, தேவ, பித்ரு ரிஷி கடன் அடைதல், பணவரவு, சேகரிப்பு அதிகரிக்க.

15. பசுபதி காயத்ரீ – ஸகல வித திருஷ்டி விலக, வழக்கில் வெற்றி, குடும்ப மகிழ்ச்சி ஏற்பட.

16. சிவ நவாக்ஷரீ - கார்யா தடைகள், தேக்கநிலை தீர்வு, நிர்வாகத் திறன் கூடுதல், புது முயற்சிகள் பலிதம்.

17. பாசுபதாஸ்த்ரம் – பூதப்பிரேத பிசாச உபத்ரவம், ஸர்வாரிஷ்டம் நிவாரணம், ஆபிசார தோஷம், செய்வினைகள் அகல.

18. ருத்ர காயத்ரீ – பாப தோஷ விமோசனம், நிரந்தர ஜயம்.

19. வித்யாப்ரத சிவமந்த்ரம் – புத்திகூர்மை, மேதா விலாஸம், சொல் வசீகரணம், ஸரஸ்வதி கடாக்ஷம் பெற.

20. உமாமஹேஸ்வர மந்த்ரம் – குடும்ப ஒற்றுமை அன்யோன்யம், மட்டற்ற மகிழ்ச்சி, குதூகலம் பெற.

21. ஆபத்துத்தாரக கௌரீவல்லப மந்த்ரம் – எல்லா ஆபத்துக்களும் தடைகளும் நீங்கி, நிரந்தர ஜயம் உண்டாக.

22. ஸர்வபாபஹர பவ மந்த்ரம் – அனைத்து பாப தோஷங்களும், அனாசார பாதிப்பும் விலகுதல்.

23. ரக்ஷாப்ரத கௌரீ சிவ மந்த்ரம் – சீரான உடல் நலம், முகப்பொலிவு, மறுமலர்ச்சி, ஆரோக்கியம் கூடுதல்.

24. ம்ருத் ஸஞ்சீவினி – அகால, அபம்ருத்யு பயம் நீங்கல், ஆயுள் விருத்தி.

25. பஞ்சதசீ சிவ மந்த்ரம் – ஸகல கார்ய சித்தி, செயற்கரிய செயல் செய்தல், வாழ்வில் ஏற்றம்.

26. சுதர்ஸன மந்த்ரம் – செய்வினை, சத்ருக்களின் தொல்லை, வியாபாரத் தடை நீங்குதல், மனச்சாந்தி அடைய.

27. லக்ஷ்மி ந்ருஸிம்ஹ மந்த்ரம் – பணவரவு, கடன் நிவாரணம், பணப்புழக்கம், குடும்ப மகிழ்ச்சி.

28. சுதர்ஸன நரஸிம்ஹ மந்த்ரம் – எதிரிகள் தொல்லை, வழக்கு வியாஜ்யம், குடும்ப-தொழில் குழப்பங்கள் நீங்க.

29. வாஸுதேவ மந்த்ரம் – வறுமை, கிலேசம், சந்தேகம், தீவினைகள் அகன்று இம்மை மறுமை நலன்கள் கொழிக்க.

30. விஸ்வரூப மந்த்ரம் – சதுர்வித புருஷார்த்தங்கள், மனோபலம், ஜயம், அசைகள் பூர்த்தியாக.

31. கந்தர்வராஜ மந்த்ரம் – தடை நீங்கி திருமணம், குடும்ப சூழ்நிலைச் சிக்கல்கள் நிவர்த்தி, சுப கார்யங்கள் நடைபெற.

32. ஹயக்ரீவ மந்த்ரம் – புத்தியும் சக்தியும் தூண்டப்படுதல், கல்வியில் ஏற்றம், மஹாவித்வத்வம், இனிய சொல் மெய்யுணர்வு.

33. நாமத்ரயம் – அனைத்து பாப விமோசனம், சுமுக சூழ்நிலை ஏற்பட.

34. சுதர்ஸன அபரோ மந்த்ரம் – ரக்ஷா ப்ரதானம், அடிமன பயம் நீங்குதல், மனநிறைவு, நிம்மதி.

35. நரஸிம்ஹ மந்த்ரம் – பணவரவு, கடன் நிவாரணம், பணப்புழக்கம், குடும்ப மகிழ்ச்சி, நோய் வறுமை நீங்கி ஸகல சம்பத்துகள் அடைய.

36. கருட மந்த்ரம் – விஷம், ஸர்ப்ப தோஷம், துஷ்ட மிருக பயம் விலக.

37. மஹா கருட மந்த்ரம் - அதைர்யம், பாபம், விஷக்ரஹ தோஷங்கள், துஷ்டர் பயம் ஆகியன விலக.

38. தன்வந்த்ரீ மந்த்ரம் – முதுமை, நோய், பய உணர்ச்சி அகன்று யௌவனம், தைர்யம், தேகஒளி, தீர்க்காயுஸ், ரோகமின்மை ஏற்பட.

39. கருட காயத்ரீ மந்த்ரம் – தாமதம் நீங்கி எண்ணிய காரியம் முடிதல், சீக்ர கார்யசித்தி பெற.

40. சுதர்ஸன காயத்ரீ மந்த்ரம் – ஞானம், சக்தி, பலம், ஐஸ்வர்யம், வீர்யம், தேஜஸ் பெற்று சௌகர்யம் ஏற்பட.

41. தன்வந்த்ரீ காயத்ரீ மந்த்ரம் – முதுமை, நோய், பய உணர்ச்சி அகன்று யௌவனம், தைர்யம், தேகஒளி, தீர்க்காயுஸ், ரோகமின்மை, மன்மதஸ்வரூபம் ஏற்பட.

42. வித்யா கோபால மந்த்ரம் – வித்யா பிராப்தி, நினைவாற்றல், வாக்குவன்மை, மேதா விலாசம் கூடுதல்.

43. அன்ன கோபால மந்த்ரம் – அன்னபானாதி சம்விருத்தி, தன்னிறைவு பெற.

44. சௌபாக்யலக்ஷ்மீ மந்த்ரம் – லக்ஷ்மி கடாக்ஷம், தாபத்ரய நிவர்த்தி, அஞ்ஞான நிவர்த்தி.

45. க்ஷேத்ர ப்ராப்திகர மந்த்ரம் – பூமி லாபம், குபேர சம்பத்து ஸ்திர லாபம் பெற.

46. க்ஷேத்ர ப்ராப்திகர அபேரா மந்த்ரம் – இந்த்ர பதவி, பொன் விளையும் பூமிக்கு அதிபதி, லோக பிரசித்தி, ஸ்திரத்தன்மை அடைய.

47. த்ருஷ்டி துர்கா மந்த்ரம் – ஸர்வ திருஷ்டி தோஷ பரிகாரம், முன்னேற்றம்.

சாளக்ராமத்தின் கற்கள் மகத்துவம்

ஆலயங்களில் உள்ள விக்ரகத்தை காட்டிலும் அதிக மடங்கு விரைவில் பலன்கள் தரும் சாளக்ராமத்தின் கற்கள்.

சாளக்ராமத்தின் பெருமைகள் அளவிடற்கரியவை. விக்ரஹ ஆராதனையைவிட சாளக்ராம பூஜையினால் அதிக திருப்தியை திருமால் அடைவதாக விவரம் தெரிந்த ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்கள் கூறுகின்றனர். இமயமலை அடிவாரத்தில் பாய்கின்ற "கண்

சாளக்ராமத்தின் பெருமைகள் அளவிடற்கரியவை. விக்ரஹ ஆராதனையைவிட சாளக்ராம பூஜையினால் அதிக திருப்தியை திருமால் அடைவதாக விவரம் தெரிந்த ஸ்ரீவைஷ்ணவப் பெரியோர்கள் கூறுகின்றனர்.

இமயமலை அடிவாரத்தில் பாய்கின்ற "கண்டகி' நதியில், சாளக்ராம (கல்) வடிவில், ஸ்ரீ விஷ்ணுவே அவதரிக்கின்றார்.

எனவே இது "ஸ்வயம் வியக்தம்' (சுயம்பு) எனப்படுகிறது. "ஹரி பக்தி விலாசம்' என்னும் புனித நூல், "எல்லோரும் சாளக்ராம பூஜை செய்யலாம்' என்று உறுதியளிக்கின்றது. "உடைந்த சாளக்ராமம்கூட பூஜிக்கத் தக்கதே' என "பிரம்ம புராணம்' கூறுகின்றது.

"சாளக்ராமத்துக்கு அபிஷேகம் பண்ணிய தீர்த்தத்தை பருகுவதால் வியாதிகள் தீரும்; சாளக்ராமம் உள்ள வீட்டை துஷ்ட சக்திகள் அணுகாது' என்றெல்லாம் பல நூல்களில் பல்வேறு விதங்களில் சாளக்ராம மஹிமை புகழப்படுகின்றது.

ஆனால் அதே புனித நூல்கள், சாளக்ராம பூஜை பற்றி சில கடுமையான விதிகளையும் கூறுகின்றன. ஏனோ அவை பெரும்பாலான ஆர்வலர்களால் கண்டு கொள்ளப்படுவதில்லை. இதற்கு உதாரணமாக, ஆகாய விமானப் பயணத்தைச் சொல்லலாம்.

பேருந்திலோ, ரயிலிலோ பல மணி நேரங்கள் பயணிக்க வேண்டிய தூரத்தை, மிகக் குறைந்த நேரத்தில் விமானங்கள் கடந்துவிடுகின்றன. அதில் பறக்கின்றவர்களுக்கு அந்தக் "குறைந்த நேரம்' என்பது மட்டுமே நெஞ்சில் நிலைக்கிறது; அப்படிப்பட்டவர்கள் விமானம் புறப்படும் முன்னர், விமானப் பணிப் பெண்கள் சைகைகளோடு விளக்கிக் கூறும் "பாதுகாப்பு விதிகளை' பார்க்கவோ, கேட்கவோகூட மாட்டார்கள்.

ஆனால் ஆபத்து வந்தால் மட்டும் அலறுவார்கள். "சாளக்ராம பூஜை' விஷயத்திலும் இப்படித்தான் ஆகிறதோ என்று ஐயப்படத் தோன்றுகிறது.

சாளக்ராமத்தை பூஜை செய்வதால் ஏற்படும் நற்பயன்களைப் பற்றிக் கேள்விப்பட்டு பிரமித்துப் போய்விடும் மக்கள், "பாதுகாப்பு விதிகள்' பற்றிக் கண்டு கொள்வதேயில்லை. இது ஒரு துரதிருஷ்டம். லட்சணமுள்ள சாளக்ராமங்கள் மட்டுமே வழிபாட்டிற்கு உரியவை; மற்றவை விபரீத பலன்களைத் தரக்கூடும். இங்கே சில விதிமுறைகளைக் காண்போம்.

"சாளக்ராமத்தை விற்பதோ, விலைக்கு வாங்குவதோ தகாது' என்று "ஸ்காந்த புராணம்' தெளிவாகக் கூறுகின்றது. நல்ல சீலமுடைய பெரியோர்களிடமிருந்து சாளக்ராமம் பெற விண்ணப்பித்து, அவர்கள் கையால் சாளக்ராமத்தை விலையின்றி பெற்று பூஜிப்பதே சிறந்தது. அக்காலத்தில் "கண்டகி' பாயும் "முக்திநாத்' தலத்துக்குச் செல்லும் பெரியோர்கள், அங்கே நதிப்படுகையில் எளிதில் கிடைக்கும் சாளக்ராமங்களை லட்சணங்கள் பார்த்துச் சேகரித்து, தனக்கும் பிறருக்குமாக எடுத்து வருவார்கள்.

இன்றைய "இண்டர்நெட்' யுகத்து வியாபாரிகள் புத்திசாலிகள்! அவர்கள் இந்த சாத்திர விதியை நன்கு அறிந்து வைத்திருப்பதால் தாங்கள் "ஆன் லைனில்' விற்கும் சாளக்ராமத்துக்கு இதுதான் "விலை' என்று குறிப்பிடாமல், "நன்கொடை' என்று போட்டு, முதல் கோணலுக்கு வழி வகுத்துவிட்டனர். ஒரு இயக்கமும், ஒரு சில "புத்திசாலிகளும்' சாளக்ராம லட்சணங்களைப் பற்றி கண்டு கொள்வதேயில்லை. இதனால் பக்தர்களுக்குத் தான் திண்டாட்டம்!

இவை ஒரு புறமிருக்க, "மந்திர தீக்ஷை பெற்றவர்கள் மட்டுமே சாளக்ராம பூஜை செய்யலாம்' என்று பாத்ம புராணம் கூறுகின்றது. இதை எத்தனைப் பேர் கடைபிடிக்கின்றனர்? "முறையாகச் செய்யாத எதுவும், முறையான பலனைத் தராது என்பது மட்டுமல்ல; முரணான பலனைத் தந்துவிடும்' என்பதை ஏற்கெனவே இந்தப் பகுதியில் வலியுறுத்தியுள்ளோம்.

இதோ "ஸ்காந்த புராணம்' விடுக்கும் சில எச்சரிக்கைகளைக் கவனிப்போம்:

* கரடு முரடான சாளக்ராமத்தை வீட்டில் வைத்துப் பூஜித்தால் மனப்பதற்ற நோய் உருவாகும்.

* ரத்தச் சிவப்பு நிறமுள்ள சாளக்ராமம், பலவித வியாதிகளைத் தரும்.

* வடிவம் சரியற்றதாக இருக்கின்ற சாளக்ராமம், வறுமையில் தள்ளும்.

* மிகக் குண்டான சாளக்ராமம், லட்சணமற்றிருப்பின், பூஜிப்பவரின் ஆயுளைக் குறைத்துவிடும்.

* தீர்க்கமான மஞ்சள் நிறமுடையது, இரண்டு சக்கரங்கள் ஒட்டியிருப்பது, அளவுக்கு அதிகமான அகன்ற வாயுடையது, கோணலான முகவாயுடையது ஆகிய சாளக்ராமங்கள் இல்லத்தில் வைக்கப்படின் பல்வேறு துன்பங்களைத் தரும். அடுத்ததாக "அக்னி புராணம்' கூறும் அறிவுரைகளையும் பார்ப்போம்:

""நாகம் போன்ற முகவாய் உடையது, எதிரெதிராக சக்கரங்கள் உடையது, நீண்ட முதுகுப் பகுதியுடையது, மர நிறத்தில் (பலர் இதை நரசிம்ம சாளக்ராமத்தோடு குழப்பிக் கொள்வார்கள்) உள்ளது, மிக அதிகமான கோடுகளைக் கொண்டது போன்ற சாளக்ராமங்கள் இல்லத்தில் மகிழ்ச்சியின்மையை உருவாக்கிவிடும்; அல்லது எப்பயனும் தராது. இதுபோல் பல எச்சரிக்கைகளை (புத்திர சோகம் உள்பட) புராணங்களின் வாயிலாக நமது முனிவர்கள் அறிவுறுத்தியுள்ளனர்.

"சாளக்ராம பூஜையால் பெறும் புண்ணியத்துக்குச் சமம் எதுவுமில்லை' என்பதில் சந்தேகமில்லை. ஆனால் நல்ல சாளக்ராமத்தை தேர்ந்தெடுத்து பூஜித்துப் பயன் பெற வேண்டும் என்பது மிகவும் முக்கியமானது. மாறாக தோஷமுள்ள சாளக்ராமங்களை விலைக்கு வாங்கி, விபரீதங்களையும் சேர்த்தே வாங்க

வேண்டாம் என்பதைத் தெளிவுப்படுத்தவே இவ்வளவு விரிவாகக் குறிப்பிடுகின்றோம்.

இன்றைய அவசர, வியாபார யுகத்தில் எதையாவது எழுதி, எதையாவது சொல்லி எதுவும் செய்வோர் ஆன்மீகத் துறையிலும் உள்ளனரென்பது வருந்தத் தக்கது.

"சாளக்ராம பூஜையே வேண்டாம்' என்பதல்ல நமது வாதம்.

நல்ல லட்சணங்கள் பார்க்கத் தெரிந்த உண்மையான பெரியோர்களின் துணையோடும் வழிகாட்டுதலோடும் சாளக்ராம பூஜை செய்தால் வைகுண்டமே கிடைக்கும். ஆயின் அப்படிப்பட்ட வாய்ப்பு எல்லோர்க்கும் எளிதில் கிடைத்துவிடாதல்லவா? அப்படி வாய்ப்பு அமையப் பெறாதவர்களையும் பரமாத்மாவாகிய ஸ்ரீவிஷ்ணு கைவிடுவதில்லை.

அத்தகு பக்தர்கள், திருமால் ஆலயங்களிலோ- தீக்ஷை பெற்ற பெரியவர்களின் இல்லங்களிலோ கிடைக்கும் சாளக்ராம அபிஷேக தீர்த்தத்தைப் பருகுவதால் மட்டுமே, பூஜை செய்த பலனை முழுமையாக அடைந்துவிடலாம். இதில் சந்தேகம் தேவையில்லை. "அன்யேஷாம் தீர்த்த பானேன தத்பலம் சித்யதி ஸ்வயம்' என்று, "திவ்ய தேச வைபவம்' என்ற புனித கிரந்தம், இக்கருத்தினை தெளிவாகக் கூறுகின்றது.

முடிந்தால் நியதிகளோடு சாளக்ராம பூஜை செய்து சர்வேஸ்வரனின் அளவு கடந்த திருவருளைப் பெறுவோம்! இயலாவிட்டாலோ, சந்தேகமிருந்தாலோ விஷ்ணு ஆலய தீர்த்த பிரஸாதத்தாலோ, அல்லது உத்தம ஸ்ரீவைஷ்ணவர்களால் [ஸ்ரீ வைஷ்ணவர்களிடையே ஜாதி பேதமில்லை; அப்படிப் பார்ப்பவர் நரகம் புகுவர்] ஆராதிக்கப்படும் சாளக்ராம அபிஷேக தீர்த்தத்தாலோ அதே பயனை ஐயமின்றிப் பெற்றுய்வோம்.

இது கலியுகம். பாதுகாப்பான பாதையை நாமேதான் தேர்ந்தெடுக்க வேண்டும்! ஆர்வக் கோளாறுகளாலும், "அவர் சொன்னார், இவர் சொன்னார்' என்ற கண் மூடித்தனமான நம்பிக்கைகளாலும் அவதிகளை வரவழைத்துக் கொண்டு, பின்னர் ஆண்டவனை நிந்திப்பது பெரும் பாவம்!

கெட்ட கனவு, சகுன பாதிப்பில் இருந்து விடுபட:
எந்த கிழமையாக இருந்தாலும் அன்ற சூரிய உதயத்திற்கு முன்பு “ஓம் சிவசிவ ஓம்”மனதார ஜெபித்து வெண் பூசணியை உணவில் சேர்த்து சாப்பிட உடனே தோஷம் நீங்கும்

நவக்கிரக தோஷம் விலக:

வீட்டில் நவதானியங்களை கொண்டு முளைப்பாரி போட்டு வளர்த்து அதனை ஏதாவது ஒரு வியாழக்கிழமை சுக்கிர ஓரையில் பூஜை செய்து 'ஓம் அரி ஓம்'' என்று 1008 உரு அருகம்புல் கொண்டு ஜெபித்து தண்ணீரில் முளைப்பாரியை கரைத்து விட உடனே நவக்கிரக தோஷம் விலகும்.

செவ்வாய் தோஷம் விலக :

செவ்வாய்தோஷம் பாதிப்பு உடையவர்கள் மண்கலயத்தில் கும்பம் வைத்து தேங்காய்க்கு பதிலாக வாழை பூவை வைத்து மல்லிகை பூவை கொண்டு 1008 உரு 'ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம்'' என்று செவ்வாய்கிழமை செவ்வாய் ஓரையில் ஜெபித்து (7 வாரம்) கடல் மற்றும் ஆற்று தண்ணீரில் வாழை பூவை விட்டு விட உடனே செவ்வாய்தோஷம் விலகும்.

செய்வினை, ஏவல் பாதிப்பு விலக:

தினசரி விநாயகர் அகவல் படித்து, பிரண்டை துவையல் சாப்பிட்டு வரவும் தேனில் ''ஓம் அரி ஓம்''; மந்திரத்தை ஜெபித்து, தேனை சாப்பிட்டு வர செய்வினை, ஏவல் பாதிப்புகள் விலகும்.

குடிப்பழக்கத்தில் இருந்து விடுபட

குடிப்பழக்கத்தில் இருந்து கணவனை திருத்த விரும்பும் பெண்கள் புவனேஸ்வரி படம் வாங்கி அதில் பாஸ்போர்ட் சைஸ் அளவில் கணவன் படத்தினை உள்ளே வைத்து பிரேம் செய்து அந்த படத்தினை கன்னி மூலையில் வைத்து மல்லிகைப்பூ கொண்டு ''ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம்''; என்று 1008 உரு வீதம் 90 நாட்கள் ஜெபித்து பின்பு தினசரி 300 உரு ஜெபிக்க கட்டாயம் குடிப்பழக்கத்திலிருந்து விடுபடுவார்கள்

கணவன், மனைவி ஒற்றுமை ஏற்பட:

ராகவேந்திரர் படத்திற்கு மல்லிகைப்பூ மாலை போட்டு அவரை குருவாக ஏற்று வணங்கி பின்பு அந்த படத்திற்கு முன்பு பட்டுத் துணியில் அமர்ந்து ''ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் ஸ்ரீம்''; என்று தினசரி 300 உரு ஜெபிக்க கணவன், மனைவி ஒற்றுமை ஏற்படும்.

வியாபார முடக்கத்தில் இருந்து விடுபட:

(ஸ்தம்பனம் உடைய) வியாபார ஸ்தலங்களிலோ மற்றும் வீட்டில் எந்த காரியமும் நடைபெறாமல் தடைபட்டு ஸ்தம்பித்து நின்று விட்டால் அந்த இடத்தில் ஈசானியத்தில் தேங்காய் எண்ணெய் கொண்டு தீபம் ஏற்றி வெள்ளெருக்கு விநாயகருக்கு அருகம்புல் கொண்டு ''ஓம் அரி ஓம்''; என்று

தினசரி 1008 உரு 48 நாட்கள் ஜெபிக்க முடக்கம் உடையும். 48 நாட்கள் சைவ உணவு மட்டுமே சாப்பிட வேண்டும்.

பாவகர்மாக்களில் இருந்து விடுபட:

இளநீரில் உள்ள தண்ணீரில் கல்கண்டு சேர்த்து அதில் 1008முறை “ஓம் சிவசிவ ஓம்” என்று தர்ப்பைப்புல் கொண்டு ஜெபித்து தினசரி சூரிய உதயத்திற்கு பதினைந்து நிமிடத்திற்கு முன்பு இளநீரை குடிக்க வேண்டும். பின்பு, சிவபுராணம் படிக்க வேண்டும். இதனால் முன்ஜென்ம பாவ கர்மாக்கள் படிப்படியாக குறையும்.

மரங்களும் அதன் தெய்வீக சக்திகளும்

துளசி

துளசி விஷ்ணுவின் அம்சமாகும். துளசியின் இன்னொரு பெயர் பிருந்தா, பிருந்தாவனம் உள்ள இடத்தில் கண்டிப்பாக விஷ்ணு குடியிருப்பார். அதனால் வீடுகளில் முற்றத்தில் துளசி மாடம் அமைக்கப்படுகிறது. துளசிக்கு பல மருத்துவ குணங்களும் உண்டு. இதிலிருந்து வெளிப்படும் தெய்வீக அதிர்வுகள் பல நோய்களை குணமாக்கும்.

சந்தன மரம்

சந்தனமரம் விஷ்ணுவின் அம்சமாகும். சந்தனம் சுபகாரியங்களிலும், பூஜைகளிலும் பயன்படுத்தப்படுகிறது. இதிலிருந்து தெய்வீக அதிர்வுகள் வெளிபடுகின்றன. இவ்வதிர்வுகள் மன அமைதியையும், சாத்வீக குணத்தையும் கொடுக்கும்.

அத்திமரம்

அத்தி மரம் தத்தாத்திரேயரின் அம்சமாகும். விஷ்ணுவும் இதில் குடியிருப்ப்பார். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் அல்லது காந்த அலைகள் சாத்வீக குணமுடையவை. மனசாந்தியை கொடுக்கக்கூடியவை. இம்மரத்தில் அடியில் அமர்ந்து தியானம் செய்தால் எளிதாக கைகூடும்.

மாமரம்

மாமரம் மகாலட்சுமியின் அம்சமாகும். இம்மரத்தில் இருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இதன் காரணத்தினாலேயே எல்லாவிதமான பூஜைகளிலும் மாவிலைகள் பயன்படுத்தபடுகின்றன.

சுபகாரியங்கள் செய்யும் போது வீடுகளில் மாவிலைகள் தோரணமாக கட்டி தொங்க விடப்படுகிறது.

அரசமரம்

அரசமரம் பிரம்மாவின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வழிபாடும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கிழே தீபம் ஏற்றி வர புத்திர தோஷம் நீங்கும்.

ஆலமரம்

ஆலமரம் சிவனின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கிழே அமர்ந்து தியானம் செய்தால் தியானம் எளிதாக கைகூடும். அம்மரத்தின் விழுதுகள் ஆண்மை குறைவை நீக்கும் தன்மையுடையது.

மருதாணிமரம்

மருதாணி மரமானது லட்சுமியின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் பழங்களை தூங்கும் போது தலையணைக்கு அடியில் வைத்து தூங்கினால் கேட்ட கனவுகள் வராது.

ருத்ராஷ மரம்

ருத்ராஷ மரம் சிவனின் அம்சமாகும். இம்மரத்திலிருந்து வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. ருத்ராஷ கோட்டையை உடலில் அணிந்து கொண்டால் இரத்தம் சுத்தமாகும். இரத்த அழுத்தம் சீராகவும் கோபம் குறையும். மனதில் சந்தம் உண்டாகும்.

ஷர்ப்பகந்தி

இம்மரத்தின் அருகே பாம்புகள் வராது. இம்மரத்தின் குச்சிகள் உடலில் கட்டி கொண்டால் பாம்புகள் தீண்டாது.

நெல்லி மரம்

நெல்லி மரம் விஷ்ணுவின் அம்சமாகும். இம்மரத்தின் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கிழே தம்பதிகளை அமரவைத்து அன்னதானம் செய்தால், அன்னதானம் செய்பவருடைய சகல பாவங்களும் நீங்கும்.

வில்வமரம்

வில்வமரம் சிவனின் அம்சமாகும். இம்மரத்தின் இலைகளால் சிவனை பூஜிக்க சகல பாவங்களும் நீங்கும்.

வேப்பமரம்

வேப்பமரம் சக்தியின் அம்சமாகும். இம்மரத்தின் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தை சுற்றி மஞ்சள் குங்குமம் பூசி மங்கள் ஆடைகளை கட்டி மாலை சூடி மரத்தை வலம் வந்து வணங்கி வர சக்தியின் அருள் கிட்டும்.

கருவேல மரம்

கருவேல மரம் தீய அதிர்வுகளை வெளிபடுத்தும் இம்மரத்தின் காய் மற்றும் வேர்களை மந்திரவாதிகள் தவறான காரியங்களுக்கு பயன்படுத்துகிறார்கள். பொதுவாக பேய், பிசாசுகள் இம்மரத்தின் மீதுதான் குடியிருக்கும்.

காட்டுமரம்

காட்டு வேம்பு பிரம்மாவின் அம்சமாகும். ஒரு சிலர் இதை விஷ்ணும் அம்சம் என கூறுவர். இம்மரம் சாத்வீக அதிர்வுகளை வெளிபடுத்தும்.

அசோக மரம்

அசோக மரம் சாத்வீக அதிர்வுகளை வெளிப்படுத்தும்.

புளிய மரம்

புளியமரம் தீய அதிர்வுகளை வெளிபடுத்தும். புளிய மரத்தின் நிழல் நோய்களை உண்டாகும். புளிய மரங்களில் பேய், பிசாசுகள் தங்கி இருக்கும் என்பது நம்பிக்கை.

மாதுளம் மரம்

மாதுளை மரம் லட்சுமியின் அம்சமாகும். இம்மரத்தின் வெளிப்படும் அதிர்வுகள் சாத்வீக குணமுடையவை. இம்மரத்தின் கிழே விளகேற்றி தம்பதிகளால் வலம் வர தம்பதிகளிடையே அன்னியோன்யம் ஏற்படும்

அச்சிட்ட யந்திரங்கள் அதிஷ்டத்தை கெடுக்கும் ஏட்டு சுரக்காய் கறிக்கு உதவாது

பல தரப்பட்ட மக்கள் கடைகளில் அநேகமான விளம்பரங்களை பார்த்து அச்சிட்ட யந்திரங்களை வாங்கி பூஜை அறையில் வைத்து வழிபடுகின்றனர் .ஆனால் அந்த யந்திரத்தால் எந்த பயனும் கிடையாது .

இந்த உண்மை அக்காலத்திலிருந்தே சொல்லப்பட்டு வருகின்றது ஆனால் இதை கடைபிடிப்பவர்கள் யாரும் இலர் ..அதாவது மாந்திரீகம் ஜோதிடம் என்பது புத்தகத்தை படித்தே பல விசயங்களை சாதிக்க முடியும் என்று பலர் கனவுக்கோட்டை கட்டை விட்டு அந்த மண் கோட்டைக்கு பல லட்சம் தொகையை செலவிட்டு பின்னர் கூறுவார்கள் .மந்திரம் எல்லாம் பொய் பித்தலாட்டம் என்று ஆனால் அவர்கள் சரியான குருவிடம் சென்று பயிலாத காரணத்தினால் இந்த வார்த்தையை கூறினார் .

நானும் என் தாத்தா முத்து பாண்டி வைத்தியர் அறிவுரையின் படி எங்கெங்கெல்லாம் பயிற்சி வகுப்பு நடக்கின்றதோ அங்கெல்லாம் சென்று படி அப்போதுதான் உண்மை எது போய் எது வென்று தெரியும் நானும் அவருடைய வாக்கை கேட்டு தமிழ்நாடு முழுவதும் பல பயிற்சி வகுப்புகள் உ000 வது ஆண்டிலிருந்து பயின்று வருகிறேன் எல்லாம் வெளிவேஷம் பொய் பித்தலாட்டம் நான் அவர்களிடமே சண்டை போட்டிருக்கிறேன் ஆனால் அவர்களால் என்னை எதுவும் செய்ய முடிய வில்லை ஏன் .அவர்களால் வாய் பேச்சுகளால் மக்களை மயக்கி பணம் சம்பாதிகின்றனர் .

நான் வேறுமாநிலத்திற்கு சென்றேன் ஆந்திரா ,ராஜஸ்தான் ,ரிஷிகேஷம் ஹரித்வார் ,போன்ற இடங்களுக்கெல்லாம் சென்று அனுபவப்பட்ட பிறகுதான் .என் தாத்தாவின் அருமையை புரிந்து கொண்டேன் .முத்துபாண்டி வைத்தியர் அவர்கள் அடிக்கடி கூறுவது நாய் குரைத்தாலோ எறும்பு கடித்த்காலோ நீ கோபம் கொள்வாயா ,இல்லை அல்லவா

இதே விசயம்தான் நான் கூறுகிறேன் நீ மனிதன் என்று நினைப்பவர்கள் எவருமே மனிதர்கள் அல்ல எல்லோரும் மிருக குணங்களை பெற்றே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் ஆதலால் ,எந்த ஒரு மனிதனையும் நீ தேடி செல்ல வேண்டாம் எல்லா மனிதர்களும் உன்னை தேடி வருவார்கள் அவன் உண்மையான மனிதன் என்றால் .

ஆக இந்த மாந்திரிகக்கலை மருத்துவம் , ஜோதிடம் இந்த மூன்று வித்தைகளும் ஒரு மனிதனுக்கு கூடவேனுமென்றால் அவன் முந்தைய ஜென்மங்களில் செய்த புண்ணியத்தின் விளைவு .அதனால் அவனை மதித்து நட வேறு யாவரையும் மதிக்க வேண்டிய கட்டாயம் இல்லை வைராக்கியத்தோடு வாழ் என்று கூறினார் .

தேவ பிரசன்னம்,சோழி பிரசன்னம் எதற்காக பார்ப்பது ?

இந்த பெயரை கூறியே ஏமாற்றுகாரர்கள் நிறைய பேர் உருவாகி விட்டனர் .நான் சவால் விடுகிறேன் சில நாட்களுக்கு முன் நடந்த சம்பவம் 5/03/2015 , இந்த தேதியை மையப்படுத்தி ஒரு சம்பவம் நிகழ்ந்தது இந்த விசயங்களை வெழியில் கூறினால் என் தாத்தா மிகவும் கோபம் கொள்வார் ஆனால் அவர் கோபத்தை எப்படி தணிப்பது என்று எனக்கு தெரியும் ஆகையால் உங்களிடம் பகிர்வதில் எனது மனது ஆனந்த்தமடையும் ஒரு கோவிலின் தர்மகர்த்தா எங்களை தேடி வருகின்றார்

எதற்காக என்று எனக்கு புரியவில்லை என் தாத்தா புரிந்து கொண்டார் அவர்களிடம் சில விசயங்கள் பேசினார்கள் .அதற்கு பிறகு நான் இந்த தேதியில் வருகின்றேன் என்று என் தாத்தா கூறினார் .

நாங்கள் அந்த கோவிலுக்கு சென்றோம் நாங்கள் இரவு பத்து மணி அளவில்தான் கோவில் அருகில் சென்றோம் அதற்குபிறகுதான் விஷயம் எனக்கு புரிந்தது .என்ன காரியத்திற்காக நாம் இந்த கோவிலுக்கு வந்தோம் என்று .

கோவிலின் உள்ளே சென்று தர்ம கர்த்தாவை எதிரே உட்கார வைத்து உங்கள் பிரச்சனைகளை மனதில் நினைத்து கொள்ளுங்கள் என்று தாத்தா கூறினார் ,அதற்குபிறகு திரு முத்துபாண்டி வைத்தியர் கூறியதாவது ...........

நான் அமர்ந்திருக்கும் கோவிலின் உள்ளே மொத்தம் எட்டு தேவதைகள் உள்ளன அதில் ஒன்றுக்கும் உயிரில்லை

அந்த காரியத்தை உங்கள் குடும்பத்தில் ஒருவன் எட்டு தேவதைகளின் பிடி மண்ணையும் எடுத்து அந்த பிடிமண்ணில் அட்சரங்கள் குத்தி தீட்டு துணியையும் வைத்து புதை த்துள்ளான் அவன் ஒரு சில தாந்திரீகர்களை கொண்டுஇந்த காரியத்தை செய்துள்ளான் .

இதனை நான் நீக்கி தருகின்றேன் நான் இங்கே ஒரு பூஜை செய்து விட்டு வீடு திரும்பிய பிறகு உடனடியாக பூஜை கொடுங்கள் உடனே யார் மீதாவது அந்த தெய்வத்தின் அருள் வரும் என்று கூறிவிட்டு சென்றோம் அன்று இரவு மூன்று தேவதைகள் அருள் வந்து ஆடியது இந்த விசயங்களெல்லாம் அதிசயம் அல்ல அன்றாட வாழ்வில் நடப்பவை

தயவு செய்து நீங்கள் ஒரு தந்திரீகர்களிடம் செல்லும் பொது தேவ பிரசன்னம் பார்த்து விசயங்கள்; கூர முடியுமா என்று கேளுங்கள் .

இப்படி அனுபவங்கள் கூற வேண்டுமானால் நிறைய கூறி கொண்டு போகலாம் .அதனால் ஆன்மிக அன்பர்களே தயவு செய்து யாரிடமும் ஏமாறாதீர்கள்

கேரளா மாந்திரீகமும் தமிழக மாந்திரீகமும்

பொதுவாக தமிழகத்தில் பயன்படுத்தும் மாந்திரீக முறைகளுக்கும் கேரள மாந்திரீக முறைகளுக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு .

தமிழகத்தில் நிறைய இடங்களில் பயிற்சி வகுப்பு நடக்கின்றன அதில் கேரளா மாந்திரீகம் சொல்லி கொடுப்பதில்லை அவர்கள் சொல்லி கொடுக்கும் மாந்திரீகம் சித்தர்கள் வழி வந்த மாந்திரீகம் இந்த பயிற்சி வகுப்புகளில் கலந்து நாம் அதில் சாதிக்க வேண்டுமென்றால் எதாவது சித்தர்களுடைய ஆசி இருந்தால் மட்டுமே இந்த கலையை கற்று வெற்றி அடைய முடியும் .

தமிழகத்தில் உள்ள மாந்திரீக கலையினால் பின் விளைவுகள் கிடையாது
தெய்வத்தின் சித்து கிடைக்க கால தாமதம் ஆகும் .
அதன் சித்து கிடைத்தால் அவன் சித்தன் ஆகி விடுவான்
இந்த கலை கற்பவர்களுக்கு நிறைய இடையூறுகள் வரும் அது இந்த சித்தர்களால்தான்

கேரளா மாந்திரீகத்தை பொறுத்த வரையில் மிகவும் பாதுகாப்பாக கையாண்டால் மட்டுமே நாம் உயிரோடு உலாவ முடியும்

முதலில் நாம் இருக்கும் இடத்திற்கு பாதுகாப்பு கவசமாக ஒரு சில விசயங்கள் செய்ய வேண்டும்
அதன் பிறகு நாம் ஒரு இடத்திற்கு பூஜை செய்ய சென்றாலும் அந்த ஊரின் எல்லையை கட்ட வேண்டும்
நாம் பூஜை செய்யும் இடத்தில் ஒரு சில தேவதைகள் உலாவும் அதையும் நாமை தாக்காத விதமாக நம்மை கட்டி கொள்ள வேண்டும்

கேரளா மாந்திரீகம் அதிகமாக சிறு தெய்வ கோவில்களில் உள்ள பிரச்சனைகளுக்காகத்தான் நடக்கும்

அதனால் அங்கு என்ன பிரச்சனைகள் இருக்கிறது என்று பார்த்து மிகவும் துல்லியமாக குறிப்பிட வேண்டும் அதற்கான பரிகாரங்கள் செய்து அவர்கள் கண் முன்னாடியே அந்த தெய்வத்திற்கு அருள் வரவைத்து ஆட வைக்க வேண்டும்

கேரள மாந்திரீகம் யாருக்கும் எளிதில் சொல்லி கொடுக்க மாட்டார்கள் அவர்களுடன் பழகி அவர்களின் குணத்தை அறிந்து அதன் பிறகுதான் சொல்லி கொடுப்பார்கள்

இப்போது கேரளா மாந்திரீகம் பயிற்சி என்று கூறுகிறார்கள் அதெல்லாம் கேரள மாந்திரீகம் கிடையாது அது சித்தர்கள் கூறிய ஒரு சில மந்திரங்களின் தொகுப்பு அதில் முழுவதும் வெற்றி கிடைக்காது

இவ்வளவு நாட்களும் பயிற்சி வகுப்புக்காக பணம் செலவு செய்தவர்கள் எல்லோரும் உண்மையான கேரளா மாந்திரீகனை கண்டால் உங்கள் கண்களில் கண்ணீர் வரும் உடல் புல்லரிக்கும் ஏனென்றால் அவ்வளவு விசயங்கள் கண் கூடாக பார்க்கிறோம் அனைத்தும் அமானுஷ்ய விசயங்கள் .வெளியில் சொல்வதற்கில்லை ....

பஞ்ச பட்சி நங்கிலி மூலிகை சூட்சமங்கள் [கிலுகிலுப்பை ]

பஞ்ச பட்சி வித்தையை பற்றிய சில விசயங்களை படித்து கொண்டு தவறான விசயங்களை மக்களிடம் பகிர்ந்து அதை பயின்றவர்கள் ஏமாற்றம் அடைந்து பலனில்லாமல் பஞ்ச பட்சி கலை பொய் என்றெல்லாம் கூறுகிறவர்களை நான் கண்டுள்ளேன் .

பஞ்ச பட்சி கலையை பிரயோகித்தால் ஒவ்வொருவரின் வாழ்க்கையையே மாற்ற முடியும் .பஞ்ச பட்சி ரகசியத்தை பயின்றவர்கள் அவர்களைத்தேடியே மக்களை வரவழைக்க முடியும் விளம்பரங்கள் தேவை இல்லை .

இந்த கலையை பயின்று இந்த கலையை பிரயோகிக்க முடியாமல் ஊருக்கு பயந்து ஊரை விட்டு ஒதுங்கி வாழ்பவர்கள் இருக்கிறார்கள் .இந்த கலையை பற்றிய ஒரு விஷயத்தை கூட வெளிக்காட்ட மாட்டார்கள் .

நங்கிலி என்றால் கிலுகிலுப்பை மூலிகை

நங்கிலி மூலிகை ரகசியம் என்றெல்லாம் கூறுகிறார்கள் இதெல்லாம் பெரிய ரகசியம் இல்லை எல்லா மூலிகைகளைப்பற்றி சொல்லிகொடுத்தாலும் அதை பிரயோகிக்க கூடிய திறமை இப்போது யாரிடமும் இல்லை மூலிகையை மட்டும் தெரிந்து கொண்டு எதுவும் சாதித்து விட முடியாது

பேய் விரட்டும் மாந்திரீகனின் தகுதி என்ன?

நமது இடங்களின் பேய் தொல்லைகள் அதிகமாக இருக்கிறது .நிறைய மனிதர்கள் அதை வெளிக்காட்டி கொள்ளாமல் இருக்கிறார்கள் .அது எப்படி என்றால் ஏதோ பைத்தியம் பிடித்து விட்டது என்பது போல பாவிக்கின்றனர் .ஆனால் அது உண்மையிலே பேய் பிடிப்புதான் .

பேய் பிடித்தவர்களின் அறிகுறிகள் என்னவென்றால் முதலில் பெரிய கொட்டாவி வரும் கைகள் கை விரல்கள் மடங்கும் பற்கள் கடிக்கும் சப்தம் கேட்கும் விழிகள் பிதுங்கி வெளியில் வரும் இதுவெல்லாம் அதனுடைய அனுபவங்கள் .இப்படி பட்ட பேய் பிடித்த நபர்கள் சாதரணமாக நம்மை போலதான் இருப்பார்கள் ,இந்த நிலைமை எப்போது வரும் என்றால் செவ்வாய் வெள்ளிகிழமைகளிலும் அமாவாசை பௌர்ணமி ,மற்றும் மக நட்சத்திர நாட்களிலும் இந்த அறிகுறிகள் தெரிய வரும் .

இதற்கான பூஜை முறைகள் என்னென்ன ?

இதற்காக எட்டு இதழ் கொண்ட கோலம் போட்டு அதன் நடுவில் பஞ்சாட்சரம் வரைந்து அதன் நடுவில் பே பிடித்தவரை இருத்தி அதில் கும்ப கலசங்கள் ஸ்தாபித்து அதற்கு ஓமகுண்டம் வைத்து சாந்திகள் செய்து இப்படி தயாராக உள்ள பஞ்சாட்சரத்தின் நடுவில் அமர்த்தி ஒரு சில உச்சாடனங்கள் கொடுத்த உடனே அந்த நபருக்கு ஆட்டம் பிடித்து விடும் அதன் பிறகு அதை பற்றிய விபரங்கள் கேட்டு ஐந்து முக விளக்கு தீபம் ஏற்றி அதில் சத்தியம் செய்தால் உடனே எல்லா விதமான பேய்களும் ஓடிவிடும்

இந்த மாந்திரீகத்தில் சூட்சமம் ?

ஒரு நல்ல உபாசகன் மாந்திரீகன் எந்த வீட்டில் பேய் பிரச்சனைகள் உள்ளதோ அந்த வீட்டிற்கு அருகில் சென்றாலே எல்லா பேய்களும் பயந்து ஓடிவிடும் .இது நல்ல உபாசகர்களில் வேலை.... இந்த வித்தையை சரி வர பயிலாமல் செய்தால் மேற்கூறிய விசயங்கள் தேவை ..ஒரு தெய்வீக அருள் பெற்ற மாந்திரீகனுக்கு எல்லாமே கைகூடும் .

சாதாரண மந்திரங்களுக்கும் பீஜா மந்திரங்களுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

குறிப்பிட்ட பயன்களை அடைவதற்காக மந்திரங்களைப் பிரயோகம் செய்வது சரிதானா?

பீஜம் என்பது விதை என்று சொல்லப்படும். பீஜாட்சரங்கள் என்றால், மந்திரங்களின் வித்துகள் என்று பொருள் கொள்ளுகிறோம். பீஜாட்சரங்களை மந்திரங்களுடன் இணைத்துச் சொன்னால்தான் மனதில் அலை எழுப்ப முடியும். அவை மனதைத் தூண்டும் சக்தி உடைவை.

பீஜா மந்திரங்களில் “ஐம்’ என்பது சரீரத்தையும்,
“ஹ்ரீம்’ என்பது மனத்தையும்,
“ஓம்’ என்பது மூலாதாரத்தையும் ஊக்குவிக்கும்.

மேலும், இந்த பீஜாட்சரங்கள் உச்சரிப்பவரின் உட லுக்குள் சென்று பக்தி நெறிக்கு அழைத்துச் செல்லும் பக்குவத்தையும் ஏற்படுத்தும். அதனால் பீஜாட்சரங்களை மந்திரங்களுடன் இணைத்துச் சொல்வதே சிறந்த பலனைத் தரும். மந்திரங்களை உச்சாடனம் செய்யும் பொழுது, அவை எதனைக் குறித்துச் செய்யப் படுகின்றனவோ, அந்தப் பலன்களை உறுதியாக அளிக்கும்.

மந்திர உபாசனை செய்யும்போது நல்லதற்கும் தீயதற்கும் அவை உதவும். சரியான உச்சரிப்புடன் சொற்சோர்வு இல்லாமல், நல்ல நோக்கங்களுக்காக உச்சாடனம் செய்தால் நாம் எதிர்பார்க்கும் நன்மை உண்டாகும்.

உதாரண மாக, சந்தான கோபால கிருஷ்ணனுக்குரிய மந்திரத்தை பக்தியுடன் ஜெபம் செய்து ஹோமத்தில் பிரயோகம் செய்தால் நிச்சயமாகப் புத்திர பாக்கியம் உண்டாகும். வெண்ணெய்யில் மந்திர உச்சாடனம் செய்து கொடுத்தால் சந்தான பாக்கியம் ஏற்படும் என்பதில் உறுதியாக இருக்கலாம்.

மூலிகை சாப நிவர்த்தி வேறொரு முறை

மூலிகை அருகில் சென்று மூலிகை இருக்கும் இடத்தை சுத்தம் செய்து கொள்ள வேண்டும். பின்பு தேங்காய், வாழைப்பழம், சூடம், பத்தி, சாம்பிராணி, வெற்றிலை பாக்கு, அவல், பொறி, கடலை, இளநீர், கல்கண்டு, விபூதி, சந்தனம், குங்குமம், பொங்கல், இவைகளை தல வாழையிலையில் வைத்து ஆரம்பிக்க வேண்டும். முதலில் நாம் செய்ய வேண்டியது ஒரு வெள்ளை நிறமுள்ள நூலில் மஞ்சள் தடவி பின்பு ஒரு விரல் மஞ்சள் கோர்த்து தாலி கட்டுவது போல் மூலிகையின் மீது கட்டவும். பின்பு தேங்காயுடைத்து குரு மந்திரம் 33 தடவை கூறவும் பின்பு விநாயகர் மந்திரம் 108 முறை கூறவும். பின்பு நம் குல தெய்வத்தையும், நம் முன்னோர்களையும் வணங்கி மூலிகை சாப நிவர்த்தி மந்திரத்தை 1008 முறை கூறி முப்பலி கொடுத்து இரும்பாலாகிய ஆயுதம் படாமல் ஆணிவேர் ஆறாமல் தோண்டி எடுக்கவும்.

சாப நிவர்த்தி மந்திரம்

“ஓம் சர்வ மூலிகையே உன் சாபம் சாபம் நசி மசி, பரமசிவன் சாபம் நசி மசி. பார்வதி சாபம் நசி மசி, அகஸ்தியர் சாபம் நசி மசி, சப்தரிஷி சாபம் நசி மசி, கோடான கோடி ஜீவ ராசிகளின் சாபம் நசி மசி, ஏனையோர் சாபம் நசி மசி, சகலமும் எனக்கு வசி வசி வசியமாக சுவாஹா”

“ஓம் மூலி சர்வ மூலி உன் உயிர் உன் உடலில் நிற்க சிவா”

சாப நிவர்த்தி சில சூட்சுமங்கள்

1.தன்னுடைய பட்சி அரசிலும், சுப ஓரையிலும் எடுக்க வேண்டும்.
2.ஞாயிற்றுக்கிழமை, அமாவாசை, சந்திர சூரிய கிரஹணம், இப்படிப்பட்ட நாட்களில் எடுக்க வேண்டும்.
3.இல்லையெனில் தாரா பலன் நட்சத்திரத்தின் அடிப்படையில் எடுக்க வேண்டும். இது 100% மிகச்சிறந்த பலனைத்தரும்.
4.நிர்வாணமாக இருந்து எடுக்க வேண்டும்.
5.சுண்டு, விரல் நகம் படக்கூடாது.
6.படையல் சரியாக வைக்கவும்.
7.விரல் மஞ்சள் வைத்து தான் காப்பு கட்ட வேண்டும்.
8.பிரம்ம முகூர்தத்தில் தான் எடுக்க வேண்டும்.
9.அரைஞாண் கயிறு இருக்கக்கூடாது.
10.முப்பலி கொடுத்துதான் எடுக்க வேண்டும்.[தேங்காய், வெண்பூசணி, எழுமிச்சம்பழம் இவைகளில் குங்குமம் தடவி மூலிகையின் மீது படும்படி செய்யவும்].

செல்வம் பெருக சில குறிப்புகள்

வீட்டில் ஏற்றும் காமாட்சி விளக்கில் டைமண் கல்கண்டுபோட்டு தீபம் ஏற்ற லஷ்மி கடாட்சம் ஏற்படும்.

- வீட்டில் வெள்ளை புறாக்களை வளர்க்க பணத்தட்டுப்பாடுநீங்கும்
- வீட்டில் பல வித ஊறுகாய் வைத்திருக்கவும், ஏனெனில்குபேரன் ஊறுகாய் பிரியர். எனவே பல வித ஊறுகாய்வைத்திருக்க குபேர சம்பத்து வரும்.
- நமது வீட்டிற்கு வரும் சுமங்கலிப்பெண்களுக்கு நீர் அருந்ததரவும். பின் மஞ்சள் குங்குமம் தரவும். இதனால் ஜென்மஜென்மாந்திர தரித்திரம் தீர்ந்து பண வரவு ஏற்படும்.
- அமாவாசை அன்று வீட்டு வாசலில் கோலம்போடக்கூடாது. தலைக்கு எண்ணெய் தடவக்கூடாது.பூஜை காலைப் பொழுதில் செய்யக்கூடாது. பிதுர்களைமட்டும் வழிபட பணம் வரும்.

- வீட்டில் விளக்கு ஏற்றியவுடன் பால், தயர், குடிநீர், உப்பு,ஊசி, நூல் இவைகள் வீட்டை விட்டு வெளியேறக்கூடாது.பணம் ஓடிவிடும்.
- பொதுவாக இறை பக்தியில் இருப்பவர்களிடம் ஆசிபெறுவது புண்ய பலம் கூடும். பண வரவு அதிகரிக்கும்.
- வெள்ளளிக்கிழமை சுக்ர ஓரையில் மொச்சை, சுண்டலைமகாலஷ்மிக்கு நைவேத்யம் செய்து நமது குடும்பத்தினர்மட்டும் சாப்பிடவும். தொடர்ந்து செய்து வர குடும்பத்தில்பண புழக்கம் அதிகரிக்கும்.
- அபிஜித் நட்சத்திரத்தில் (பகல் 12 மணி) அரவாணிக்குதிருப்தியாக உணவளித்து அவள் கையால் பணம் பெறபணம் நிலைத்திருக்கும்.
- யாரொருவர் ஜாதகத்தில் லக்னத்திற்கு மூன்றில் சுக்ரன்நீசம், பகையின்றி இருக்கிறாரோ அவர் கையால் சுக்ரஓரையில் பணம் பெற அன்றிலிருந்து நமக்கு சுக்ர திசைதான்.
- பசுவின் கோமியத்தில் தினமும் சிறிதளவு குளிக்கும் நீரில்கலந்து குளிக்கவும், வீட்டில் தெளிக்கவும் .45 நாட்கள்விடாமல் செய்திட தரித்திரம் தீர்ந்து பணம் வரும்.
- முழு பாசி பருப்பை வெல்லம் கலந்த நிரில் ஊற வைத்துபின் அதனை (மறுநாள்) பறவைக்கு, பசுவிற்குஅளித்திடவும். இதனை தொடர்ந்து செய்து வர பணத்தடைநீங்கும்.
- வெள்ளிக்கிழமை பெருமாள் கோவிலில் தாயாருக்குஅபிஷேகத்திற்கு பசும் பால் வழங்கிட பணம் வரும். பச்சைவளையலை தாயாருக்கு அணிவித்திட பணம் வரும்.
- பெண்கள் இடது கையில் வெள்ளி மோதிரம் அணியதனப்ராப்தி அதிகரிக்கும்.
- பசும்பாலை சுக்ர ஓரையில் வில்வ மரத்திற்கு ஊற்றவும். 24 வெள்ளிக்கிழமை செய்திட நிச்சியமாக பணம் வரும்.
- பாசிப்பருப்பை ஒரு பச்சை பையில் மூட்டையாக கட்டிதலையடியில் வைத்து உறங்கி மறுநாள் அதனை ஒருபிளாஸ்டிக் பையில் கொட்டி மூடி ஓடும் நீரில் விடவும்பணப்பிரச்சனை தீரும்.
- தினசரி குளிக்கும் முன் பசுந்தயிரை உடல் முழுவதும்தடவி சிறிது நேரம் சென்று குளிக்க தரித்திரம் விலகும்.
- குளித்தவுடன் முதுகை முதலில் துடைக்கவும் தரித்திரம்விலகும்.
- தமிழ் மாதத்தில் முதல் திங்கட்கிழமை என தொடர்ந்து 12மாதமும் திங்கட்கிழமை திருப்பதி ஏழுமலையானைதரிசிக்கவும் நீங்கள் உறுதியாக கோட்டீஸ்வரர் ஆகலாம்.பூர்வ புண்ணியம் இல்லாதவர் கூட லட்சாதிபதி ஆகலாம்.
- அம்திஸ்ட் கல் 10 கேரட் வாங்கி பணப்பெட்டியில் வைக்கபணம் ஆகர்ஷணம் ஆகும். சீக்கிரம் செலவு ஆகாது.
- குடியிருக்கும் வீட்டில் வடகிழக்கு பகுதியில் கிணறு,நெல்லி மரம், வில்வ மரம் இருக்க அந்த வீட்டில் லஷ்மிகடாட்சம் ஏற்படும்.
- தினமும் காலையில் வெங்கடேச சுப்ரபாதம், விஷ்ணுசஹஸ்ரநாமம் ஒலிக்கும் வீட்டில் லஷ்மி நித்தமும் வாசம்செய்வாள்.

- மகாலட்சுமிக்கு இளஞ்சிவப்பு நிற வஸ்திரம் சாத்தி வழிபடவசியமுண்டாகி செல்வ வரத்து உண்டாகும்.
- அவரவர் நட்சத்திர தன தாரை ஓரை வெள்ளிக்கிழமைவரும் வேளையில் அரசமரத்தடி விநாயகருக்கு அகலில் 11தீபமும் ,11 முறை வலம் வந்து வழிபட்டால் பணவரவுநிரந்தரமாகும்.
- வீட்டில் தலை வாசல் படியில் கஜலஷ்மி உருவத்தைவெள்ளி தகட்டில் பதித்து வைத்தால் செல்வம் சேர்ந்துகொண்டே இருக்கும்.
- ஒவ்வொரு மாதத்தில் வரும் பௌர்ணமியன்று சத்தியநாராயண பூஜை செய்ய செல்வங்களை பெறலாம்.
- ஐப்பசி மாத வளர்பிறையில் மகாலட்சுமியை வழிபடசெல்வம் பெருகும்.
- தொடர்ந்து 11 பௌர்ணமி அன்று இரவு 8.30 மணிக்குசொர்ணாகர்ஷன பைரவருக்கு தாமரை மாலைஅணிவித்து பிரசாதமாக அவல், பாயாசம் படைத்து வழிபடசொர்ண ஆகர்ஷணமாகும்.
- மகாலட்சுமிக்கும், தன பண்டார குபேரருக்கும் திரிதளவில்வத்தால் அர்சித்து, வில்வ மாலை அணிவித்திடபணம் குவியும்.
- ஐஸ்வர்ய தூப பொடியுடன், துளசி பொடியுடன் சேர்த்துஅவரவர் தன ஓரையில் தூபம் போட செல்வம் குவியும்.
- சுக்ர ஓரையில் உப்பு வாங்கிட செல்வம் குவியும்.
- வெள்ளிக்கிழமை மாலை நேரத்தில் பசுவிற்குஉணவளிக்க செல்வம் சேரும்.
- மகாலட்சுமியை கனகதாரா ஸ்தோத்திரம் கூறி திரிதளவில்வத்தால் அர்சித்திட செல்வம் ஆகர்ஷணம் ஆகும்.
- சுத்தமான நீரில் வாசனை திரவியம் கலந்து இருவேளையிலும் லஷ்மி மந்திரம் கூறியபடி தெளித்திடசெல்வம் சேரும்.
- சுக்ர ஓரையில் மொச்சை பயிர் வாங்கிட செல்வம் சேரும்.
- சொர்ணாகர்ஷன பைரவருக்கு தூய பன்னீரில் அவரவர்பிறந்த தினத்தில் அபிஷேகம் செய்திட பணம் சேரும்.
- பசுவுடன் கூடிய கன்றுக்கு உணவளித்தால் சகலசெல்வங்களும் வசமாகும்.
- வயதான சுமங்கலிக்கு மங்கல பொருட்களுடன்வளையல், மருதாணி சேர்த்து தானம் அளித்திட லஷ்மிஅருள் பரிபூரணமாக கிட்டும்.
- மஞ்சள் நீருடன், வாசனை திரவியம் கலந்து வீட்டிலும்,தொழில் ஸ்தாபனத்திலும் தெளிக்க ஐஸ்வர்யம் பெருகும்.
- ஆந்தை படத்தினை தொடர்ந்து பார்த்து வர பணம்ஆகர்ஷணமாகும்.
- தங்க நகை அணிந்த திருப்பதி வெங்கடாஜலபதி படத்தில்காலை எழுந்தவுடன் கண் விழித்திட பணம் கிடைக்கும்.
- தனாகர்ஷண தைலத்தால் விளக்கு ஏற்றிட செல்வம்நிலையாக தங்கும்.
- சொர்ணாகர்ஷன பைரவருக்கு 9 நெய் விளக்கு ஏற்றிட,தொடர்ந்து 9 வாரம் செய்து வர குடும்பத்தில் முன்னேற்றம்ஏற்படும்.
- குபேரனுக்கு தாமரை திரி போட்டு விளக்கேற்றிவழிபட்டால் பணம் வரும்.
- குல தெய்வ வழிபாடும், பித்ருக்கள் வழிபாடும்இடைவிடாமல் செய்து வர குடும்ப முன்னேற்றம் ஏற்படும்.

- திருமலை வெங்கடாஜலபதிக்கு வெண் பட்டு அணிவித்துவழிபட செல்வம் சேரும்.
- துளசி மாடம் அமைத்து தொடர்ந்து அதனை பூஜை செய்துவர தீமைகள் நீங்கி நன்மை உண்டாகும்.
- சொர்ண பைரவருக்கு பன்னீர் கொண்டு அபிஷேகம்செய்து, அதனை வீட்டில் தெளித்திட சொர்ண லாபம்கிட்டும்.
- செவ்வாய்கிழமையில் செவ்வரளி கொண்டு செந்தூர்முருகனை வழிபட்டால் காரியத்தடை நீங்கி வளம்பெருகும்.
- ஏகாதசியில் பெருமாள் பாதம் வரைந்து அர்சித்து வழிபடபூமி லாபமும், செல்வ வளம் கிட்டும்.
- கோவிலில் லஷ்மி மீது வைத்த தாமரை மலரைக்கொண்டு வந்து பச்சை பட்டில் வைத்து மடித்துபணப்பெட்டியில் வைக்க பணம் சேரும்.
- சம்பாதிப்பதில் ஒரு தொகையை சேர்த்து அதனைஅன்னதானத்திற்கு செலவிட அதனை போல் ஐந்து மடங்குநம்மிடம் வந்து சேரும்.
- ஸ்ரீ ரங்கநாத பெருமாள் கோவிலில் பெருமாளுக்குஅணிவித்த சந்தனத்தை பெற்று அதனை தினமும்அணிந்து வர பணம் வரும்.
- வெள்ளிக்கிழமை சுக்ர ஓரையில் மகாலட்சுமிஅஷ்டோத்திரம் சொல்லி செந்தாமரை இதழ் கொண்டுஅர்சிக்க தனலாபம் கிட்டும்.
- ஐஸ்வர்ய லஷ்மி படத்தினில் வாசனை திரவியம் தடவிபணப்பையில் வைக்க பணம் ஆகர்ஷணம் ஆகும்.
- தொடர்ந்து 11 நாள் ஸ்ரீ சூக்த பாராயணத்தை வேதபண்டிதர்களை கொண்டு செய்ய லஷ்மி கடாடசம்நிரந்தரமாகும்.
- ஸ்ரீ லஷ்மி குபேர சத நாம ஸ்தோத்திரத்தினை தீப தூபஆராதனையோடு கூறி வர அஷ்ட தரித்திரம் நீங்கிதனலாபம் பெறலாம்.
- கனக தாரா ஸ்தோத்திரத்தினை கூறியும் கேட்டு வர பணம்கிடைக்கும்.
- வீட்டில் சுமங்கலியாக இறந்த பெண்களை நினைத்துமஞ்சளாக பிடித்து அவர்களை நினைத்து வழிபட, சகலதோஷங்கள் விலகி குடும்பத்தில் முன்னேற்றம் ஏற்படும்.
- மகாலட்சுமிக்கு பச்சை பட்டினை அணிவித்து வணங்கபணம் வரும்.
- கற்பக விநாயகரை 1008 அருகம்புல் கொண்டு மகாசங்கடஹர சதுர்த்தியில் அர்சித்து வணங்கதொழிலிலுள்ள தடை நீங்கி லாபம் கிட்டும்.
- பச்சை பட்டு உடுத்திய லஷ்மி படத்தனை வாசலில் மாட்டிதினமும் தூபம் காட்டி வர அஷ்ட ஐஸ்வர்யங்களும்வசமாகும்.
- செல்வத்திற்கு உரியவள் மகாலட்சுமி வெள்ளிக்கிழமைதினம் வழிபடவும் 24 வெள்ளிக்கிழமை வழிபாட்டால்பணம் கிடைக்கும்.
- தன பண்டார குபேரனை வழிபட பணம் தடையின்றிகிடைக்கும்.
- இந்துராணி மந்திரம் ஜெபம் செய்ய ராஜயோக வாழ்வுவாழ பணம் கிடைக்கும்.
- வியாழன் அன்று குரு ஓரையில் தட்சணாமூர்த்தி வழிபாடுசெய்ய செல்வம் சேரும்.

- வெள்ளிக்கிழமை காலை சுக்ர ஓரையில் சுக்ரன்,மகாலஷ்மி இருவரையும் மல்லிகை மலர் கொண்டு 33வாரம் வழிபட செல்வம் கிடைக்கும்.
- செந்தாமரையில் அமர்ந்துள்ள தெய்வங்களை வழிபடபணம் கிடைக்கும்.
- கனகதாரா ஸ்தோத்திரம், ஸ்ரீ சூக்தம், பாக்ய சூக்தம் சுக்ரஓரையில் பாராயணம் செய்ய பணம் வரும்.
- அவரவர் குல தெய்வத்தை தினம் அதிகாலை நேரத்தில்நம்பிக்கையுடன் வழிபட பணம் வரும்.
- அமாவாசை, முன்னோர்கள் இறந்த திதி இவைகளில்முன்னோர்களை வேண்டி தானம் செய்ய, நாம் செய்தஅளவின் மடங்குகள் பணம் வரும்.
- திருப்பதி வெங்கடாஜலபதி, பத்மாவதி படம் வைத்துவழிபட பணம் வரும்.
- தனதா யட்சணீ பூஜை வில்வ மரத்தடியில் தந்திரசாஸ்திரப்படி செய்ய ஏழே நாளில் பணம் கிடைக்கும்.
- சௌபாக்கிய பஞ்சதசி மந்திரம் ஜெபிக்க கோடிகணக்கில்பணம் கிடைக்கும்.
- சொர்ணாகர்ஷண பைரவர், சொர்ண கணபதி, தனவீரபத்ரன், சொர்ண காளி, சொர்ண வராகி இவைகளைவழிபட தங்க நகை கிடைக்கும்.
- ஆந்தையை வழிபட பணம் கிடைக்கும்.
- ஜோடி கழுதை படம், ஓடும் வெள்ளை குதிரை படம்,அடிக்கடி பார்க்க பணம் வரும்.
- தனாகர்ஷண மூலிகை சட்டை பாக்கெட்டில் இருக்க பணம்குறையாது.
- பசுவின் பிருஷ்ட ஸ்பரிசம் தனம் தரும்.
- ஒத்தை பனை மர முனீஸ்வரனை ஏளஞ்சில் தைலதீபமேற்றி வழிபட அன்றே பணம் கிடைக்கும்.
- வியாழக்கிழமை குபேர காலத்தில் குபேரனை வழிபடபணம் வரும்.

## மூலிகை வித்தைகள்

### தொட்டற்சுருங்கி

இந்த மூலிகை மாந்திரீக தாந்திரிக வித்தைகளில் மிக முக்கியமான பங்கு வகுக்கிறது .கேரளாவில் மாந்திரீகர்கள் வசிக்கும் குடிலில் ஒரு சில மூலிகைகளை நான் கண்டிருக்கிறேன் அதில் இந்த தொட்டற்சுருங்கி மூலிகையும் ஒன்று .இந்த மூலிகை வேர் மற்றும் சமூலம் இரண்டுமே அனைத்து விசயங்களுக்கும் பயன்பகூடியது

இந்த மூலிகை முறையாக காப்புக்கட்டி பிடுங்கி எந்த காரணத்திற்காக மூலிகை பிடுங்குகிறோமோ அதை மனதில் எண்ணிக்கொண்டு வாய் பேசமால் மூலிகை பிடுங்கி கொடுத்தால் எந்த ஒரு பிரச்சனைக்கும் தீர்வு கிடைக்கும் என்பது அனுபவத்தில் நடந்து வருகிறது அதன் தீர்வு வெற்றிகளை குவிக்கிறது .

தொட்டற்சுருங்கி வேரை பிடுங்கி மை தயாரித்தால் சர்வ வசியம் உண்டாகும் .
பல நன்மைகள் நடக்கும் வசீகர சக்தி அதிகமாக இருக்கும்

சிவப்பு நாயுருவி .

இந்த மூலிகையானது தொழில் வளத்திற்கும் ,விவசாய வளத்திற்கும் ,செல்வா வளத்திற்கும் மிகவும் துணை செய்யும் குறிப்பாக ஒரு விவசாயம் செய்கின்ற நிலத்தின் நான்கு மூலைகளிலும் சிவப்பு நாயுருவி நட்டு வைத்தால் அந்த நிலமானது தனம் தருகின்ற நிலமாக அமையும் விவசாயத்தில் லாபத்தை கொடுக்க செய்யும் .

சிவப்பு நாயுருவி மூலிகையினால் தன வசியம் ,ஜன வசியம் ராஜ வசியம் ஆகியவைகள் சித்தியாகும் சகல் சம்பத்தும் கிடைக்கும்

அம்மான் பச்சரிசி

இந்த மூலிகை குணம் நான் ஒரு சபையில் சென்று பேசினால் அந்த சபையில் உள்ளவர்கள் எல்லோரும் நம் பேச்சிற்கு கட்டுப்பட்டு நடப்பார்கள் .அப்படிப்பட்ட ஒரு வசீகரத்தன்மை இந்த மூலிகையில் உண்டு .

நீண்ட நாள் நோய்களுக்கு மந்திரம்

கடுகு எண்ணெய் கிரகங்களில் செவ்வாயை வலுப்படுத்த மிகவும் உதவும். கடன் கொடுத்தோ, பெற்றோ அவதிப்படுவோர் கட்டாயம் கடுகு எண்ணையில் உணவு சமைத்து சாப்பிட நன்மை உண்டாகும். வாகன விபத்து அடிக்கடி நடக்கும் தன்மை உடையோர், நில மற்றும் மனை கட்டி தருதல் போன்ற வியாபாரம் செய்வோர் கடுகு எண்ணையில் மாதம் ஒரு முறை உடல் முழுதும் தடவி குளிக்க நன்மை பெருகும். மேலும் செவ்வாய் தோஷம் உள்ளோர்களும்,கணவன்-மனைவி சண்டை அடிக்கடி நடக்கும் குடும்பங்களும் இதை செய்யலாம்.

திருமணம் தாமதம் ஆகும் இளைஞர் இளைஞ்சிகளும் இப்படி செய்யலாம். ஒருவருக்கு தொடர்ந்து உடல் பிரச்சனைகள் இருந்து கொண்டு

இருந்தால் கடுகு எண்ணையை ஒரு கிண்ணத்தில் விட்டு சம்பந்தப்பட்டவரை கிழக்கு முகமாக நிற்க வைத்து ஏழு முறை அவர் தலையை சுற்றி "ஓம் பைரவாய நமஹ" மந்திரம் 108 கூறி வாசலில் எண்ணையை கொட்டிட சீக்கிரம் குணம் உண்டாகும். வெகு நாள் மருத்துவத்தில் உள்ளோர் 8 நாட்கள் தொடர்ந்து செய்து வர வேண்டும். வாழ்க வளமுடன் அனைவரும் !!

கஷ்டங்கள் அனைத்தும் விலக மூலிகை ...

எதிரிகளால் வஞ்சிக்கப்படுத்தல், உறவினர்களால் மற்றும் நண்பர்களால் ஏமாற்றப்படுத்தல், கஷ்ட நஷ்டங்கள், கடன் தொல்லை, தரித்திர நிலை, எதிரிகளின் மிகுந்த தொல்லை, தர்ம நியாயம் இல்லாத வம்பு வழக்குகள் அகல : சனிக்கிழமைகளில் காலை 6-7 மணிக்குள் குப்பைமேனி மூலிகையை (செடி) வேர் அராமல் பிடுங்கி எடுத்து வேரை மட்டும் பூஜையில் வைத்து பூஜித்து வர,மேற்சொன்ன அனைத்தும் விலகி ஓடும்.

கோர்ட், வழக்கு போன்றவற்றிர்க்கு போகும் பொழுதும், எதிரிகள் தொல்லை அதிகமாகும் போதும் இதன் வேரை தன்னுடன் எடுத்து சென்றால் ஜெயம் உறுதி. இதன் வேரை எடுத்து சென்றால் காட்டு யானைகளும் பயந்து ஓடும் என்பது முன்னோர் வாக்கு.

ஸ்ரீ மகாலஷ்மி அஞ்சனம்,

இந்த மகாலாஷ்மி அஞ்சனம் நம்மை சகல கிரக தோஷ உபாதையிலிருந்தும் விடுவித்து இஷ்ட சித்தி ஏற்படுத்தித்தரும், மேலும் தொழில் மேன்மை. தனம். புகழ். பதவி. அனுகூலம். வியாபாரம். உத்தியோகம் ஆகிய எல்லாத்துறைகளாலும் தனலாபத்தையும். மன ஆசைகளையும் மிக சுலபமாக நாம் அடைய வழிவகை செய்யும், துர்மரணம். தீய ஆவிகளின் தொல்லை. செய்வினை தோஷம். முன்னோர்களின் சாபம். கர்ம வியாதி ஆகிய சகலமும் இந்த அஞ்சனத்தால் தீரும், இதில் உள்ள மகாவிஜயதன ஆகர்ஷன மூலிகையின் மகிமை பணம். பதவி ஆகியவற்றை ஈர்த்துத்தர வல்லது, இதை எந்த வயதினரும் எந்த பாலினரும். எந்த மதத்தினரும் உபயோகப்படுத்தலாம்,

இந்த அஞ்சனம் செய்ய கரும்துளசிவேர். நீர். சாம்பிராணி இலை. வெண் தாமரைக்கொடி. சந்தன இலை. அதிமதுரவேர் ஆகிய ஐந்து பொருட்களும் சமபங்காக எடுத்துக்கொண்டு

மந்திரம் :

“ஹரீ - ஓம் - மகா - தேவீ – மகா லட்சுமி - சர்வ - மங்கள - பிரதயினி - மம - பிரயத்தன -காரிய சித்தி -”

என்ற மந்திரத்தை 1008 தடவை பௌர்ணமி தினம் சந்திரோதய சமயம் கிழக்கு முகமாக உட்கார்ந்து ஜபம் செய்து பின் மேற்படி குறிப்பிட்ட ஐந்து பொருட்களையும் புது மண்சட்டியில் அத்திமர சமித்தால் நெருப்பு ஏற்படுத்தி ஒவ்வொரு பொருளாக போட்டு கரியாக்கி நன்றாக தூள் செய்து தனியாக எடுத்துக் கொண்டு பசு நெய்யில் கலந்து வெண்ணைபோல் உருட்டிக்கொள்ள வேண்டும்,

பின்பு சாம்பிராணி எண்ணெய். சந்தன எண்ணெய். அசல் வேப்பம் எண்ணெய். கடுகு எண்ணெய். வசம்பு எண்ணெய் ஆகிய ஐந்து எண்ணெய்களை சமமாக கலந்து முன்சொன்ன மூலிகை சாம்பல் உருண்டையை கொட்டி கலந்து வெள்ளி அல்லது பீங்கான் கிண்ணியில் அடைத்து வைத்துக்கொள்ள வேண்டும்,

பின்னர்

“ஹரி - ஓம் - மாக - தேவீ -மகா - லட்சுமி - ஓம் - ஸ்ரீம் - க்லீம் - ஹரீம் - ஸ்ரீம் - ஆகச்சா -ஆகச்சா -மம - மந்திரே - திருஷ்டத் - திருஷ்டத் - ஸ்வாஹா”

என்ற மூல மந்திரத்தை நாற்பத்தெட்டு தினங்கள் சந்தியாவந்தன நேரத்தில் வடக்கு முகமாக உட்கார்ந்து தினசரி 2016 தடவைகள் ஜபம் செய்து அஞ்சனத்தில் ஊதிவிடவும் இதேபோல் நாற்பத்தெட்டு நாள் செய்து நாற்பத்தொன்பதாம் நாள் ஐந்து அம்மன் கோவில் சென்று அம்மனை தரிசனம் செய்து பின்னர் அஞ்சனத்தை உபயோகப்படுத்திக் கொள்ளலாம்,

இதனால் சகல் செல்வ வளங்களும் மகா லட்சுமியின் பூரண பலனும் கிடைக்கும்

## சரஸ்வதி அஞ்சனம்

சரஸ்வதி அஞ்சனம் என்று ஒன்று உள்ளது, இதை மை போலவும் உபயோகம் செய்யலாம், சாம்பிராணி போல் தூபம் போட்டு வாசனையும் பிடிக்கலாம், இதனால் ஞாபகமறதி. சபைக்கூச்சம். திக்குவாய். படிப்பில் ஊக்கமின்மை. தொழில் சிறத்தையின்மை. குரல் வியாதிகள் விலகும்,

இது செய்ய தேவையான பொருட்கள்

கருந்துளசி வேர். ஜாண்டு காய்கள். நெறிஞ்சி முள். வாலாட்டி மர இலை. வேப்பம்பழம். யானை வணங்கி வேர். பலாவேர். தொட்டாசுருங்கி வேர். மாதுரை இலை. கருவேம்புச்சாறு. சீந்தல் கொடி. நன்னாரித்தூள். விஷ்ணுகிரந்தி இலை. சிவகிரந்தி இலை. பிரம்ம பத்திரம். வாதநாராயணப்பட்டை. மருதம்பட்டை. சீகத்துக்காய்தூள். இலவஞ்சிக்கொடி. கடலைச் செடியின் வேர் ஆகிய இருபது மூலிகைகளையும் நிழலில் தனித்தனியாக உலர்த்தி சமஎடை எடுத்து இடித்து நன்றாக தூள் செய்து விபூதி பக்குவமாக்கி அத்துடன் இருநூறு கிராம் கற்பூரத்தை பொடி செய்து பசங்கன்று குட்டியின் சாணத்தில் பிசைந்து அதனுள் மேற்படி மூலிகைப்பொருட்களை கொழுக்கட்டையில் பூரணம் வைப்பது போல் வைத்து உருட்டி ஒன்பது நாட்கள் வெயிலில் காயவைத்து வைத்துக்கொள்ள வேண்டும்,

10-ஆம் நாள் சரஸ்வதியை தியானித்து காயவைத்து சாணி உருண்டைகளை எடுத்து ஒரு அகலமான பானை ஓட்டில் வைத்து கற்பூரம் சந்தனக்குச்சிகளைக் கொண்டு நெருப்பிலிட்டு அசல் விபூதியைப்போல் ஆக்கிக் கொள்ளவேண்டும், இந்த விபூதியை 1/4 கிலோ சாம்பிராணி எண்ணெயில் கலந்து கிளறி அத்துடன் ஜவ்வாது. கஸ்தூரி. குங்குமப்பூ, சந்தன எண்ணெய் இவைகளை விட்டு பிசைந்து அஞ்சனமாக்கிக் கொள்ள வேண்டும், பின்னர்.

"ஹரி - ஓம் - ஐம் - வேதகாரோ -மந்த்ரகாரோ - வித்வாந் - ஸமர - மர்தந - மஹா - மோக - நிவாஸீ -ச மஹாகோரோ - வசீகர -"

என்ற மூல மந்திரத்தை தினசரி 82 வீதம் 82 நாளைக்கு சொல்லி அஞ்சனத்தில் ஊதிவிட வேண்டும், அதன்பிறகு புருவங்களுக்கு மத்தியில் இந்த அஞ்சனத்தை பொட்டாக இட்டுக் கொண்டாலே நினைவு ஆற்றல் பெருகும், சரஸ்வதி தேவியின் பரிபூரண கிருபையால் அபாரமான அறிவு ஒளி வீசும்,

12 ராசிக்கு உரிய மந்திரங்கள்

மேஷ ராசி:

மேஷ ராசியில் பிறந்தவர்கள் கீழ்க்கண்ட சுலோகத்தை 27 முறை கூறி முருகனுக்கு சகஸ்ர நாம அர்ச்சனை செய்தால் துன்பங்கள் நீங்கும் !
ஷண்முகம் பார்வதீ புத்ரம்

க்ரௌஞ்ச ஸைவ விமர்த்தனம்
தேவஸேனாபதிம் தேவம் ஸ்கந்தம்
வந்தே ஸிவாத் மஜம்

ரிஷப ராசி:

ரிஷப ராசியில் பிறந்தவர்கள் மகாலட்சுமி பூஜை செய்தும், வெள்ளிக்கிழமை விரதம் இருந்து கீழ்க் கண்ட சுலோகத்தைத் தினசரி 11முறை

கூறி வந்தால் சகல செல்வங்களும் கிடைக்கும்.
ஶ்ரீ லக்ஷிமீம் கமல தாரிண்யை
ஸிம்ஹ வாஹின்யை ஸ்வாஹ
மிதுன ராசி:

மிதுன ராசியில் பிறந்தவர்கள் விஷ்ணுவுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து, கீழ்க்கண்ட மந்திரத்தை 54முறை தினசரி கூறி வந்தால் நல்ல பலன் கிடைக்கும்.

ஓம் க்லீம் ஶ்ரீ கிருஷ்ணாய நம:

கடக ராசி:

கடக ராசியில் பிறந்தவர்கள் பவுர்ணமி தோறும் அம்பாளுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து விரதம் இருந்து, கீழ்க்கண்ட மந்திரத்தை 21முறை பாராயணம் செய்து வந்தால் நல்ல பலன் ஏற்படும்.

ஓம் ஐம் க்லீம் ஸோமாய நம:

சிம்ம ராசி:

சிம்ம ராசியில் பிறந்தவர்கள் மாதம் ஒரு ஞாயிற்றுக்கிழமை சூரியனுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து, கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்து வந்தால் நல்ல பலன் ஏற்படும்.

ஓம்-ஹ்ரீம்-ஶ்ரீம்-சூர்யாய நம:

கன்னி ராசி:

கன்னி ராசியில் பிறந்தவர்கள் மாதம் ஒரு புதன்கிழமை விஷ்ணுவுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்தால் நல்ல பலன் ஏற்படும்.

ஓம்-ஐம்-ஶ்ரீம்-ஶ்ரீம்-புதாய நம:

துலா ராசி:
துலா ராசியில் பிறந்தவர்கள் மாதம் ஒரு முறை பவுர்ணமி நாள் அன்று விரதம் இருந்து சத்யநாராயண பூஜை செய்து, கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்து வந்தால் நல்ல பலன் ஏற்படும்

ஓம்-ஹ்ரீம்-ஶ்ரீம்-சுக்ராய நம:

விருச்சிக ராசி:

விருச்சிக ராசியில் பிறந்தவர்கள் செவ்வாய்க்கிழமை விரதம் இருந்து துர்க்கையை பூஜித்து வணங்கி கீழ்க்கண்ட சுலோகத்தை பாராயணம் செய்து வந்தால் நல்ல பலன் ஏற்படும்.

தரணி கர்ப்ப ஸம்பூதம்
வித்யுத் காந்தி ஸமப்ரதம்
குமாரம் சக்தி ஹஸ்தம்ச
மங்களம் ப்ரணமாம்யஹம்.

தனுசு ராசி:
தனுசு ராசியில் பிறந்தவர்கள் வியாழக்கிழமை தட்சிணாமூர்த்தி கடவுளுக்கு அர்ச்சனை செய்து கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்து வந்தால் சகல நன்மைகள் உண்டாகும்.

ஓம் ஐம் க்லீம் பிரஹஸ்பதயே நம:

மகர ராசி
: மகர ராசியில் பிறந்தவர்கள் சனிக்கிழமை விரதம் இருந்து சனீஸ்வர பகவானுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து, கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்து வந்தால் சகல காரியங்களும் சித்தி அடையும்.

ஓம் ஐம் ஹ்ரீம் ஶ்ரீம் சனீஸ்வராய நம:

கும்ப ராசி:

கும்ப ராசியில் பிறந்தவர்கள் ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை ஆஞ்சநேயருக்கு அர்ச்சனை செய்து கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்து வந்தால் நல்ல பலன்கள் உண்டாகும்.

ஓம் ஸ்ரீம் ஸ்ரீ உபேந்திராய அச்சுதாய நமோநம:

மீன ராசி:
மீன ராசியில் பிறந்தவர்கள் ஒவ்வொரு வியாழக்கிழமை சிவபெருமானுக்கு சகஸ்ரநாம அர்ச்சனை செய்து, கீழ்க்கண்ட மந்திரத்தை பாராயணம் செய்து வந்தால் துன்பங்கள் நீங்கும்.
ஓம் க்லீம் ஸ்ரீ உத்ராய உத்தாரணே நம

ஏவல் பில்லி சூனியம் செய்வினை கோளாறுகள் அகல!

சிங்கமுகம், மனித உடல், பார்ப்பதற்கு பயம் காட்டும் கோரை பற்கள் கொண்டவர்தான் நரசிம்மர். அவதார நாயகன் விஷ்ணு பகவான் எடுத்த அவதாரங்களில் இவருக்கென்று தனி சிறப்பு உண்டு.

அப்படி என்ன சிறப்பு?

சொல்றேன். தெய்வ தரிசனங்கள் எப்போது கிடைக்கும். தவம் செய்த பிறகும், பிராத்தனைகள் செய்த பிறகும் கிடைத்ததாய் புராணங்கள் சொல்கிறது. அதாவது மேலான பக்தி கொண்டவர்களுக்கு மட்டும். அதனால் தான் ரிஷிகள், ஞானிகள், முனிவர்கள் அந்த பாக்கியத்தை பெற்றார்கள்.ஆனால் எந்த வேண்டுகோளும் இல்லாமல், வேண்டுதலும் இல்லாமல் ஒரு சிறுவனுக்காக வந்த அவதாரம் தான் நரசிம்மம்.ஹிரண்ய கசிபுவின் கோவமான கேள்விக்கு பதில் சொன்ன பிரகலாதன், நான் வணங்கும் ஹரி... தூணிலும் இருப்பார் , துரும்பிலும் இருப்பார் என்று நம்பிக்கையோடு சொன்னான். அந்த நம்பிக்கையை மெய்யாக்க தூணில் இருந்து வெளி வந்தவர்தான் நரசிம்மர்.

பைரவர், சக்கரத்தாழ்வார் போன்று நரசிம்மரும் பக்தர்க்களுக்கு பாதுகாவலானாக இருக்கிறார். இவரை வணங்க எந்த தயக்கமும் தேவையில்லை. நம்பிக்கை ஒன்றே பிரதானம். பார்ப்பவர்களுக்கு பயம் காட்டும் உருவமாக இருந்தாலும் தன்னை நாடியவர்களுக்காக ஓடிவருபவர்தான் நரசிம்மர். சிங்கம் குரூர குணம் கொண்ட கொடூர விலங்குதான். பசி என்று வந்தால் எந்த விலங்காக இருந்தாலும் கொன்று தின்னும் குணம் கொண்டதுதான். ஆனால் அந்த கொடிய சிங்கத்தினுள்ளும் ஒரு மென்மையான மனம் உண்டு. தான் ஈன்ற குட்டிகளிடம் கடுமை காட்டுவதில்லை. கொஞ்சி விளையாடும், துள்ளி ஓடி விளையாட்டு காட்டும். அதுபோல் தான் நரசிம்மரும். அரக்கர்களுக்கு, அநீதி இழைப்பவர்களுக்கு, நயவஞ்சக பேர்வழிகளுக்கு எமனாக இருக்கும் நரசிம்மர், தன்னை வணங்கும் பக்தர்களுக்கு இனியவர்.

சிவ ரூபங்களில் பைரவர் ஆலய பாதுகாப்பிற்கு உரியவர். கோவில் நடை சாத்த பட்ட பிறகு, இவரிடம் கோவில் சாவியை வைத்து பிராத்தனை செய்து விட்டு செல்வது ஆதிகால பழக்கம். ஆனால் இன்று பைரவர் வழிப்பாடு குறைந்து விட்டது. காரணம் கபாலிகா வழிபாடு என்று சொல்லி கொண்டு நரமாமிச படையல் போடும் அகோரிகளால் இந்த வழிபாடு குறைந்து விட்டது. அவர்கள் பைரவரை தான் வணங்குகிறார்கள். பைரவருக்குத்தான் மாமிச படையல் செய்கிறார்கள்.

இந்த பைரவர் ஆலய பாதுகாப்பிற்கு உரியவர் என்றால், ஆலயத்திற்கு கும்பாபிஷேகம் செய்யும் போது, மூலவிக்கிரகங்களை எடுத்து பின் மருந்திட்டு பிரதிஷ்ட்டை செய்யும் போது நரசிம்ம மந்திரம் சொல்லித்தான் செய்வார்கள்.
சரி.. நரசிம்மரை வழிபட்டால் கிடைக்கும் நன்மை என்ன?
எந்த நிலையிலும் பில்லி, சூனியம், செய்வினை கோளாறுகள் உங்களை தீண்டாது. உங்கள் ஜாதகத்தில் ராகு திசையோ, கேது திசையோ நடந்தால் இது போன்ற மாந்திரிக கோளாறுகள் பாதிக்க இடம் உண்டு. அதனால் ராகு கேது திசைகள் நடந்தால் நரசிம்ம வழிபாடு செய்யலாம்.

உங்கள் வீட்டில் துஷ்ட்ட சத்திகள் இருந்தாலோ, உங்கள் வீட்டில் துர்மரணங்கள் நடத்து [ மருந்து குடித்தல், தூக்கு மாட்டி கொள்லுதல், கொலை போன்ற சம்பவங்கள் ] இருந்தாலோ அதனால் எந்த பாதிப்பும் வராது.
எதிரிகள், எதிர்ப்புகள், பொய்வழக்கு தொல்லைகள், புனைகதைகளால் பாதிக்கப்படும் சூழல் இவற்றை முற்றிலும் விலக்கும்.

ஜய ஜய நரஸிம்ஹாய ஸர்வக்ஞாய மஹாதே ஜோபல வீர்யாய சுவாஹா
ஐம் கிலீம் ஸ்ரீம் ஹூம்பட்

நரசிம்ம வழிபாடு செய்து நலம் பெற வாழ்த்துகிறோம்.

செய்வினையை முறிக்க எளிய வழிகள்

செய்வினை காரணமாக தொழில் நஷ்டம், வறுமை, பிள்ளைகள் கல்வி மந்தம், கடன் தொல்லை போன்றவை ஏற்படலாம். செய்வினை பாதிப்புக்கு குல தெய்வக் குற்றமும் காரணமாக இருக்கலாம். செல்வம் வரும் போது குல தெய்வத்தை மறந்து விடுவதே இதற்குக் காரணம் எனவே குடும்பத்தோடு குல தெய்வத்தை மூன்று பவுர்ணமிக்கு நேரில் சென்று வழிபட்டு வந்தால் ஒருவர் செய்த செய்வினை உங்களை பாதிக்காது.

ஒரு சனிக்கிழமையில் உங்கள் பகுதியில் அமைந்துள்ள சிவன் கோவிலுக்குச் சென்று அங்குள்ள நவகிரகங்களுக்கு தேங்காய்-9, நாட்டு வாழைப்பழகம்-18, கொட்டைப்பாக்கு-18, வெற்றிலை -18, கதம்பப்பூ- ஒன்பது முழம். பூஜைப் பொருட்களைக் கொண்டு வழிபாடு செய்தால், உங்களுக்குக் கெடுதல் செய்ய வைக்கப்பட்ட செய்வினை நீங்கும்.

செய்வினை தோஷத்தை விரட்டும் மற்றொரு பரிகாரம் வருமாறு:-

முதலில் குலதெய்வத்துக்குக் காணிக்கை எடுத்து வைக்க வேண்டும்.27 எலுமிச்சைப் பழம் எடுத்து, அதனைச் சாறுபிழிந்து ஒரு பாத்திரத்தில் எடுக்க வேண்டும். (சாறோடு தேவையான அளவு தண்ணீர் கலந்து வைத்துக் கொள்ளலாம்) பிழியப்பட்ட சாறை, உங்கள் வீட்டைச் சுற்றியும், வியாபார இடத்தைச் சுற்றியும் வெளிப்புறமாக ஊற்றுங்கள் சாறு பிழியப்பட்ட எலுமிச்சைத் தோல்களை உங்கள் வீட்டு முன்பு வைத்து, அதனோடு 27 அரசங்குச்சிகளைச் சேர்த்து எரிக்க வேண்டும்.

அது சாம்பலானபின், அந்த சாம்பலை உங்கள் வியாபார ஸ்தலம், உங்கள் வீடு முதலிய இடங்களில் தூவி விடுங்கள். செய்வினை பறதோடிவிடும். யோக நரசிம்மரின் படத்தை வீட்டில் வைத்து தினமும் காலையில் நீராடிய பின்பு 12 தடவை வலம் வந்து வணங்கி வாருங்கள் செய்வினை தோஷம் இருந்தால் யோக நரசிம்மரின் சக்தியால் அது முறிந்து விடும்.

கிரக கோளாறுகளை நீக்க எளிய குளியல் பரிகாரங்கள்

நடக்கும் திசை அறிந்து அதற்கேற்ப அந்த கிரகங்களுக்குரிய பொருட்களால் குளித்து வர, அந்த கிரகங்களால் உண்டாகும் கெடு பலன்களை குறைத்தும், நற் பலன்கள் பெற்றும் வாழலாம்.மேலும்,ஜாதகத்தில் தற்சமயம் நமக்கு பாதகம் செய்யும் கிரகங்கள் எது என அறிந்து அதற்கேற்பவும் தினசரி குளியல் முறை செய்து வர நிச்சயம் நற் பலன்கள் பெற்று வாழலாம்.

சூரியன் : கச கசாவை பொடி

செய்து நீரில் கலந்தும் அல்லது, குங்குமப்பூ அல்லது ஏதேனும் சிகப்பு மலர்கள் நீரில் போட்டு குளித்து வரலாம். சிறிதளவு போதும். இவற்றை போட்டு நான்கைந்து குவளைகள் நீரில் குளித்து விட்டு, பின்பு வழக்கம் போல் குளித்து வரலாம்.

சந்திரன் : தயிரை

முதலில் உடல் முழுதும் தேய்து விட்டு சிறிது ஊறி பின்பு குளிக்கவும்.

செவ்வாய் : வில்வ கொட்டை

பொடியை சிறிதளவு நீரில் சேர்த்து குளித்து வரலாம். செவ்வாய்தோஷத்தால் திருமண வாழ்வில் பிரச்சனைகளை சந்திப்பவர்கள், மற்றும் திருமண தடை போன்றவற்றிற்கு இது சிறந்த பரிகாரம்.

புதன் : மஞ்சள்கடுகுடன்

சிறிது தேன் கலந்து, கங்கை நீர் அல்லது கடல் நீர் சிறிது சேர்க்கப்பட்ட நீரில் குளித்து வரலாம்.

வியாழன் : கருப்பு ஏலக்காய்

போட்டு கொதிக்க வைத்த நீரை சிறிதளவு குளிக்கும் நீரில் ஊற்றி குளித்து வரவும்.

சுக்கிரன் : பச்சை ஏலக்காய்

போட்டு கொதிக்க வைத்த நீரை சிறிதளவு குளிக்கும் நீரில் ஊற்றி குளித்து வரவும்.

சனி : கருப்பு எள்

சிறிதளவு போட்டு கொதிக்க வைத்த நீரை சிறிதளவு குளிக்கும் நீரில் ஊற்றி குளித்து வரவும்.

ராகு : மகிஷாக்ஷி

[நாட்டு மருந்து கடைகளில் கிடைக்கும் ] சிறிதளவு போட்டு கொதிக்க வைத்த நீரை சிறிதளவு குளிக்கும் நீரில் ஊற்றி குளித்து வரவும்.

கேது : அருகம்புல்

சிறிதளவு போட்டு கொதிக்க வைத்த நீரை சிறிதளவு குளிக்கும் நீரில் ஊற்றி குளித்து வரவும்.

வாஸ்து குறை நீங்க கோமதி சக்கரம்

கோமதி சக்கரம்

கோமதி சக்கரம் கோமதி நதியில் கிடைக்கும் ஒரு கல் எனலாம். தற்போது மோதிரமாகவும், கழுத்தில் அணியும் செயின் வடிவிலும் கிடைக்கிறது. விலை குறைந்த ஆனால் லட்சுமி அம்சமுள்ள நோய்கள் தீர்க்கவல்ல சிறிய சங்கு போன்ற கல். தொழில் முன்னேற்றம், கண் திருஷ்டி, பில்லி,சூனியம், வியாபார விருத்தி போன்றவற்றிற்கும் மிக சிறந்த விலை குறைந்த தீர்வே இந்த கோமதி சக்கரம். வடக்கில் இது மிக பிரபலம். வாங்கி பயன் அடையுங்கள்.

வியாபாரத்திற்க்கு ஏழு சக்கரங்களை வைத்து பூஜிக்க செல்வம் பெருகும்.

இரண்டு சக்கரங்களை துணியில் கட்டி வாசலில் தொங்க விட அனைத்து திருஷ்டி மற்றும் தீமைகள் விலகும்.

வாஸ்து தோஷம் விலக 11 சக்கரங்களை வீட்டில் வைக்கவோ அல்லது புதைத்து வைக்கவோ செய்யின் வாஸ்து தோஷம் விலகும்.

ஜாதகத்தில் சர்ப்பஅல்லது நாக தோஷமுள்ளவர்களுக்கும் இது பரிஹாரமாக விளங்குகிறது.

பிரபல ஹிந்தி நடிகர் அமிதாப்பச்சன் உடல் நல குறைவால் பாதிக்கப்பட்ட போது இதை செயினாக அணிந்து நலம் பெற்றாராம். தற்போதும் அணிந்திருப்பதாக தகவல்.

வாஸ்த்து குறை நீங்க...

மிக அபூர்வமாக கிடைக்கும் வெள்ளை கோமதி சக்கரங்கள், பதினொன்று கொண்ட ஒரு செட்டினை தலை வாசலின் உள் பக்கம் அல்லது பூஜை அறையில் சிகப்பு துணியில் வைக்கவும்.

பஞ்சமுககாட்டேரி வசியம்

நவமி நட்சத்திரம் வரும் செவ்வாய் கிளமய் பூஜய் செய்து சக்தியை தியாணித்து நீர்மேல் நெருப்பு செடிக்கு காப்பு கட்டி ஆணி வேர் அறாமல் பிடுங்கி மஞ்சள் குங்குமம் இட்டு பூஜையில் வைத்து ஓர் செம்பு தகட்டில் ஓம் என எளுதி வேரை அதனுள் இட்டு சுறுட்டி வெள்ளி தாயத்தி அடைத்து சாம்பிராணி தூபம் காட்டி மூல மந்திரம் 1008 உரு கொடுக்க பஞ்சமுக காட்டேரி வசியமாகும் .நாம் இட்ட கட்டளை படி செய்யும்

மூல மந்திரம்

ஓம் ரீம் வசி வசி பஞ்சமுககாட்டேரி வசி வசி ஸ்வாகா

சக்தி வசிய மந்திரம்

பூச நட்சதிரம் வரும் வெள்ளிகிழமை தினத்தில் விஸ்னுகிரந்தி செடிக்கு காப்பு கட்டி பொங்கலிட்டு பூஜை செய்து வேர் அறாமல் பிடுங்கி குளிசத்தில் அடைத்து வெள்ளை புஸ்பத்தினால் அலங்காரம் செய்து மூலமந்திரம் 1008 உரு கொடுத்து தாயத்து கட்டிகொள்ளலாம் பலன் ஏவல் பில்லி சூனியம் பேய் பிசாசு பூதம் எல்லாம் விலகும்.

மூல மந்திரம்

ஓம் இம் கம் ரம் ரங்சிங் ஆயி டாகினி மாகினி விஷ்ணு சகோதரி சர்வாணிதேவி பராசக்தி நமசி ஸ்வாஹா.

வீட்டில் லட்சுமி கடாட்சம் பெருக

பணமும் செல்வமும் பெருகி ஓட யாருக்கு தான் ஆசை இருக்காது? சொல்லப்போனால், நம் அனைவருக்கும் அந்த ஆசை இருக்கிறது. நாம் வாழ்வதற்கு பணம் தேவைப்படுவதால், அதனை சம்பாதிப்பதற்காக அன்றாடம் அயராது வேலை பார்க்கிறோம். பணம் சம்பாதிப்பது குதிரை கொம்பென்றால், சம்பாதித்த பணத்தை கட்டிக் காப்பது அதை விட கடினமான ஒன்றாகும். லட்சுமி தேவியை சந்தோஷமாக வைத்துக் கொண்டால், உங்கள் வீடு லட்சுமி கடாட்சம் நிறைந்திருக்கும் என பெருவாரியான இந்துக்கள் நம்புகின்றனர்.

இதனால் உங்களை வந்தடையும் செல்வமும், பொருட்களும் என்றென்றும் உங்களிடம் தங்கியிருக்கும் என்றும் நம்பப்படுகிறது. இந்துக்களின் சம்பிரதாயங்களுக்கு பின்னால் ஒளிந்திருக்கும் அற்புதமான விஞ்ஞான காரணங்கள்! லட்சுமி தேவி என்பவர் பணம் மற்றும் செல்வத்திற்கான கடவுள் என்று நம்பப்படுகிறது. லட்சுமி தேவி குடி கொண்டிருக்கும் வீட்டில் பொன்னும் பொருளும் அருளப்பட்டு, நிறைந்திருக்கும் என நம்பப்படுகிறது. ஆனால் லட்சுமி தேவியோ உறுதியற்றவர்; ஆம் தான் இருக்கும் வீட்டை விட வேறு ஒரு வீட்டில் அதிக பக்தியை கண்டால் அங்கே குடி புகுந்து விடுவார்.

அதனால் உங்கள் வீடு லட்சுமி கடாட்சத்துடன் நிறைந்திருக்க லட்சுமி தேவியை ஈர்க்கும் அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும். லட்சுமி தேவிக்கு பிடித்தமான பொருட்கள் என சிலவற்றை பற்றி இந்து சமயத்திரு நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவைகளை வீட்டில் வைத்தால் அதனால் லட்சுமி தேவி ஈர்க்கப்படுவார்.

லட்சுமி தேவியை ஈர்க்கின்ற பொருட்கள் நம் வீட்டில் இருந்தால், அவர் நம் வீட்டில் தங்குவார் என நம்பப்படுகிறது. இதனால் வீட்டில் போதிய பொன்னும், பொருளும் பெருகும்.

வலம்புரி சங்கு
முத்து சங்கு
கோமதி சக்கரம்
ராஜவசிய கல்
சோழி
மகாலக்ஸ்மி யந்திரம்
துளசிமணி மாலை

செல்வம் பெருக சில குறிப்புகள் ...

1. யாரிடம் இருந்து பணம் வாங்கினாலும் வலது கையால் கொடுக்க சொல்லி வலது கையால் வாங்கிக்கொள்ள வேண்டும்.நீங்கள் பிறருக்குக் கொடுத்தாலும் அப்படியே செய்யவும்.

2. பணம் எண்ணும்போதும், புத்தகம் அல்லது தொழில் சம்பந்தமான பைல், புத்தகம், நோட்டுகளைப் புரட்டும் போதும் எச்சில் தொட்டு என்னவோ புரட்டவோ கூடாது. குறிப்பாக ஆன்மீக நூல்களை படிக்கும் பொழுது இதைச் செய்யவே கூடாது.இது தரித்திரத்தை உண்டாக்கும்.

3.தொழில் சார்ந்த கணக்குப் புத்தகங்களில் (EX.CASH BOOK, EXPENSES BOOK) எழுதத் துவங்கும் முன் நோட்டு / புத்தகத்தின் முதல் பக்கத்தின் மேல் அஷ்டகந்தம் கொண்டு ஸ்ரீ அல்லது சுபலாபம் என்று எழுதுங்கள் .

4. வெளியில் கிளம்பும் போது பர்ஸ் அல்லது சட்டைப்பையில் பணம் இல்லாமல் செல்லக்கூடாது.ஏன் என்றால் பணம் தான் பணத்தை ஈர்க்கும்.
5.கடை அல்லது அலுவலகத்தின் பணப்பெட்டி வைத்திருக்கும் அறைச் சுவர் மஞ்சள் அல்லது மஞ்சள் ஷேடு நிறத்தில் இருப்பது பணவரவை அதிகப் படுத்தும்.கருப்பு, சிகப்பு, நீல நிறங்கள் பணவரவைக் குறைக்கும்.

6.பணப்பெட்டியில் பணம் வைக்கும் பொழுதும், வங்கியில் பணம் செலுத்தும் பொழுதும் ஸ்ரீ மகாலட்சுமியை மனதார வணங்குவது பணவரவை அதிகரிக்கும்.

7.பணப்பெட்டி அழுக்கு அடையாமல் சுத்தமாகப் பராமரிக்கப்படவேண்டும்.

8.கடை அல்லது அலுவலகத்திற்கு "ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஸ்ரீம் லக்ஷ்மி ஆகச்ச ஆகச்ச மம மந்திரே திஷ்ட்ட திஷ்ட்ட ஸ்வாஹா ||" என்ற மந்திரம் ஜெபித்தபடியே தினம் ஊதுவத்தி அல்லது சாம்பிராணி தூபம் காண்பிக்க வேண்டும்.இல்லை என்றால் பணப்பெட்டிக்காவது தினமும் ஊதுவத்தி அல்லது சாம்பிராணி தூபம் காண்பிக்க வேண்டும்.

9.வெள்ளிக்கிழமை அன்று மாலை 5:30 முதல் 7:00 மணிக்குள் ஒரு செம்பில் கொஞ்சம் தண்ணீர் வைத்து சிறிது மஞ்சள் பொடி போட்டு மேற்கு நோக்கி அமர்ந்து "ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் ஸ்ரீம் லக்ஷ்மி ஆகச்ச ஆகச்ச மம மந்திரே திஷ்ட்ட திஷ்ட்ட ஸ்வாஹா ||" என்ற மந்திரம் ஜெபித்து அந்த நீரை கல்லா, பணப்பெட்டி, கடை அல்லது அலுவலக முகப்பு இவற்றில் தெளிக்கவும்.

கண் திருஷ்டி உள்ளதை எப்படி உணருவது?

நமக்கோ அல்லது நம் குடும்பத்தில் இருப்பவர்களுக்கோ திருஷ்டி தோஷங்கள் ஏற்பட்டுள்ளதா என்பதை பல நிகழ்ச்சிகள் மூலமும், சில அறிகுறிகள் மூலமும் தெரிந்து கொள்ளலாம். திருஷ்டி, தோஷத்தால் பாதிக்கப்பட்டவரின் வீட்டில் தொடர்ந்து ஏதாவது பிரச்னைகள், தடைகள், சோகம், பிரிவு, நஷ்டம், கைப்பொருள் இழப்பு என வரிசையாக ஒன்றன்பின் ஒன்றாக வந்துகொண்டே இருக்கும். ஒரு சிக்கல் தீருவதற்குள் அடுத்த பிரச்னை காத்துக் கொண்டு இருக்கும். பெண்களுக்கு

உடல் சோர்வு, மனச்சோர்வு, இல்லாத ஒன்றை கற்பனை செய்து பயப்படுதல், கணவன்-மனைவி இடையே காரணம் இல்லாத பிரச்னைகள், சந்தேகங்கள், உறவினர்களுடன் பகை, சுபநிகழ்ச்சிகளில் தடை, ஒருவர் மாற்றி ஒருவருக்கு மருத்துவச் செலவுகள் ஏற்படுதல், சாப்பிட பிடிக்காமல் போவது, எல்லோரிடமும் எரிந்து விழுவது, கெட்ட கனவுகள், தூக்கமின்மை, அடிக்கடி கொட்டாவி விடுவது, எதிர்மறை எண்ணங்கள் தோன்றுவது போன்றவை உண்டாகும். இதன்மூலம் கண் திருஷ்டி ஏற்பட்டுள்ளது என்பதை உணர்ந்துகொள்ளலாம்

ஆரத்தி, திலகம்: விசேஷ வைபவங்கள், சுபநிகழ்வுகளிலும், மணமக்கள் வீட்டினுள் வருதல், தாயும் குழந்தையும் முதல் முறை வருதல் உள்ளிட்ட நிகழ்ச்சிகளிலும் ஆரத்தி எடுத்து திலகம் இடுவது சங்க காலம் தொட்டே இருந்து வருகிறது. ஆரத்தி எடுக்கும்போது பயன்படுத்தப்படும் குங்குமம் கலந்த நீர், வெற்றிலை மீது எரியும் கற்பூரம் ஆகியவற்றுக்கு தீய சக்திகளை விரட்டும் ஆற்றல் உண்டு.

வாழை மரம்: விசேஷங்களின்போது குலை தள்ளி, பூவுடன் இருக்கும் வாழைமரத்தை வாசலில் கட்டுவார்கள். இதற்கு காரணம் வாழைக்கு திருஷ்டி தோஷங்களை ஈர்த்துக் கொள்ளும் குணம் உண்டு என்பதுதான்.

வீட்டிற்குள் வைக்கும் பொருட்கள்: வீட்டுக்கு, அலுவலகத்துக்கு வருபவர்களின் பார்வையை, கெட்ட எண்ணங்களை, குரூர சிந்தனைகளை திசை திருப்புவதற்கு பெரிய முகம் பார்க்கும் கண்ணாடியை வரவேற்பறையில் அல்லது வீட்டின் உள்வாசலில் வைக்கலாம். மீன் தொட்டி வைத்து அதில் கருப்பு, சிகப்பு மீன்களை வளர்க்கலாம். கண் திருஷ்டி கணபதி படம் வைக்கலாம். மிக மெல்லிய வாத்ய இசை, மந்திரங்களை ஒலிக்க விடலாம். வாசலில் கற்றாழை, சப்பாத்தி கள்ளி, முள் அதிகம் உள்ள செடிகள், மஞ்சள் ரோஜா செடி ஆகியவற்றை வளர்க்கலாம். ஆகாச கருடன் என்று ஒரு வகை கிழங்கு உள்ளது. அதை வாங்கி மஞ்சள், சந்தனம், குங்குமம் வைத்து கருப்பு கம்பளி கயிற்றில் கட்டி வீட்டின் வாசலில் தொங்க விடலாம்.

உப்புக்குளியல்: வாரம் ஒருமுறை கல் உப்பை குளிக்கும் தண்ணீரில் கலந்து குளித்து வர திருஷ்டியால் ஏற்படும் உடல் அசதி, சோம்பல் நீங்கும். குறிப்பாக அவரவர் பிறந்த கிழமை அல்லது செவ்வாய்க்கிழமையில் இவ்வாறு குளிக்கலாம்.

எலுமிச்சம்பழம்: வியாபாரத் தலங்களில் திருஷ்டி நீங்க எலுமிச்சம்பழத்தை அறுத்து ஒரு பகுதியில் குங்குமத்தை தடவியும், மற்றொரு பகுதியில் மஞ்சள் பொடியைத் தடவியும் வைக்கலாம். இதை ஒவ்வொரு செவ்வாய்க்கிழமை

செய்வது நலம் தரும். பழத்தை மாற்றும்போது முதலில் வைத்த பழத்தை மூன்று முறை கடையை சுற்றி தெருவில் வீசிவிடவும்.

கடல் நீர்: வளர்பிறையில் வரும் செவ்வாய், சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் கடற்கரைக்குச் சென்று கடல் நீரை எடுத்து வந்து அதில் மஞ்சள் பொடியை கலந்து கடை, அலுவலகம், வீடு ஆகியவற்றில் தெளிப்பது சிறந்த பரிகாரம்.

அமாவாசை, பவுர்ணமி, அஷ்டமி, நவமி போன்ற நாட்களில் காலை, மாலை இருவேளையும் சாம்பிராணி பொடியுடன், கருவேலம்பட்டை பொடி, வெண் கடுகுத்தூள் ஆகியவற்றை கலந்து வீடு, கடை அலுவலகத்தில் தூப, தீப, புகை காட்ட திருஷ்டியும், தீய சக்திகளும் வெளியேறும்.

ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாளை தரிசித்து குங்கும அர்ச்சனை செய்து அங்குள்ள கண்ணாடி மாளிகையில் தெரியும் உங்கள் உருவத்தை பார்க்கலாம்.

பணம் அதிகமாகக் கிடைக்க செல்வம் செழிக்க மந்திரம்

மந்திரம்

ஸ்மரம் யோநிம் லக்ஷ்மீம் த்ரிதயமித-மாதௌ தவ மநோ:
நிதாயைகே நித்யே நிரவதி-மஹாபோக-ரஸிகா:
பஜந்தி த்வாம் சிந்தாமணி-குண-நிபத்தாக்ஷ-வலயா:
ஸிவாக்நௌ ஜுஹ்வந்த: ஸுரபிக்ருத-தாராஹுதி-ஸதை:

மோக போக விழைவினார், உன் மூல வித்தை தன்னின் முன்னாக,
மாரன், யோனி, பொன், அணங்கு, அமைத்து நெய்யினால்
யோகம் ஆர் சிவத்தழற்குள், ஓமம் உற்று, விமலையே
தியாக மா மணிக் கொடு, அக்க வலயம் உள் செவிப்பரே.

பொருள்: ஹே தேவியே! உன் பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் முதலில் காம பீஜமான க்லீம், புவனேஸ்வரி பீஜமான ஹ்ரீம், லக்ஷ்மி பீஜமான ஸ்ரீம் ஆகிய மூன்று அக்ஷரங்களையும் சேர்த்து இடைவிடாமல் ஜபித்து அதன் மகிமையை உணர்ந்த சிலர், தொடர்ந்து ஜபம் செய்து, சக்தி முக்கோணத்திலுள்ள அக்னியில் [சிவாக்னி] காமதேனு தந்த நெய்யைப் போன்ற மனமகிழ்ச்சியைக் கொண்டு எண்ணற்ற அர்ப்பணங்களைச் செய்து ஆராதித்து வருகிறார்கள்.

ஜபமுறையும் பலனும்

45 நாட்கள் தினந்தோறும் காலையில், கிழக்கு முகமாக அமர்ந்து மேற்கண்ட ஸ்லோகத்தை 1000 தடவை ஜபித்து வந்தால் செல்வம் மேன்மேலும் வளரும். மற்றும் இந்த சுலோகத்தைப் பாராயணம் செய்யும் போது, தம் கையில் மூடி

வைத்துக் கொண்டு மந்திரம்,ஜபித்து வந்தால் அந்த பணத்தைப் போல் பத்துமடங்கு பணம் அதிகமாகக் கிடைக்கும்

காளி மஞ்சள் கருப்பு மஞ்சள்

கருப்பு மஞ்சள் நர்மதா நதிக்கரையில் மற்றும் மத்திய பிரதேசத்தில் கிடைக்கும் அற்புதமான தாந்த்ரீக மஞ்சள் மற்றும் மருத்துவ குணம் கொண்ட ஒன்று. கிடைப்பது கொஞ்சம் அரிது. இதை தாந்த்ரீக வழிமுறைகளில் பல விஷயங்களுக்கு உபயோகப்படுத்துவதுண்டு. மேலும், இதை காளியின் அம்சம் கொண்டதாக கூறுவது வழக்கம். மேலும் இதை காளி மற்றும் பைரவர் உபாசணைக்கும் பயன்படுத்தலாம்.

இதை வைத்திருப்போருக்கு செய்வினை, எதிர் மறை சக்திகளின் தீண்டல் அறவே இருக்காது. கோர்ட்டுகளில் வழக்குகளை சந்தித்து வருவோருக்கு மிக முக்கியமான பாதுகாவலாகவும் வெற்றியை தேடி தரும் ஒன்றாகவும் இது கருதப்படுகிறது. வீட்டில் சதா சண்டை சச்சரவு தம்பதிகளுக்குள் நிகழ்ந்து வந்தால், இருவரும் இதை முகத்தில் அரைத்து தேய்த்து வந்தால், சச்சரவுகள் தீரும்-அதாவது மிக முக்கியமாக இது ஜன வசியம் செய்யக்கூடியது ஆகும். முத்தாய்ப்பாக இதை மேலே கொடுக்கும் எதற்கும் அல்லாமல் பலர் இதை தன வசியத்திற்காகவே உபயோகப்படுத்துகின்றனர்.

பணத்தை வசீகரிக்கும் தன்மையை உடைய இதை வட மாநிலங்களில் தினமும் நெற்றியில் இட்டு செல்வர்-பண தேவைகளுக்கு செல்லும் பொழுது. மேலும் இதை ஆட்காட்டி விரலில் ஊசியால் சிறிது குத்தி குருதி எடுத்து அத்துடன் குழைத்து நெற்றியில் இட எப்பேர்ப்பட்ட வராத பணமும் வந்து சேரும் என்பதாகவும் கூறப்படுகிறது.

எம் அனுபவ ஆராய்ச்சியை பொருத்த வரை இது மிகுந்த நல்ல விஷயங்களை இதை அணிபவருக்கு அளித்து வருகிறது என்பதே உண்மை-மேலும் ராகு,குரு ஜாதகத்தில் அல்லது நடப்பு திசையில் அல்லது கோட்சாரத்தில் பலவீனமாக இருந்தால் இதை தினசரி நெற்றியில் இட்டு வர, மற்றும் தன்னுடன் வைத்து கொண்டு வெளியே செல்ல பலவீனங்கள் குறைந்து நன்மைகள் பெருகும் என்பது கண்கூடு .

பஞ்சகவ்யம் பெருமைகள்

பாலில் எடுக்கப்படுகின்ற தயிர் முதலிய ஒவ்வொன்றும் வெவ்வேறு சுவையுடையன. குணமுடையன இவற்றின் கலவை சிறந்த சத்துணவு . கோசலமும்[கோமியம்] , கோமலமும்[பசுஞ்சாணம்] மருத்துவக் குணமுடையன.

பஞ்சகவ்யம் - பஞ்ச என்றால் ஐந்து மற்றும் கவ்யம் என்றால் பசுவிடமிருந்து என பொருள்படும். பசுவிடம் இருந்து பெறப்படும் 5 மூலப்பொருட்கள் - 1)சாணம் 2) கோமியம் 3) பால் 4) நெய் 5) தயிர்
இவை ஐந்தையும் சரியான விதத்தில் கலந்து தயாரிக்கப்படுவதே பஞ்சகவ்யம். இது இந்து சமய இறை வழிபாட்டின்போது முக்கியபூசை பொருளாகவும், ஆயுர் வேத வைத்தியம், வேளாண்மை பயிர் பாதுகாப்பிலும் பயன்படுகிறது. பயிர்களுக்கு ஊறு விளைவிக்கும் பூச்சிகளைக் கட்டுப்படுத்தும். மேலும் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கும். பஞ்சகவ்யம் தயாரிக்கும் முறையைப் பயிற்றுவிப்பதும், விற்பனை செய்வதும் மெல்ல மெல்ல புகழடைந்து வருகிறது.

பஞ்ச கவ்யத்தால் அபிஷேகம் செய்கின்ற போது கிடைக்கின்ற பயன்கள் வருமாறு.

பசும்பால் :ஆரோக்கியம் ,ஆயுள் விருத்தி
பசுந்தயிர்:பாரம்பரிய விருத்தி
பசும்நெய்:மோட்சம்
கோசலம் :தீட்டு நீக்கம்
கோமலம்:கிருமி ஒழிப்பு

பொதுவாக பாவங்கள் குறைய புண்ணியங்கள் நிறையும்.கருவறைகளில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சிலைகள் எப்போதும் குளிர்ச்சியில் இருக்கின்றன .பெரும்பாலான கருவறைகளில் சூரிய ஒழி புகுந்து படிவதில்லை எனவே மிக குளிர்ச்சி,மிக்க இருட்டின் காரணமாககருவறைகள் , சிலைகள், இடுக்குகள்,பிளவுகள் முதலான இடங்களில் கிருமிகளும் , பாசிகளும், பூச்சிகளும் வளர்வதற்கு வாய்ப்புகள் அதிகம் ,அவற்றை அறவே அழிக்கின்ற ஆற்றல் பஞ்சகவ்யத்திற்கு அதிகமாக உண்டு.

புனிதம் என்ற ஒரே காரணத்திற்காகப் பஞ்சகவ்யம் ஒரு சிறந்த அபிஷேக பொருளாக மதிக்கபடுகிறது.

பல திறம்பட அருமையான பொருள்களால் சிலைகளுக்கு அபிஷேகம் செய்த பிறகு அந்த சிலைகளின் இயற்கையான நுண்ணிய ஆற்றல் சற்று கூடுதலாகின்றது என்பது அறிவியல் அடிப்படையில் நிருபிக்கப்பட்டுள்ளது.

பஞ்சகவ்யதால் அபிஷேகம் செய்த பிறகு அச்சிலைகளின் அற்புத அதிசய தெய்வீக ஆற்றல் அதிகமாகின்றது என்பதும் உண்மையாகும் .

பஞ்சகவ்வியப் பெருமை :

பசுவும்.பசு தரும் பஞ்சகவ்வியமும் தெய்வத் தன்மை கொண்டவை, என்றென்றும் புனிதமானவை. ஆகவே இந்து சமயத்தில் இவை முக்கியமான நிலைத்த இடத்தை பெற்று விளங்குகின்றன.

பஞ்சகவ்வியம் இந்துக்களின் பல்வேறு சடங்குகள், பூஜைகளில் இதற்கெனத் தனி இடம் உண்டு. இந்த பஞ்ச கவ்வியத்தில் பல்வேறு தேவர்கள் வாசம் செய்கின்றனர். பசுவின் பால்,தயிர், நெய். கோமயம், சாணம் னும் இவ்வைந்தும் சேர்ந்ததே பஞ்ச கவ்வியம் எனப்படும்
இது இயற்கை வேளாண்மையில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நிலஊட்டப் பொருள்[உரம்] ஆகும்.

அபிஷேகத்திற்கான பஞ்ச கவ்வியம் செய்ய சில அளவு வரைமுறைகள் உள்ளன.

பசும்பால் :1 அளவு
பசுந்தயிர் :2 அளவு
பசும்நெய் அளவு
கோசலம் :1 அளவு
கோமயம் : 1 அளவு
தர்ப்பை கலந்த நீர் 3 அளவு

பசும் பால் தான் ஏற்றது.எருமைப்பால் முதலியவற்றை பயன்படுத்தக்கூடாது . பசுக்களில் பல்வேறு நிறங்களைக் கொண்ட பசுக்கள் உள்ளன .பசுக்களின் நிறத்திற்கும் அவை தரும் பாலின் தன்மைக்கும் இடையில் தொடர்வு உண்டு.

பொன்னிறப் பசுவிடமிருந்து பாலும்
நீலநிறப் பசுவிடமிருந்து தயிரும்,
கருநிறப் பசுவிடமிறந்து நெயும் ,
செந்நிற பசுவிடமிருந்து கோசலமும்,
தனித்தனியே எடுத்து பஞ்சக்கவியம் தயாரிக்க வேண்டும். சிவனுக்குரிய அபிஷேகப் பொருட்கலில் பஞ்ச கவ்வியமே சிறந்தது .

இவ்வாறு சிறந்த பஞ்சகவ்வியத்தை தமிழில் "ஆனைந்த "என்பர் .

பசும் பாலில் சந்திரனும் ,
பசுவின் தயிரில் வாயு பகவானும்,
கோமயத்தில் வருண பகவானும்,
பசும் சாணத்தில் அக்னிதேவனும் ,
நெய்யில் சூரிய பகவானும் வாசம் செய்கின்றனர் .

வேளாண்மையில் பயன்பாடு

1. பஞ்சகவ்யத்தை பயன்படுத்தி விதைநேர்த்தி செய்வதால் விதையின் முளைப்புத் திறன் மற்றும் வீரியத்தன்மை மேம்படுகிறது.

2. பஞ்சகவ்யம் பயிர் வளர்ச்சியை ஊக்குவிக்கும் உயிர் திரவமாகவும்
பூச்சி மற்றும் நோய் தாக்குதலுக்கு எதிர்ப்பாற்றலை அளிக்கும் காரணியாகவும் விளங்குகிறது.

தயாரிப்பு முறை

தேவையான பொருட்கள்

1. பசுஞ்சாணம்-5 கிலோ,
2. பசுவின் கோமியம்-3 லிட்டர்,
3. பசும்பால்-2 லிட்டர்,
4. பசு தயிர்-2 லிட்டர்,
5. பசு நெய்-1 லிட்டர்,
6. கரும்புச்சாறு-1 லிட்டர்,
7. தென்னை இளநீர்-1 லிட்டர்,
8. வாழைப்பழம்-1 கிலோ.

பசுஞ்சாணம் 5 கிலோவுடன் பசுமாட்டு நெய் 1லிட்டர் கலந்து பிசைந்து ஒரு பிளாஸ்டிக் வாளியில் 3 நாட்கள் வைத்து தினமும் ஒரு முறை பிசைந்துவிட வேண்டும்.

• 4வது நாள் மற்ற பொருட்களுடன் இவைகளை ஒரு வாயகன்ற மண்பானை அல்லது சிமென்ட் தொட்டி அல்லது பிளாஸ்டிக் தொட்டியில் இட்டு கையால் நன்கு கரைத்து கம்பிவலையால் மூடி நிழலில் வைக்க வேண்டும்.

• ஒரு நாளைக்கு 2 முறை வீதம் காலையிலும் மாலையிலும் 20 நிமிடங்கள் நன்றாக கலக்கிவிட வேண்டும். இது பிராண வாயுவை பயன்படுத்தி வாழும் நுண்ணுயிர்களின் செயல்திறனை ஊக்குவிக்கிறது. இந்த முறையில் 15 நாட்களில் பஞ்சகவ்யம் தயாராகிவிடும்.

ரகசிய பைரவர் பரிகாரங்கள்

கல்வியில் வெற்றிபெற:

புதன்கிழமைகளில், புதன் ஹோரையில் மரிக்கொழுந்து மாலை அணிவித்து, புனுகு பூசி, பாசி பருப்பு பொடி கலந்த அன்னத்துடன் பருப்பு பாயசம் நிவேதனம் செய்து, பைரவரை அர்ச்சித்து வழிபட வேண்டும்.

வியாபார வெற்றிக்கு:

புதன்கிழமைகளில் காலை 10.30 முதல் 12 மணிக்குள் பைரவருக்கு சந்தனக் காப்பு செய்து, மரிக்கொழுந்து மாலை அணிவித்து, புனுகு பூசி, பாசிப் பயறு சுண்டல், பாசிப் பயறு பாயாசம், பாசிப்பயறு பொடி கலந்த அன்னம், கொய்யாப்

பழம் இவைகளை நிவேதனமாக வைத்து, அர்ச்சித்து பைரவரை வழிபட வேண்டும்.

பணக் கஷ்டம் நீங்கிட:

மண் அகலில் தாமரைத் திரி போட்டு, நெய் விளக்கு ஏற்றி ஞாயிற்றுக்கிழமை ராகு கால நேரம் அல்லது தேய்ப்பிறை அஷ்டமி அல்லது பவுர்ணமி அல்லது வெள்ளிக்கிழமைகளில் ஸ்ரீ சொர்ண ஆகர்ஷண பைரவ பூஜையைத் துவக்கி 108 நாட்கள் செய்ய வேண்டும்.

மாங்கல்ய தோஷம் நீங்க:

தனது கணவரின் உயிருக்கு ஏதேனும் ஆபத்து ஏற்படுமோ, அதனால் தங்களது மாங்கல்யத்துக்கு ஆபத்து ஏற்படுமோ என்று பயப்படும் பெண்கள் செவ்வாய்க்கிழமை எமகண்டத்தில் பைரவருக்கு சந்தனக் காப்பு செய்து, விரலி மஞ்சல் மாலை சூட்டி, மஞ்சள் கயிறு (தாலிக் கயிறு) சமர்ப்பித்து, சர்க்கரைப் பொங்கல், பால் பாயாசம், பானகம், நிவேதனம் செய்து, சக சுமங்கலிப் பெண்களுக்கு, மஞ்சள் குங்குமம், ஜாக்கெட் துணியுடன் வசதி இருந்தால் புடவையும் கொடுத்து, பைரவரை வழிபட வேண்டும்.

இழந்த பொருள் கிடைக்க:

மானம், மரியாதை, கவுரவம், இடம், சொத்து போன்ற நீங்கள் இழந்த பொருள் மீண்டும் உங்களுக்குக் கிடைத்திட, பைரவர் முன் 27 மிளகை மூட்டையாகக் கட்டி தீபம் ஏற்றி விட்டு, வராகிக்கு முன் சிறிது வெண் கடுகை மூட்டையாகக் கட்டி தீபம் போட்டு வழிபட வேண்டும்.

மந்திர தந்திர ரகசியங்கள்

ஏதேனும் ஒரு முக்கியமான வேலையாக அல்லது தொலைதூர வெளியூர் பயணம் கிளம்பினாலும் காராமணிப் பயிர் கொஞ்சம் வலது கையில் வைத்து வாசலுக்கு அருகில் நின்று கொண்டு விநாயகரை வேண்டிக் கீழே உள்ள மந்திரத்தை 7 தடவை ஜெபித்து

அந்தக் காராமணிப் பயிரில் ஊதி பின்னர் வாசலைத் தாண்டி வெளியே வந்து காராமணிப் பயிரை எறிந்து விடவும்.பின்னர் விநாயகரை வேண்டிகே கிளம்பிச் செல்ல காரியத்தடைகள் நீங்கி வெற்றியுண்டாகும்.ஒரு குறிப்பிட்ட நல்ல காரியம் செய்யும் போது பலரின் எதிர்ப்பு,பொறாமை,திருஷ்டி இருந்தால் அந்த மாதிரி நேரங்களில் இந்தப் பிரயோகத்தை உபயோகிக்க நிச்சயம் வெற்றி கிட்டும்.

இதை செய்த வெளியூர்,வெளிநாடு பயணம் கிளம்ப வெற்றியுடனும் பாதுகாப்புடன் திரும்பலாம்.

மந்திரம்:-

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் சர்வ விக்ன வினாசாய, சர்வ கார்ய சித்திம் நமஹ ||

2. செல்வவளம் பெற ஸ்ரீ புவனேஸ்வரி வித்யா பிரயோகம்

ஞாயிற்றுக்கிழமை அதிகாலை சூர்ய உதயத்திற்கு முன் குளித்து வெண்ணிற ஆடை அணிந்து சூரியனைப் பார்த்தபடியே ஹ்ரீம் என்று 108 தடவை ஜெபிக்கவேண்டும்.ஜெபத்திற்கு மாலைகள் அவசியம் இல்லை.
பயன்படுத்த வேண்டும் என்றால் ஸ்படிகம் அல்லது ருத்ராக்ஷ மாலை பயன்படுத்தவும்.
ஜெபித்து முடித்த பின் வெண்சந்தனப் பொடி அல்லது வெண்சந்தனக் கட்டையை அரைத்து ஹ்ரீம் என்று 11 தடவை ஜெபித்து நெற்றில் அணிந்து கொள்ளவும்.பின் மற்ற நாட்களில் ஹ்ரீம் என்று 11 தடவை ஜெபித்து நெற்றில் வெண்சந்தனம் அணிந்து வரவும்.இதை எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் செய்து வர செல்வம், புகழ் இவற்றில் படிப்படியாக உயர்ந்த அந்தஸ்தை அடையலாம்

அரச மரப் பிரதட்சிணப் பிரயோகம்
ஒரு தேய்பிறை ஞாயிற்றுக்கிழமை அன்று சூரிய அஸ்தமன வேளையில் ஊருக்கு வெளியில்,காட்டில், அல்லது மயானத்தில் உள்ள ஒரு அரசமரத்தடியில் மஞ்சளால் ஒரு வட்டம் வரைந்து அதற்குள் நல்லெண்ணெய் விட்டு அகல் விளக்கேற்றி, விளக்கிற்கு குங்குமம்,மஞ்சள் வைத்து பாயசம் படைத்து வழிபடவும்.பின்னர் பிரதட்சிணமாக அதாவது இடமிருந்து வலமாக 11 தடவை வலம் வரவும்.வலம் வந்து முடிந்தவுடன் விளக்கின் முன் நின்று கவலை, பிரச்சனை என உங்கள் மனக்குறை என்னவோ அது விரைவில் தீர வேண்டிக்கொள்ளவும்.பின்னர் திரும்பிப்பார்க்காமல் சென்றுவிடவும்.இதைக் குறைந்தது 3 வாரம் செய்யவும்.துன்பங்கள் நீங்கும்,சுபகாரியத்தடைகள் தீரும்.தொழில் மற்றும் குடும்பத்தில் உள்ள பிரச்சனைகள் ,பணப்பற்றாக்குறை என வேண்டிக்கொண்ட பிரச்சனை என்னவோ அது தீரும் அல்லது அதைத் தீர்க்கும் வழி மனதில் தோன்றும்.

சர்வ க்ரஹ தோஷ நிவாரண பரிகாரம்!!!
செவ்வாய்க்கிழமை அன்று குறைந்தது 1/2 மீட்டர் அல்லது 1 மீட்டர் நீளமுள்ள சிகப்புத் துணி வாங்கி அதில் முடிந்த அளவு கோதுமை வைத்து கொஞ்சம் பணமும் வைத்து முடிந்து கொள்ளவும்.சூரிய அஸ்தமன வேளையில் ஹனுமான் ஆலயம் சென்று அந்த சிகப்பு மூட்டையை [முடியை] ஹனுமான் பாதத்தில் வைத்து சர்வ கிரக தோஷங்களும் நிவாரணமாகக்
கீழ்க்கண்ட மந்திரத்தை 27 தடவை வடக்கு முகமாக அமர்ந்து ஜெபிக்கவும்.அல்லது அர்ச்சகரிடம் கொடுத்துப் பாதத்தில் வைத்து அர்ச்சித்துத் தரச் சொல்லி வாங்கிக் கொண்டு கீழே உள்ள மந்திரத்தை 27 தடவை வடக்கு முகமாக அமர்ந்து ஜெபிக்கவும்.
பின்னர் அந்தச் சிகப்பு முடியை அர்ச்சகருக்கு தட்சிணையாக கொடுத்து விடவும்.அல்லது யாரேனும் உணவுப் பொருட்கள் தேவைப்படும் யாசகர்களுக்குத் தானமாக வழங்கவும்.இதன் மூலம் கிரக தோஷப் பாதிப்புகள் நீங்கும் எனத் தந்திர சாஸ்திரம் கூறுகிறது.

மந்திரம் :-
அஞ்சனா கர்ப்ப சம்பூதம் குமாரம் ப்ரம்மசாரிணம்|
துஷ்ட க்ரஹ விநாசாய ஹனுமந்த முபாஸ்மஹே ||

.வீட்டில் நிம்மதி நிலவ துரதிர்ஷ்டம் நீங்க
ஒரு பௌர்ணமி அன்று நல்ல தேங்காய் ஒன்றை எடுத்துக் கொண்டு சிறிது குங்குமத்தைப் பன்னீரால் கரைத்து அதை வலது கை மோதிர விரலால் தொட்டு தேங்காயில் ஸ்வஸ்திக் வரையவும்.பின்னர் அந்தத் தேங்காயின் மேல் ஒரு சிகப்புத்துணியைச் சுற்றவும்.பின்னர் அதைக் கொண்டு வீட்டின் உட்புறம் மற்றும் வெளிப்புறத்தையும் வீட்டில் உள்ளவர்களையும் (தலையையும்) சுற்றவும்.முடித்தபின் ஆறு அல்லது கடலுக்குச் சென்று செருப்பைக் கழற்றிவிட்டுவெறும் காலுடன்
ஓம் நமோ பகவதே வாசுதேவாய என்று 11 தடவை ஜெபித்து
மஹாவிஷ்ணுவிடம் இல்லத்தில் துரதிர்ஷ்டம்,துன்பங்கள் நீங்கி அமைதியும் மகிழ்ச்சியும் உண்டாக அருள் செய்ய வேண்டிக் கொண்டு அந்தத் தேங்காயை நீரில் போட்டு விடவும். இதன் மூலம் வீட்டில் வளமும்,நலமும்,மகிழ்ச்சியும் உண்டாகும்

சத்ரு வசியமாக....

ஆதிவாரம் தொட்டால் வாடி செடிக்கு அருகில் சென்று சத்ருவை நினைத்து வாய்பேசாமல் நின்று கொண்டு எலுமிச்சை பலிகொடுத்து நைவேத்யங்கள் படைத்து கன்னி நூல் காப்பு கட்டி சாபநிவர்த்தி செய்து வேரை பிடுங்கி வந்துகீழ் கண்ட மந்திரத்தை

ஓம் நீலி நீலி வசி வசி வசி

இந்த மந்திரத்தை 1008 உருக்கள் ஜெபம் செய்துவிட்டு அந்த வேரை ஒரு இன்ச் அளவு வெட்டி எடுத்து தாயத்தில் அடைத்து கொண்டால் எப்படிப்பட்ட எதிரியாகிலும் உடனடியாக வசியம் ஆவார்

மூலிகை வித்தை கிலுகிலுப்பை

ஏவல் பில்லி சூன்யம் பிசாசு பூதம் பேய் நம்மை அணுகாமால் இருக்க கிலுகிலுப்பை என்ற செடிக்கு மஞ்சள் நூலால் காப்புக் கட்டி சாம்பிராணி தூபம் காட்டி பொங்கல் படைத்து எலுமிச்சம் பழம் பலி கொடுத்து மூல மந்திரம் :

ஓம் அம் யீம் உம் சிம் ரார சிவ சிவ சுவாகா:

என்று மந்திரம் செபித்து ஆணிவேர் அறுந்துவிடாமல் பிடுங்கி மறுபடியும் சாம்பிராணி தூபம் காட்டி கழுத்தில் அணிந்து கொள் அப்படி கட்டியதின் குணத்தைக் கூறுகிறேன் கேள் காளி துர்கை சாமுண்டி போன்ற தேவதைகள் அணுகாது பூதம் மதற் கொண்டு மிருகம் வரை தலை தெறிக்க ஓடிவிடும் நமக்கு ஏவல் செய்யும் எதிராளி இருந்த இடம் தெரியாமல் போய் விடுவான் மனையிலிருந்து தொல்லை தரும் பேய் நோய் முதலியவைகள் நம்மை அணுகாம்

வசிய மை செய் முறை

வெள்ளை விஷ்ணுகிரந்தி வேர்
வெள்ளைக் காக்கணம் வேர்
வெள்ளெருக்கன் வேர்
இந்திரகோபம்
இவைகளை நன்கு உலர்த்தி தீயில் கறுக்கி வைத்துக்கொள்ள வேண்டும் அதன்பின் ஏரளிஞ்சி விதை ஒரு படி கொண்டு வந்து குழித்தைலம் எடுத்து மேற்கண்ட வேரைக் கல்வத்திலிட்டு தைலம் விட்டு இரண்டு ஜாமம் அரைத்து பின் புனுகு கோரோசனம் பச்சைக்கற்பூரம் குங்குமப்பூ கஸ்தூரி இவைகளை வகைக்கு ஒரு குன்றிமணி வீதம் சேர்த்து ஒரு ஜாமம் அரைத்தால் மை பதமாகும் இதைக் கொம்பு சிமிழ் செய்து அதில் பத்திரம் செய்யவும்

கண் திருஷ்டி பாட்டி கழிக்கும் முறை

இதை கொஞ்சம் எடுத்து நெற்றியில் திலகமிட்டுச் சென்றால் எல்லாவித வியாபாரமும் பெருகும் வசியம் ஆகும் நம்மைக் காண்பவர் நல்ல கௌரவம் தந்து மதிப்பு தருவார் பிறகுக்கும் செய்துதரலாம்

இதுபோல் குழந்தைகளுக்கு கண்பட்டுவிட்டது என்பார்கள். இதற்கு முன் சொல்லிய முறைதான் என்றாலும் கூட ஒரு முறை சொல்லுகிறேன். படிப்பதற்கு விளையாட்டாகத் தான் இருக்கும். ஆனால் அதிகம் விஷயம் உண்டு.

கட்டச்சி கண், நெட்டச்சி கண், கருப்பி கண், சிவப்பி கண், முண்டக்கண், ஆந்தைகண், பச்சி கண், பாம்பு கண் சுடு சுடு சுடு.

இவ்வாறு 11 தடவைஓதிக் கொடுக்க கண்பட்ட தோஷம் விலகிப் போகும். இது நம் முன்னோர்கள் கையாண்டு வந்த முறையாகும்.

வாழ்வில் கடன்பட்டுவிட்டால் மனதில் அமைதி இருக்காது இரவில் படுத்தால் தூக்கம் வராது எப்போது கடன் கொடுத்தவன் கேட்க வந்து விடுவானோ என்ற அச்ச உணர்வு இருந்துகொண்டே இருக்கும்

கடன் தொல்லைகள் விலகிட மந்திரம்
நம்முடைய தரித்திரம் காரணமாகவே இந்த மாதிரி கடன் தொல்லைகள் நம்மை வந்து வாட்டுகின்றன கடன் தொல்லை அகன்றால் மட்டுமே நாம் நம்முடைய வாழ்வில் முன்னேற முடியும் .

நமது கடன்களும் தரித்திரமும் நீங்க தேவி அன்னபூரணி நமக்கு உதவ முன் வருகிறாள் அன்ன பூரணி எந்திரத்தை முறையாக பூஜைகள் செய்து அதை வீட்டில் வைத்து வழிபாடு செய்து வந்தால் சுமார் 41 நாட்களிலேயே நம்முடைய வாழ்வில் மாற்றங்கள் தெரிய ஆரம்பித்திருக்கின்றன

பூஜைமுறைகள் :

வளர்பிறை ரோகினி, மிருகசீரிடம் ,உத்திரம்,இதில் ஏதாவது ஒரு நட்சத்திரம் வரும் நாளில் இந்த எந்திரத்தை எழுதி பிரதிஷ்டை செய்ய வேண்டும் .முதலில் யந்திரத்திற்கு அபிஷேகங்கள் செய்து நிவேதனப் பொருட்களாக தேங்காய் பழம் பொங்கல் திராட்சை போன்றவை வைக்கலாம் மல்லி பிச்சு பூ சம்பங்கி பவளமல்லி போன்ற பூக்களில் எதாவது ஒரு பூவால் அர்ச்சிக்கலாம்

மூல மந்திரம் :

ஓம் க்ரீம் ஸ்ரீம் க்லீம் ஓம் நமோ பகவதே அன்னபூர்ணே
மம பிரிஷித அன்னம் தேகி சுவாகா

இந்த மந்திரத்தை 51 முறை உச்சரித்து வரவேண்டும் இவ்வாறு 24 நாட்கள் உச்சரித்து வந்தால் கடன் தொல்லை நீங்கும் நோய் நொடிகள் இருந்தாலும் அகலும் நிம்மதியான வாழ்வு வாழ வழி வகுக்கும் .

யந்திரங்களும் அதன் பலன்களும்

- மச்ச யந்திரம்---வீட்டில் உள்ள வாஸ்து குறைகளை நீக்கும்.
- ஸ்ரீ சக்கரம்---வீட்டில் ஆனந்தம்,அமைதி நிலவும்.நல்ல சக்திகள் பெருகும்.வாஸ்து தோஷ பரிகாரத்திற்கு சிறந்த யந்திரம்.எண்ணற்ற சக்திகளை அளிக்கும்.அவசியம் ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய சக்தி மிக்க யந்திரம்

- ஸ்ரீ வாஸ்து யந்திரம்---இல்லம் சுபிட்சமாகும்.லக்ஷ்மிகரம் பெருகும்.
- வியாபார வசிய யந்திரம்---வியாபார விருத்தி, தொழில் முன்னேற்றம் தரும்.தொழில் போட்டிகளை சமாளிக்கலாம்.

- நவகிரக யந்திரம் ---நவகிரக தோஷம் நீக்கும்.காரிய தடை விலகும்.சந்தோஷம் நிலைக்கும்
- லஷ்மி குபேர யந்திரம்---செல்வத்தின் அதிபதி.இல்லத்தில் பணம்,சொத்து குவியும்.
- சுதர்சன யந்திரம்---பேய்,பில்லி,சூன்யம்,பயம்,நோய் நீக்கும்
- காரிய சித்தி யந்திரம்---எடுத்த காரியத்தில் வெற்றி பெறலாம்.
- செல்வ விநாயகர் யந்திரம்---பொன்,பொருள் சேரும்.
- ஸ்ரீ மகாலட்சுமி யந்திரம்--வீட்டில் லட்சுமி கடாக்ஷம் உண்டாகும்.
- ரத பந்தின யந்திரம்---வாகனம் பழுது,விபத்துக்களை தவிர்க்க ஸ்ரீ பாம்பன் சாமிகள் அருளிய அற்புதமான சக்திமிக்க யந்திரம்
- குபேர எண் யந்திரம்---செல்வவளம் அளிக்கும்.சுகம் சேரும்.பேங்க் பேலன்ஸ் கூடும்.

மேலும் எண்ணற்ற சக்திமிக்க யந்திரங்கள் அவரவர் பிரச்சினைகளுக்கு ஏற்ப கிடைக்கும்.

- இந்த யந்திரங்களை எவ்வாறு வழிபடுவது,எங்கு வைப்பது மற்றும் பூஜை முறைகள், விவரங்கள் அனைத்தும் யந்திரங்கள் வாங்கும் போது வழங்கப்படும்.
- இந்த யந்திரங்கள் அனைத்தும் 11 நாட்கள் பூஜையில் வைத்து பூஜிக்கப்பட்டு ,சக்தியூட்டப்பட்டது

மந்திர பாவை வைத்து மாந்திரீகம்

பாவை என்பது மெழுகு ,களிமண், அரிசி மாவு, மைதா மாவு ,கடலை மாவு, போன்ற பொருட்களில் எதாவது ஒன்றினால் மனித உருவத்தை பொம்மையாக செய்து பயன்படுத்துவதுதான் பாவை மாந்திரீகம்

இதை எப்படி பயன்படுத்துவது என்றால் நம்முடைய எதிரியின் நகம் முடி அழுக்கு துணி ஆகியவற்றை சேகரித்து நாம் தயாரித்த பொம்மையில் பொருத்துவார்கள்

இந்த பாவையை சுடுகாடு அல்லது இடுகாட்டுக்கு எடுத்து சென்று மந்திரங்கள் சொல்லி பூஜை செய்து முடிவில் சேவல் எதாவது பலி கொடுத்து அதன் இரத்தத்தை தெளித்து அங்கிருக்கும் ஆவிகளுக்கு படைத்து பின்னர் பாவிகளின் மேல் இரத்தத்தை தெளித்து சுடுகாட்டில் புதைத்து விடுவார்கள்
சுடுகாட்டில் புதைத்து வைத்தால் எதிரி மரணமடைந்து பிணமாக சுடுகாடு வந்தடைவான் என்பது நம்பிக்கை இப்பாவைகளை நெருப்பில் இட்டு

வேகவைத்தால் எதிரி உடல் வெந்து உடனே மரணமடைவான் என்பது நம்பிக்கை

மேலும் இந்த பாவைகளில் எந்த பாகத்தை சிதைக்கிறோமோ அந்த உறுப்பு எதிரியின் உடலில் சேதமாகும் பாவையின் உடல் முழுவதும் குண்டூசியால் குத்தி வைப்பதும் உண்டு .இப்படி குண்டூசியால் குத்தி வைத்தால் உடல் முழுவதும் குத்தல் உண்டாகும்

மந்திர பாவைகள் பல முறைகளில் செய்வது உண்டு மஞ்சளால் எதிரியை போல உருவம் செய்து அதன் கண் வாய் இவைகளுக்கு கருவைத்தொட்டு முள்ளினால் குத்தி எதிரியின் வீட்டை சுற்றி வந்து பின்பு மயானத்திற்கு சென்று புதைக்க எதிரி பித்து பிடித்தவன் போல் பைத்தியம் பிடித்து அலைவான்

வேறுமுறை ஒரு சுக்கு எடுத்து கொண்டு அதில் எதியை போல் உருவம் செய்து ஜங்காயம் கரு இவற்றை ஒன்றாக சேர்த்து நாகப்பாம்பின் முள்ளினால் கருவைதொட்டு அவயங்களில் குத்தி வைக்க அவன் பைத்தியம் பிடித்து அலைவான் பெரு ஊமத்தை சாறு ,பேய் பீர்க்கன் தைலம் ,காயம் இவற்றுடன் கருவை சேர்த்து மாவினால் எதிரியை போல் உருவம் செய்து பேதன மந்திரத்தை ஜெபித்து தைலத்தை தொட்டு பாவையில் குத்த எதிரியின் கை கால் முடமாகும்

இவை அனைத்தும் முறையாக மந்திர தந்திர வித்தைகள் முறையாக பயின்றவர்கள் மட்டுமே தான் செய்ய முடியும் இதை யாரும் முயற்சிக்க வேண்டாம் இதை முயற்சி செய்து கண்ணிழந்தவர்கள் பல பேர் ..

நினைத்த வாழ்வு அமைய சுக்கிர தோஷ பரிகாரங்கள்

சுக்ர தோஷ பரிகார மூலிகைவேர் ,யந்திரங்கள் .

ஒருவரது வாழ்க்கையில் சுக போகங்களுக்கும் சுபிட்சங்களுக்கும் மணவாழ்க்கைக்கும் நல்ல வேலை கிடைக்கவும் நினைத்த காரியங்கள் அனைத்தும் உங்கள் எண்ணம் போல் நடக்கவும் மூலக்காரணமாக இருப்பது களத்திரகாரகன் சுக்ர பகவான் .ஜாதகத்தில் ஆதிபத்யம் நன்றாக இருந்தால் நன்மைகள் கூடும் ஆதிக்கம் குறையுமானால் தீமைகள் நடக்கும் தடைகள் அதிகம் இருக்கும் .

அத்தி மர வேர்

சுக்கிரனுக்கு உகந்த அத்திமர வேரினை சுக்கிரவாரம் நல்ல நேரம் பார்த்து வெட்டி எடுத்து வந்து அதில் சுக்கிரனுக்குரிய மூலமந்திரத்தை உருவேற்றி அதில் பஞ்ச வர்ண நூல் சுற்றி அதை தாயத்தாக அணிந்து கொண்டால் தடைகள் அனைத்தும் விலகும் .

சுக்கிர பரிகார யந்திரம்

சுக்கிரனுக்குரிய யந்திரங்கள் பல வகை யந்திரங்கள் உண்டு அதில் எண் யந்திரங்கள், மகாலட்சுமி யந்திரம் ,சுக்கிர பரிகார யந்திரங்கள் இவைகளை அணிந்தாலும் தடைகள் விலகும் இதை தாயத்தாகவோ அல்லது பாக்கட்டில் வைக்கும் படியாக தயார் செய்து பாக்கட்டில் வைத்தும் பலன் பெறலாம் .

இதை அணிந்தால் தடைபட்டோ தாமதப்பட்டோ வருகிற திருமண காலம் நெருங்கி வரும் ,மனைவியை பிரிந்து வாழும் கணவன் ,கணவனை பிரிந்து வாழும் மனைவி கூட இந்த சுக்கிர பிரீத்தி அடைந்து பலன் பெறலாம் .

கண் திருஷ்டி போக்கும் எண் யந்திரம்

கல்லடி பட்டாலும் கண்ணாடி படக்கூடாது என்பார்கள் பெரியவர்கள் அதற்கு காரணம் என்னவென்றால் கண் திருஷ்டி தோஷம் ஏற்பட்டால் அரசன் கூட ஆண்டியாகிவிடுவான் ஆகையினால் கண் திருஷ்டி தோஷத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் கீழ்க்கண்ட யந்திரத்தை வரைந்து பூஜை செய்து கையில் அல்லது கழுத்தில் அணிந்து கொண்டால் கண்திருஷ்டி கோளாறுகள் நம்மை அணுகாது .

கண்திருஷ்டி தோஷத்திற்கு எண் யந்திரம்

| | | | |
|---|---|---|---|
| ௩ | ௧0 | ௨ | ௭ |
| ௬ | ௩ | ௭ | ௬ |
| ௯ | ௪ | ௮ | ௧ |
| ௪ | ௫ | ௫ | ௮ |

இந்த யந்திரத்தை செவ்வாய்கிழமை அமாவாசை வரும் காலத்தில் செம்பு அல்லது ஐம்பொன் தகட்டில் எழுதி பூஜையில் வைத்து தினமும் 108 வீதம் 48 நாட்கள் பூஜை செய்து கையில் அல்லது கழுத்தில் அணிந்து கொள்ளலாம் .

இந்த யந்திரத்தை வாசலில் வைக்கலாம் இதனால் செய்வினை ஏவல் சூன்யம் எதுவும் உங்களை ஒன்றும் செய்யாது .

குழந்தைகளுக்கு தாயத்தாக அணிந்து கொண்டால் மிகவும் பாதுகாப்பாக இருக்கும்

யந்திரங்களும் அதன் செயல்பாடுகளும்

இவற்றில் கூறியபடி யந்திரங்கள் வைத்து வழிபாடு செய்து வந்தால் கீழ்க்கண்ட துறைகளில் பலவித சாதனைகள் புரியலாம் இந்த யந்திரங்களை பயன்படுத்தி கீழ்க்கண்ட பிரச்சனைகள் சரியாகி வெற்றி அடைந்துள்ளனர் .

நடிகர்களுக்கு -சாரஸ்வதம் யந்திரம்
அரசியல்வாதிகளுக்கு -வராகி யந்திரம்
வியாபாரிகளுக்கு -சொர்ண ஆகர்சன பைரவர் யந்திரம்
திருமணமாக -சுயம்வர பார்வதி யந்திரம்
செய்வினை அகல - ப்ருத்யங்கரா தேவி யந்திரம்
எதிரியை வெல்ல -அகோர நரசிம்மர் யந்திரம்
வழக்கு வெற்றிக்கு -விஜய துர்காயந்திரம்
மன நோய் -உன்மத்த பைரவர் யந்திரம்
பலவித நோய் நீங்க -தன்வந்திரி பகவான் யந்திரம்
கல்விக்கு -மனோன்மணி யந்திரம்
வெளிநாடு செல்ல -தாரா யந்திரம்
சர்வஜன வசியம் -ராஜ சியாமளா யந்திரம்
கலைகளுக்கு -மாதங்கி யந்திரம்
இழந்ததை பெற -கார்த்த வீரியம் யந்திரம்

வியாபர ஸ்தலங்களுக்கு உரிய யந்திரங்கள்

மளிகை கடைகளுக்கு -அஷ்ட லக்ஷ்மி யந்திரம்
துணிக்கடை -சூலினி யந்திரம்
பெயின்ட் கடை -பஞ்சாட்சர யந்திரம்
ஹோட்டல் -துர்க்கா யந்திரம்
மெடிக்கல் -தன்வந்திரி பகவான் யந்திரம்
பேன்சி -ஸ்ரீ சக்ர யந்திரம்
இரும்பு கடை -பஞ்சாட்சர யந்திரம்

இந்த முறையில் யந்திரங்கள் கடைகளில் வைத்தால் வியாபாரம் மிகுந்த செழிப்படையும் .

செய்வினை பற்றிய சூட்சமம்

மாந்திரீகம் செய்வதாக கூறிக்கொண்டு பலரும் பலவிதமான மந்திரங்களும் யந்திரங்கள் கொடுக்கின்றனர் இது மட்டுமல்ல மாந்திரீகம் மாந்திரீகத்தில்

உள்ள சில சூட்சம விசயங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் பலருக்கும் இது பயனுள்ளதாகவும் சிலரிடம் சென்று ஏமாறாமல் இருக்கலாம் .

சிலர் தனது எதிரியை நேரடியாக தாக்க வலிமையற்றவர்கள் மாந்திரீகரை அணுகி ஒரு சில தீய ஆவிகளை ஏவல் செய்து எதிரியை துன்புற செய்கின்றனர் .

இப்படிப்பட்ட துர்தேவதைகளால் எதிரியின் உறுப்புகள் அழிவதும் உறுப்புகள் ஊனமடைவதும் மன நிலை பாதிப்புகள் அடைய செய்யும் .இப்படிப்பட்ட கருமுறை செய்வினையில் மந்திரங்களை விட மை முக்கிய் இடம் பிடிக்கும் . இதற்கு தலைச்சன்பிள்ளை கரு,விலங்குகள் ,பறவைகள் ஆகியவற்றின் கரு மற்றும் பச்சிலை மூலிகைகளால் மை தயாரித்து கருமுறை செய்வினை செய்கின்றனர்.

ஒருவருடைய இயல்பான வாழ்க்கையை தனது மந்திரத்தின் மூலம் கட்டுபடுத்தி தனது விருப்ப படி நடத்துவது முகமாற்று எனப்படுவதாகும் பகையாளியின் புகைப்படம் அல்லது உருவம் போல பொம்மைகள் வைத்து மந்திர உச்சாடனம் செய்வதால் முகமாற்று செய்யும் மந்திரவாதியின் கட்டளைப்படி நடப்பார் .

செய்வினைகளை எடுக்க வேண்டுமானால் மாந்திரீகரின் ஆற்றலுக்கு மீறிய ஆவிகளின் துணையோடு செய்வினை வைக்கப்பட்டிருந்தால்; அதனை கட்டுபடுத்த முடியாது .செய்வினை எடுக்கும் பொது செய்வினைபொருள் எந்த மூலையில் வைக்கப்ப்ட்டிருகிறது என்று கண்டுபிடிக்க எலுமிச்சை அல்லது தேங்காய் உருட்டி விட்டு இருக்கும் இருக்கும் இடைத்தை கண்டறிந்து அதை எடுக்கின்றனர்

செய்வினை எடுப்பதில் பல்வேறு தந்திரங்கள் கையாளப்படுகிறது

மாந்திரீகம் பயில்பவர்களுக்கு எழும் கேள்விகள்

இந்த காலகட்டத்தில் ஒரு சிலர் மாந்திரீகம் பயின்று கொண்டு இருக்கின்றனர் அவர்களிடம் நிறைய கேள்விகளுக்கு பதில் தெரியாமல் அலைந்து கொண்டிருக்கின்றனர் .அந்த கேள்விகளை குறிப்பிடுகிறேன் இதற்கான பதில்கள் நம்மிடம் முறையாக பயிபவர்களுக்கு இப்படிப்பட்ட கேள்விகளே அவர்கள் மனதில் எழாது

முறைப்படி பூஜை தொடங்குவது எப்படி இப்போது நான் செய்யும் பூஜைகள் சரிதானா ?

· ஒரு வீட்டிற்குள் சென்றதும் அங்கு என்ன பிரச்சனைகள் இருகின்றது என்று கண்டறிவது எப்படி?

· தேவதைகளை சித்தி ஆகிவிட்டதா என்று எப்படி கண்டறிவது ?

- ஒருவருக்கு வியாபாரம் சரிவர நடக்கவில்லை அதற்கு என்ன காரணம் என்று கண்டறிவது எப்படி?
- ஒருவருக்கு எதிரியால் தினமும் தினமும் தொல்லை அதை சரி செய்ய என்ன கொடுக்க வேண்டும் ?
- ஏவல் பில்லி சூன்யம் அப்படியெல்லாம் கூறுகிறார்களே அது உண்மையா?
- பேய் விரட்டுவது எப்படி அதற்கு என்ன செய்ய வேண்டும் ?
- எந்தெந்த தேவதைகளுக்கு எப்படியெல்லாம் நைவேத்தியம் படைக்க வேண்டும் ?
- நாம் மந்திரம் சித்தியாகும் சமயம் நம்மிடம் என்னவெல்லாம் இருக்க வேண்டும் ?
- சித்தி ஆன பிறகு எப்படி அந்த தேவதையை கையாள வேண்டும் ?
- எந்த தேவதைகளாலும் நமக்கு ஆபத்துக்கள் வராமல் பாதுகாப்பது எப்படி?
- ஒரு கோயிலுக்கு சென்றால் அங்கு என்னென்ன தெய்வங்களின் பீடங்கள் எங்கெங்கே இருக்கின்றன என்று சொல்வது எப்படி?
- ஏவல் பிரச்சனைகளை கண்டறிவது எப்படி?
- அஞ்சன மைகள் தயாரிப்பது எப்படி?
- ஒருவர் ஏதேனும் பிரச்சனைகளுக்காக வந்தால் அதை கையாளுவது எப்படி ?
- ஒரு தேவதை சித்தி ஆக எத்தனை நாட்கள் எடுக்கும் ?
- வசிய வித்தைகளில் வெற்றியடைய என்ன செய்ய வேண்டும் ?
- மாந்திரீகம் அழிவு வித்தை என்று கூறுகிறார்களே அது உண்மையா ?
- நிறைய பேரிடம் படித்த வித்தைகள் பலிக்க வில்லை ஏன் ?

இன்னும் பல கேள்விகள் எழும் அதில் சிலவற்றை மட்டுமே குறிப்பிட்டுள்ளேன் ,இந்த கலையை யாரும் எழுத்தில் சொல்லித்தர முடியாது நானும் பயிற்சி தருவதாக சொல்லி ஒரு வருடம் ஆகியும் என்னால் கொடுக்க முடிய வில்லை ஏனென்றால் அதற்கும் ஒரு சில பதில்களுக்காக காத்திருந்து அதற்கு பிறகு கொடுத்தால் மட்டுமே எல்லோருக்கும் நல்லதாக அமையும் .

நிறையபேர்கள் அதிகமாக கேட்கும் கேள்விகள் ?

மாந்திரீக வைத்திய வித்தைகளை பொறுத்த வரையில் பல விசயங்களை அனுபவபூர்வமாக ஆராய்ந்து பலன் அல்லது பதில் சொல்ல வேண்டும் ஏனென்றால் நம்மை நாடி வருபவர்கள் நம்மை தெய்வத்தின் தூதுவனாக எண்ணிக்கொண்டு வருவார்கள் நாம் அவர்களுக்கு சரியான வழிகாட்டுதல் கொடுக்கவில்லை என்றால் .நாம் அந்த இடத்தில் மிகவும் அந்தஸ்தான ஒரு இடத்தில் நிச்சயமாக இருக்க முடியாது ஆகவே மாந்திரீகத்தை பொறுத்த வரையில் அனுபவம் ரொம்ப முக்கியம் .ஒரு சில விசயங்களை ஆராய்ந்து

அது நோயா பேயா என்று துல்லியமாக கூற வேண்டும் அவன் தான் உண்மையான மாந்திரீகன் .

கீழே நிறையபேர்கள் எங்களிடம் கேட்கும் கேள்விகளை உங்களுக்கு கொடுக்கிறேன் அதற்கு நாங்கள் சரியான முறையில் பூஜை முறைகளை செய்து வெற்றி கண்டுள்ளோம் .

1. கொடுத்த கடன் வசூல் ஆகவில்லை அதற்கு என்ன யந்திரம் போடவேண்டும் இல்லைஎன்றால் அதற்கான தாந்திரீக வழிகள் ஏதேனும் உண்டா?
2. பக்கத்து நிலத்திற்கு சொந்தக்காரன் என் வாசல் நோக்கி ஒரு சாமி சிலையை வைத்து விட்டார் அதற்கு என்ன செய்வது ?
3. வியாபாரமே இல்லை என்ன செய்வது ?விற்றாலும் கடன்தான் போகிறது பணம் கைக்கு வருவதில்லை ?
4. பேய் உடலில் இருக்கிறதா இல்லையா என்று கண்டுபிடிப்பது எப்படி?
5. நாளுக்கு நாள் உடல் இளைத்து கொண்டே போகிறது அடிக்கடி தலைசுற்றல் வருகிறது அதற்கு காரணம் என்ன அவர் உடம்பில் என்ன உள்ளது?
6. சென்ற இடமெல்லாம் தோழில் கிடைக்க வேலை வாய்ப்புகள் தேடி வர என்ன யந்திரம் போடலாம் ?
7. கடலில் மீன் பிடிப்பவர்களுக்கு அதிகமான மீன் அகப்பட என்ன யந்திரம் கொடுக்க வேண்டும் ?
8. சாமி அருள் வந்து ஆடும் பொது அதை நிறுத்துவது எப்படி ?
9. கண்திருஷ்டி பிரச்சனைகளுக்கு என்ன செய்வது?
10. குழந்தைகள் திடீரென்று பயந்து அழுகிறார்கள் ,வாந்தி பேதி வருகிறது மருத்துவரிடம் சென்றால் நோய் ஒன்றும் இல்லை அதற்கு காரணம் என்ன ?
11. அடிக்கடி தீராத வயிற்று வலி வருகிறது மருத்துவரிடம் சென்றால் எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது என்பார் அந்த வயிற்று வலியின் காரணம் என்ன ?
12. ஒருவருக்கு தன்னுடைய குல தெய்வம் யார் ? அது எங்கிருக்கிறது என்று தெரியாது அதை கண்டுபிடித்து கொடுப்பது எப்படி?
13. குடுப்பத்தில் அடிக்கடி பிரச்சனைகள் தொல்லைகள் நீங்க எந்த யந்திரம் போட வேண்டும்?

இன்னும் பல விசயங்கள் எங்கள் அனுபவத்தில் கண்டு வருகிறோம்.ஆக இந்த கேள்விகளுக்கெல்லாம் பதில் தெரிய நமது பயிற்சியில் முழுமையாக தெரிந்து கொள்ளலாம் நீங்களும் பலர் போற்றும் வகையில் மரியாதையோடு நடந்து கொள்ளலாம் .

ஆண் பெண் வசியம்

இன்றைய காலத்தில் பல குடும்பங்களில் ஒற்றுமை என்பது குறைவாகிவிட்டது. கணவன் மனைவி இருவருக்கும் கருத்து வேறுபாடுகள் தோன்றி விவாகரத்து பெற்றவர் பலர். சரி கணவன் மனைவி இருவரும் ஒற்றுமையாக இருந்தாலும் குடும்பத்தின் மற்ற உறுபினர்களால் இவர்களுக்குள் கருத்து வேறுபாடு உண்டாகி வயதில் மூத்த பெற்றோர்களை பராமரிக்க முடியாமல் அனாதை ஆசரமங்களில் தவிக்கவிட்டவர்கள் பலர். குடும்பத்தில் ஒருவருக்கு ஒருவர் விட்டு கொடுத்து ஒற்றுமையுடன் வாழ்ந்தால் குடும்பம் கோவிலாகும். வாழும் போதே சொர்க்கம் காணலாம். இப்படி வாழ எல்லோருக்கும் ஆசை தான். ஆனால் முடியவில்லையே, காரணம் ஒருவருக்கு ஒருவர் வசியம் இருக்காது. இந்த நிலை மாற பலர் என்னிடம் வழி கேட்டனர். இதோ அந்த வசியத்துக்கு வழி

வெள்ளெருக்கு, அழுகண்ணி, கோரோசனை, மண்டூகபிட்சு இவைகளை எருக்கின் பழுத்த இலைகளின் சாரல் அரைத்து மையை எடுத்து வசிய மந்திரம் 1008 உரு சொல்லி மையிக்கு உயிர் கொடுத்து, அதன் பின் நமக்கு இஷ்டமனவர்கள் மேல் தடவ அவர்கள் வசியமகி நம்மை விட்டு பிரியமட்டர்கள்.

ஆயுள் முழுவதும் நாம் வசியம் செய்யும் ஆணோ, பெண்ணோ நம்மை விட்டு விலகாமல் இணை பிரியாமல் வாழ வேண்டுமானால் சித்தர் சொல்லி வைத்த சில இரகசிய முறைகள் எங்கள் சர்வ சக்தி விருட்ச பீடத்தில் ஸ்ரீ லக்ஷ்மி தாச சுவாமிகள் அவர்களால் தயாரிக்க பட்டு, உங்களின் பெயர் உங்களுக்கு வசியமாக வேண்டிய நபரின் பெயர் நட்சத்திரம் சொல்லி மந்திர முறை மூலம் உருவேற்றி குளிகைகளாக தருகிறோம். இந்த வசிய குளிகைகளை சுவாமிஜி சொல்லும் முறையில் தின்பண்டங்களில் வைத்து நீங்கள் வசியமக்க வேண்டிய நபருக்கு கொடுத்தல் அதை உண்டவர் வசியமாகி ஆயுள் முழுவதும் நம்மை விட்டு இணை பிரியாமல் இருப்பர்.

## <u>உச்சிஷ்ட கணபதி யந்திரம்</u>



உச்சிஷ்ட கணபதி மூலமந்திரம் :

ஓம் க்லீம் ஸ்ரீம் க்ரீம் நமோ பகவதி
ஹஸ்திமுகாய லம்போதராய உச்சிஷ்டாய மகாத்மனே
க்ரீம் க்லீம் ஸ்ரீம் தேர்தோ உச்சிஷ்டாய சிவா .

(உரு 12000)

பூஜை முறை :

வளர்பிறை வெள்ளிக்கிழமை இந்த பூஜை துவங்கலாம் .வெற்றிலை பாக்கு பழம் ,அவல் , பொறி ,கடலை ,பிச்சிபூ , சந்தன அத்தர் , தேங்காய் ,எலுமிச்சை ,எள்ளுருண்டை பயறு வகைகள் ,ஊதுபத்தி ,சாம்பிராணி ,கற்பூரம் ,இவ்வளவு பொருட்களும் படைக்க வேண்டும் .

அதற்கு முன் ஒரு அமாவாசை தினத்தில் ஊரின் முச்சந்தி பகுதியில் சென்று அல்லது சுடுகாட்டில் சென்று ஒரு தேங்காய் ,கன்னி கோழி முட்டை ,சிவப்பு சேவல் ,இளவங்காய் அல்லது வெண்பூசணி ,இவைகளை தன்னையும் பூஜை செய்யும் இடத்தையும் சுற்றிக்கொண்டு அங்கெ சென்று ஒரு படையல் போட்டு நான் இந்த உச்சிஷ்ட கணபதி பூஜைக்காக இருக்கிறேன் எனக்கு பூஜையின் பொது எந்த பாதிப்புகளும் வராமல் நீங்கள் தான் பாதுகாக்க வேண்டும் சீக்கிரம் சித்தி கிடைக்க அருள் செய்ய வேண்டும் என்று சாஸ்டாங்கமாக விழுந்து வணங்கி அதன் பிறகு சாம்பிராணி தூபம் காட்டி பலி கொடுக்க வேண்டும் .

இந்த வேலைகளை முடித்து விட்டு அதன் பிறகு பூஜை செய்தால் தான் சித்து உடனடியாக கிடைக்கும் .இதனால் அஷ்ட கர்மங்களும் ஆடலாம் மற்றும் பேய் முதல் பிரம்மா ராட்சசி வரை விரட்டலாம் .பேய் பிசாசு உள்ள

வீடுகளில் நம் பெயரை கூறினாலே அனைத்தும் ஓடி விடும் .நமக்கு எதிரிகளால் எந்த ஆபத்துகளும் வராது நம்மை எதிர்க்க நினைப்பவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே உங்கள் கண் முன்னே அழிவதை காணலாம்

எந்த வேலை செய்ய வேண்டுமானாலும் ஒரு சீட்டில் நடக்க வேண்டிய காரியத்தை எழுதி ஒருநாள் பூஜையில் வைத்தால் போதும் அடுத்த கணமே அந்த காரியம் நடந்து விடும் .உச்சிஷ்ட கணபதியால் நமக்கு சகல வசீகர தன்மையும் ஏற்படும் ,எதிரிகள் யாரும் இருக்க மாட்டார்கள் அஷ்ட லக்ஷ்மி கடாக்ஷம் உண்டாகும் .

தேவதா வசியத்திற்குரிய மூலிகை

| தேவதை | மூலிகை வேர் | பிடுங்கும் கிழமை |
|---|---|---|
| விநாயகர் | வில்வம் | வெள்ளிகிழமை |
| சுப்பிரமணியர் | மயில்கொன்றை | செவ்வாய்கிழமை |
| மும்மூர்த்திகள் | அரசு | ஞாயிறு கிழமை |
| தேவர்கள் | கஸ்தூரி மஞ்சள் | செவ்வாய்கிழமை |
| அஷ்டதிக்கு பாலகர்கள் | மஞ்சள் | வெள்ளிகிழமை |
| சூரியன் | முருங்கை | செவ்வாய்கிழமை |
| சந்திரன் | சிறிய நங்கை | திங்கள் கிழமை |
| செவ்வாய் | சிவனார் வேம்பு | செவ்வாய்கிழமை |
| புதன் | அம்மான் பச்சரிசி | ஞாயிறுகிழமை |
| வியாழன் | துளசி | வியாழன் கிழமை |
| சுக்கிரன் | பூண்டு | வெள்ளிகிழமை |
| சனி | அரளி | ஞாயிறு கிழமை |
| ராகு | காஞ்சிரை | ஞாயிறு கிழமை |
| கேது | வேம்பு | வெள்ளிகிழமை |

| | | |
|---|---|---|
| காளி | வெள்ளை குன்றி மணி | வெள்ளிகிழமை |
| துர்க்கை | ஊமத்தன் | செவ்வாய்கிழமை |
| ருத்திரி | வேளை | வெள்ளிகிழமை |
| மயான ருத்திரி | நாய்வேளை | ஞாயிறு கிழமை |
| சாமுண்டீஸ்வரி | உத்தாமணி | கிரகணம் |
| சரஸ்வதி | செண்பகம் | சனிக்கிழமை |
| சாமளா | மல்லிகை | செவ்வாய்கிழமை |
| ஜாலக்காள் | தும்பை | ஞாயிறு கிழமை |
| மலையாள பகவதி | பூண்டு | வியாழக்கிழமை |
| தூமாதேவி | பிரமதண்டு | ஞாயிறு கிழமை |
| பத்ரகாளி | எட்டி | ஞாயிறு கிழமை |
| வாலை | கொத்தான் | செவ்வாய்கிழமை |
| வராகி | மஞ்சள் | திங்கள்கிழமை |
| வைரவர் | வில்வம் | வெள்ளிகிழமை |
| அஞ்சனாதேவி | கொன்றை | ஞாயிறு கிழமை |
| ஆஞ்சநேயர் | சரங்கோன்றை | ஞாயிறு கிழமை |
| வீரபத்திரர் | வில்வம் | வியாழக்கிழமை |
| வீரமாகாளி | அரசு | ஞாயிறு கிழமை |
| குரளி | ஊமத்தன் | ஞாயிறு கிழமை |
| மலக்குட்டி | எட்டி | திங்கள்கிழமை |
| லாடன் | வேளை | வெள்ளிகிழமை |
| ஸ்ரீ லட்சுமி | மஞ்சள் | வெள்ளிகிழமை |
| எக்கலா தேவி | வேலிப்பருத்தி | வெள்ளிகிழமை |
| குட்டிசாத்தான் | காஞ்சொரி | ஞாயிறு கிழமை |
| வேதாளம் | கருங்காலி | கிரகணம் |

குல தெய்வம் வசியம்

குல தெய்வம் வசியம் செய்ய ஒரு பௌர்ணமி நாளில் கரு மஞ்சள் செடிக்கு காப்பு கட்டி அந்த மஞ்சளை எடுத்து அரைத்து அதனுடன் ...

ஜவ்வாது
அத்தர்
அரகஜா
புனுகு
ஜாதிக்காய்
ஜாதி பத்திரி
வெட்டிவேர்
பச்சை கற்பூரம்

அதனுடன் சித்தாமணக்கு எண்ணெய் விட்டு பதம் வரும் வரைக்கும் நன்றாக 2 ஜாமம் வரைக்கும் அரைக்க வேண்டும்

இந்த மையை காந்தம் ஒட்டாத டப்பியில் பதனம் செய்து வைக்க வேண்டும் பூஜையின் போது குல தெய்வத்திற்கு ஒரு வாழை இலை போட்டு அதன் மேல் ஒரு செப்பு தகடு வைத்து அதன் மேல் கருப்பு மஞ்சள் மூன்று எடுத்து வைத்து அதில் மேற்கண்ட அஞ்சனத்தை மஞ்சள் மேல் தடவி பூஜைக்கு தேவையான படையலை படைத்து கொண்டு மந்திரம் ஜெபிக்க ஆரம்பிக்க வேண்டும்
.

குல தெய்வ வசிய மந்திரம்

ஓம் ஸ்ரீம் அம் உம் வம் லம் சிங்
ஐயும் கிலியும் சவ்வும் ஜம் ஜம்
பம் யம் ரம் மஹா [குலதெய்வத்தின் பெயர் ]
சர்வ தனமே சர்வ ஜனமே வா வா வசி வசி ஹூம்பட் நமக .

குல தெய்வம் வசியம் செய்ய ஞாயிற்றுக்கிழமை உகந்தது இதற்கு யந்திரங்கள் எதுவும் கிடையாது இந்த கருமஞ்சள் மற்றும் மேற்கண்ட அஞ்சனம் போதுமானது இதனால் குடும்ப ஒற்றுமை மேலோங்கும் நெடுநாட்களாக நினைத்த காரியங்கள் நடக்காமல் தடைபட்டு வந்தால் குல தெய்வத்தின் அருளால் சகலமும் தடைகள் விலகி நல்ல வாழ்க்கை அமையும்

நம்மில் பலர் பல தெய்வங்களை வழிபாடு செய்து வருவார்கள். அவ்வாறு செய்வது தவறில்லை. அந்த தெய்வங்கள் குலதெய்வங்கள் ஆகாது. அவை

இஷ்ட தெய்வங்கள் அல்லது இஷ்ட தேவதைகள் எனப்படும். இஷ்ட தெய்வமும் குலதெய்வத்திற்கு கீழே தான். மற்ற தெய்வங்களும் கூட குலதெய்வத்திற்கு கீழே தான். மற்ற தெய்வங்களும் குலதெய்வத்தின் அனுமதி பெற்றே அருளினை வழங்க முடியும்.

நம் குடும்பத்தை பற்றி அறிய யாரிடம் குறிகேட்க சென்றாலும் குறிசொல்பவர் நம்குல தெய்வத்தை அழைத்து அதனிடம் கேட்டே நம்மை பற்றிய விபரத்தை சொல்ல முடியுமே தவிர அவரால் தன்னிச்சையாக எதையும் சொல்ல முடியாது.

இதை உணர்ந்த மந்திரவாதிகள் ஒருவருக்கு செய்வினை செய்யும் காலத்தில் யாருக்கு செய்வினை செய்ய இருக்கிறாரோ அவரது குலதெய்வத்தினை மந்திர கட்டு மூலம் கட்டுப்படுத்தி விட்ட பின்பே தான் செய்வினை செய்வார். மந்திரவாதிகள் தாங்கள் வசப்படுத்திய தேவதைகளின் மூலம் மற்றவர்களின் குலதெய்வத்தின் விபரங்களை எளிதில் பெற்று விடுகிறார்கள். மந்திர கட்டுகளுக்கு கட்டுப்படாத குலதெய்வங்களும் உண்டு. அவை அந்த மந்திரவாதிகளை அழித்த வரலாறும் உண்டு.

குலதெய்வம் என்பது நமது முன்னோர்களில் தெய்வமாக மாறிவிட்ட புண்ணிய ஆத்மாக்கள் ஆகும். அந்த புனித ஆத்மாக்கள் தங்களின் குலத்தினை சார்ந்தவர்களை கண்ணும் கருத்துமாக பேணிக் காக்கும் வல்லமை படைத்தவை. எனவே தான் அந்த தெய்வங்கள் குலதெய்வங்கள் என்று சிறப்புடன் அழைக்கப்படுகின்றன. குலதெய்வங்களும் கர்மவினைகளை நீக்க வல்லவை. யாருக்கு கர்மவினைகள் மிக அதிகமாக இருக்கிறதோ அவருக்கு குலதெய்வமே தெரியாமல் போவதும் உண்டு.

குலதெய்வமே தெரியாமல் பல குடும்பங்கள் பலவித இன்னல்களை அனுபவித்து வருகின்றன. குலதெய்வம் தெரியாமல் எந்த பூசைகள், வழிபாடுகள், பரிகாரங்கள் மற்றும் மந்திர செபங்கள் செய்தாலும் பலனில்லை என்பதனை கவனத்தில் கொள்ள வேண்டும். எனவே எப்பாடுபட்டாவது குலதெய்வத்தினை கண்டறிந்து அதற்குரிய வழிபாட்டினை செய்து வரவேண்டும்.

நமது முன்னோர்கள் நமது குலதெய்வத்தினை வருடத்தின் ஒரு குறிப்பிட்ட நாளில் அவரவர் சொந்த பந்தங்கள், உறவினர்கள் மற்றும் பங்காளிகள் இவர்களுடன் ஒன்று சேர்ந்து கூட்டு வழிபாடு நடத்தி நிம்மதியாக வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களின் வாழ்க்கையின் இன்னல்கள் வந்தாலும் அவை வெகு நாட்கள் நீடிப்பதில்லை. குலதெய்வத்தின் அருளால் அவை சூரியனைக் கண்ட பனி போல் விலகி விடும்.

மேற்கண்ட அஞ்சனம் ,மற்றும் கருமஞ்சள் நம்முடைய நிலையத்தில் கிடைக்கும்

கடன்பட்டுவிட்டால் மனதில் அமைதி இராது. எப்பொழுது கடன் கொடுத்தவன் கேட்க வந்து விடுவானோ என்ற அச்ச உணர்வு வந்து வாட்டும்.நம்முடைய தரித்திரம் காரணமாகவே கடன் தொல்லைகள் ஏற்படுகின்றன.

தீராத கடன் ,வறுமை,கஷ்டங்கள் நீங்கிட அன்னபூரணி

கடன் தொல்லை அகன்றால் மட்டுமே நாம் நம்முடைய வாழ்வில் முன்னேற முடியும்.நமது கடன்களும், தரித்திரமும் நீங்க அன்னபூரணி நமக்கு உதவ முன் வருகின்றாள்.

<u>அன்னபூரணி யந்திரம்</u>




<u>அன்னபூரணி மூலமந்திரம்</u>

ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் ஓம் நமோ பகவதே
அன்னபூர்னே மம பிரிஷித அன்னம் தேஹி சுவாகா

வெள்ளி அல்லது தாமிரத் தகட்டில் வரைந்து கொள்ள வேண்டும்.அன்னபூரணி யந்திரம் வளர் பிறையில் ரோகினி மிருகசீரிடம் , உத்திரம் ,சுவாதுய் இவற்றில் எதாவது ஒரு நட்சத்திரம் வரும் நாளில் இந்த யந்திரத்தை பிரதிஷ்டை செய்ய

வேண்டும்முதலில் யந்திரத்திற்கு அபிஷேகம் செய்து பின்பு தூபம் காட்டி நிவேதனப்போருட்களாக தேங்காய் பழம் பொங்கல் பழங்கள் பூக்கள் படைத்து மூலமந்திரத்தை தினம் 108 உருக்கள் வீதம் 11 நாட்கள் ஜெபிக்க சித்தியாகி அன்னை அன்னபூரணியின் அருள் பரிபூரணமாக கிடைக்கும் அதன்பிறகு எல்லாவிதமான கடன் தொல்லைகள் அனைத்தும் நீங்கி நல்வாழ்வு வாழலாம்

இப்படி முறையாக கையால் எழுதி பூஜை செய்த யந்திரங்கள்தான் சரியாக வேலை செய்யும் . முறையாக பூஜை செய்த யந்திரங்கள் நம்மிடம் உள்ளன .

கணபதி சித்து

எந்த ஒரு கலைகளுக்கும் முழு முதற்கடவுளாக விளங்குகிறவர் கணபதி ஆகையால் எந்த ஒரு சூழ்நிலையிலும் முழு முதற்கடவுளான கணபதி மந்திரத்தை கூறி முறையிட்டால் எந்த ஒரு பிரச்சனைகளும் நம்மை ஒன்றும் செய்யாது .

பஞ்சாட்சர கணபதி யந்த்ரம் மந்திரம்




மூல மந்திரம்

வயநமசி வவ்வும் கணபதி வகார கணபதி
யநமசிவ யவ்வும் கணபதி யகார கணபதி
நமசிவய நவ்வும் கணபதி நகார கணபதி
மசிவயந மவ்வும் கணபதி மகார கணபதி
சிவயநம சிவ்வும் கணபதி சிகார கணபதி
அரிஓம் ஐயும் கிலியும் சவ்வும் தேவரீர் கைவசமானது போல

சங்கு சக்கரம் சர்வ சத்துரு வசீகரம் உலகெல்லாம்
உனது வசம் ஆனது போல எனது வசமாக சிவா .

<u>பூஜை முறைகள்</u>

பஞ்சாட்சர கணபதி பூஜையை வளர்பிறை சமயத்தில் வெள்ளிகிழமை நாட்களில் பூஜை துவங்க வேண்டும் .பூஜையில் இந்த யந்திரத்தை அன்றைய தினம் குறு ஓரை அல்லது சுக்கிர ஓரை சமயம் பார்த்து மேற்கண்ட யந்திரத்தை எழுத வேண்டும் .எழுதி யந்திர சாபநிவர்த்தி செய்ய வேண்டும் .அதற்கு பிறகு யந்திரதிற்கு நைவேத்யங்கள் செய்து பூஜை செய்ய வேண்டும் ..

இந்த மந்திரத்தை 1008 தடவை விரதமிருந்து கூறிவந்தால் சித்தியாகும் .இதை சித்தி செய்தால் உடனடியாக உங்களை அனைவரும் எதிர்பார்த்து காத்திருப்பார்கள்; நம் கஷ்டங்களை போக்ககூஒடிய ஒரே மனிதன் நீங்கள்தான் என்று கூறுவதை உங்கள் அனுபவத்தில் பார்க்கலாம்.

அவ்வளவு சக்தி வாய்ந்த யந்திர பிரயாக முறை இது ..

வாலை புவனேஸ்வரி மந்திரம்

மாந்திரீக பாடங்களில் முதல் தெய்வமாக சித்தி செய்து கொள்ள வேண்டும் .இந்த வாலை பரமேஸ்வரியால் தான் உங்களது வாழ்வில் ஞான விளக்கேற்ற முடியும் .நீங்கள் இந்த தேவதையை 41விரதமிருந்து சித்தி செய்து கொண்டால் இந்த தெய்வத்தின் மூலமாக அநேக காரியங்கள் சாதிக்கலாம் .இதனால் பல மாந்திரீக உண்மைகள் தெரிய வரும் குறி சொல்லலாம் முக்காலமும் சொல்லும் ஞானம் கிடைக்கும் .ஆலய பிரசன்னம் பார்ப்பவர்கள் இந்த தெய்வம் சொல்வதை கேட்டுதான் சொல்வார்கள் .

<u>வாலை புவனேஸ்வரி யந்திரம்</u>




மூலமந்திரம்

அரி ஓம் ஐயும் கிலியும் சவ்வும் ஸ்ரீயும் றீயும்
வா வா வாலை பரமேஸ்வரி வருக வருக
வந்து என் நாவிலும் வாக்கிலும் வந்து முன் நிற்க சிவா.

**பூஜை விதி :**

வளர்பிறை வெள்ளிகிழமை நாளில் யந்திரம் எழுதி பூஜையை துவங்க வேண்டும் .தினம் 108 உரு வீதம் 41 தினங்கள் விரதமிருந்து பூஜை செய்தால் சித்தியாகும் .இதனால் சகல காரியங்களையும் சாதிக்கலாம் சாதகனுக்கு தன வசியம் ,ஜனவசியம் அனைத்தும் சித்தியாகும் .

**ராவணன் கட்கம்**

‘பகை கெடுத்தல்’ என்றதும், பகையாளியை முற்றிலுமாக அழித்து ஒழித்துவிட வேண்டும் என்ற பொருளில் எடுத்துக்கொள்ளக்கூடாது. பகைவரின் மனத்தில் உள்ள பகைமையைப் போக்கி, அவரையும் உறவாக்கிக்கொள்ளவேண்டும் என்பதே இதன் பொருள். ‘பகைவனுக்கருள்வாய்நன்னெஞ்சே’ என்று மகாகவி பாடி வைத்ததற்கு ஏற்ப, அன்பாலும் பண்பாலும் பகையை இல்லாமல் செய்ய வேண்டும்.

பகைவர்கள் அதை விரும்பவில்லை என்றாலும், கெடுதல் ஏதும் நினைக்காமல் அவர்களை விலகிப்போகச் செய்வதற்கான நல்ல உபாயங்களை புராணப்

பகுதிகள் எடுத்துரைக்கின்றன. அவற்றில் ஒன்று, 'ராவண கட்க பிரயோக விதி' எனும் வழிபாடு.

அதென்ன ராவண கட்கம்? ராவணனின் கையில் இருக்கும் ஆயுதம் கட்கம். கடுந் தவம் செய்து, சிவபெருமானிடம் இருந்து வரமாக ராவணன் பெற்ற ஆயுதம் அது. அதற்குரிய மூலமந்திரத்தை பிரயோகித்துச் செய்யப்படும் பூஜையே ராவண கட்கம். எதிரிகளை விலகிப் போகச் செய்யவும், அல்லது அவர்களை நண்பர்களாக்கிக் கொள்ளவும் உகந்தது இந்த வழிபாடு.

ஸ்ரீராமனின் சத்ரு என்றாலும், அவரை நினைத்தமாத்திரத்தில் நினைவுக்கு வரும் கதாபாத்திரம் ராவணன். சிறந்த சிவபக்தன்; கடும் தவத்தால் மூவுலகையும் தன் குடைக்குள் கொணர்ந்த மாலியவானின் பேரன்; இசையில் வல்லுநன்; இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம் ராவணனின் பெருமைகளை.

வீணை இசைப்பதில் வல்லவனான ராவணன், அகத்தியரை போட்டிக்கு அழைக்க, அவர் தமது இசைத்திறனால் விந்திய மலையை உருகவைத்த கதையைப் படித்திருப்போம். இந்தப் போட்டியில் ராவணன் தோல்வியுற்றாலும், அகத்தியரின் பரிபூரண ஆசி கிடைத்தது அவனுக்கு. இப்படி, தவசீலர்களை வணங்கி அவர்களின் ஆசியால் தெய்வ நிலை பெற்ற ராவணன், தனது வீணையில் இருந்து பல மந்திர ஒலிகளை விடுவித்தான். அவற்றில் இருந்து ராவண கட்க மூலமந்திரத்தை அகத்தியர் உருவாக்கியதாக ஞானநூல்கள் கூறும்.

இந்த மந்திரத்தை ஜபித்து வழிபடுவதால் ஆயுத பயம், ஆயுள் பற்றிய பயம், போர் அச்சம், மறைமுக எதிரிகள், உறவுகளில் ஏற்படும் எதிரிகள் ஆகியோரின் தொல்லைகள் நீங்கி, நன்மை உண்டாகும். பண்டைக்கால மன்னர்கள் பலரும் பகை வெல்லவும், விரோதிகளிடமும் அனுகூலம் பெற்றிடவும் இந்த மந்திரத்தை ஜபித்துப் பலனடைந்ததாகத் தகவல்கள் உண்டு.

**ராவண கட்க பிரயோகம் விதி...**

தாமிரத் தகடு ஒன்றில், படத்தில் காட்டியபடி ராவண கட்க முறையை வரைந்துகொள்ள வேண்டும். அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, ஈருள்ளி, வெள்ளுள்ளி ஆகியவற்றை அரைத்துத் தடவி, சந்தன- குங்குமத் திலகம் இட்டு, பூச்சூட்டி, மணைப் பலகையில் வைக்கவேண்டும்.

அடுத்ததாக, நான்கு செங்கற்களால் சதுர வடிவில் யாக பீடம் அமைத்து, சிறிது மணலை நடுவில் பரப்பிக்கொள்ளுங்கள். அதில் அரசங்குச்சிகள் [இரண்டு கைப்பிடி அளவு] வைத்து, கற்பூரம் ஏற்றி, அக்னி வளர்க்கவேண்டும். அதில் நெய் ஊற்றி, தேனில் நனைத்த தாமரை, உப்பு நீரில் நனைத்த

கொள்ளு, துளசி, வெற்றிலை, வில்வம், புரசு சமித்து 108, யாகக் கூட்டுப் பொருட்கள் ஆகியவற்றை இட்டு எளிய முறையில் யக்ஞம் நடத்தி, ராவண கட்க மூல மந்திரத்தைச் சொல்ல வேண்டும்.

தொடர்ந்து தூப- தீப நிவேதனம் சமர்ப்பித்து ஆரத்தி செய்த பின்னர், யாக ரட்சையை எடுத்துத் திலகம் வைத்துக்கொள்ளலாம். மறுநாள் முதல், தொடர்ந்து 60 நாட்கள் காலையில் நெய் தீபம் ஏற்றி வைத்து, இந்த மந்திரத்தை 108 முறை ஜபித்துவர வேண்டும்.

**ராவண கட்க பூஜை – ஜபமுறை…**

மேற்கு முகமாக மணைப் பலகையில் அமர்ந்து கீழ்க்காணும் மந்திரம் ஜபித்து வழிபட வேண்டும்.

ஓம் அஸ்யஸ்ரீ ராவண கட்க மகா மந்த்ரஸ்ய [நெற்றியில் தொடவும்]
பின்னர் [மூக்கில் தொட்டுக்கொண்டு…]
அகஸ்த்யோ பகவான் ருஷி: அனுஷ்டுப் சந்த:
ஸ்ரீராவண தேவதா: ஐம் பீஜம் ஹ்ரீம் சக்தி: பட் கீலகம்
(இதயத்தில் தொட்டு]
ஸ்ரீமகா ராவண க்ருபா ப்ரஸாதேன மம ஜென்ம சத்ரு
நாசன ப்ரயோக ஜபே விநியோக:
(கை கூப்பிக் கொண்டு]
ஓம் வீடன சோதராய நம:
ஓம் லங்கா ராஜ்யப்ரியாய நம:
ஓம் வீணா நாதப்ரியாய நம:
ஓம் சிவபக்தாய நம:
ஓம் தண்ட ஹஸ்தாய நம:

என ஜபிக்கவும். தொடர்ந்து, கீழ்க்காணும் காயத்ரீ மந்திரத்தை 11 முறை கூறவும்.

ஓம் பூதேசாய வித்மஹே கட்க
ஹஸ்தாய தீமஹி
தந்தோ ராவண ப்ரசோதயாத்

**மூலமந்திரம்:**

‘ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஓம் ஹ்ரீம்
க்லீம் கம் பூதேச ஹ்ரீம்
ஹ்ராம் கட்க ராவணாய ஸ்வாஹா’

**சக்தி வாய்ந்த இந்த மந்திரத்தை ஜபித்து வர, எதிரிகளும் நண்பர்களாவார்கள். வாழ்க்கையில் மகிழ்ச்சி நிறையும்.**